# கல்கி

KALKI 15.10.2000

ரூ. 5.00


## "உருவம் இரண்டு; உணர்வு ஒன்றுதான்!"



மராத்தியருக்கு ஒரு கணபதி விழா அகப்பட்டது போல், குஜராத்தியரிடம் இந்த நவராத்திரி விழா மாட்டிக் கொண்டு தவிக்கிறது. எதை வைத்து எப்படிச் சம்பாதிக்கலாம் என்ற ஆசை யாரை விட்டது?... அதுவும் மும்பையில்? இந்த அரசி

• ஃபால்குனி பதக்

நவராத்திரி வழியில்தான் பி.ஜே.பி. எம்.எல்.ஏவானார். மும்பை நவராத்திரிகளில் பி.ஜே.பி. பிரதானம் என்றால், தானா கல்யாண் பகுதிகளில் சிவசேனை ஆட்டம் போடுகிறது. இவர்களைப் பார்த்துவிட்டு, காங்கிரஸாருக்கு ஆசை வராமலிருக்குமா? முலுண்ட் பகுதியில் கோவிந்த் சிங், சென்ற நவராத்திரிக்குப் பணத்தைத்

• வெற்றி தேடித்தந்த ஆடை-பேபி தருண்

யல்வாதிகளை எடுத்துக் கொள்ளுங்களேன்; ஒன்பது இரவுகளில் இவர்கள் ஆட்சியையே பிடிக்கக் கோட்டை கட்டுவார்கள். கிரீட் சோமையாவை முன்பெல்லாம் யாருக்குத் தெரியும்? அவர் குடியிருக்கும் முலுண்டு நீலம் நகர் பகுதியில் இவ்விழாவை விஸ்தாரமாகக் கொண்டாட ஆரம்பித்தார். அத்வானியையும், முண்டேவையும், ஷத்ருகன் சின்ஹாவையும் அழைத்து கோலாட்டம் போட வைத்தார்; அவ்வளவுதான்... முதலில் கார்ப்பொரேட்டர் ஆனார்... மும்பையிலுள்ள நவராத்திரி மண்டல்களை எல்லாம் ஒரு குடையின் கீழ் இணைத்தார்...

# நவயுக ராத்திரிகள்!

பிறகு பி.ஜே.பி. நகரத் தலைவரானார். இரவு 11 மணிக்கு மேல் லவுட் ஸ்பீக்கர் கூடாது. ஆட்டபாட்டமெல்லம் அடங்க வேண்டும் என்ற சட்ட விஷயத்தில், குஜராத்தியருக்காக மன்றாடி... கால நீட்டிப்பு வாங்கித் தந்தார்...படிப்படியாக முன்னேறி இன்று பி.ஜே.பி. எம்.பி. ஆகிவிட்டார். கேத்வாடியைச் சேர்ந்த அதுல்ஷாவும்,



தண்ணீராக வாரி விட்டார். ஆனால் இம்முறை பை-எலக்ஷன் அவரைக் காலைவாரி விட்டது. அதனாலென்ன? சரியாக ஆடக் கற்றிருக்க மாட்டார்.

வருடா வருடம் நவ ராத்திரி விழா வருவது போல்தான், தேர்தல்களும் வந்து கொண்டிருக்கின்றனவே? அடுத்த முறை சரியாக ஆடி விட்டால் போயிற்று!

**வி**ழா அமைப்பாளர்களைப் பாருங்கள். ஒரு காலத்தில்... ஏன் சில காலம் முன்பு வரை கூட, அவரவர் வசிக்கும் சொஸைட்டிகளில், தேவியின் படத்தை வைத்து, விளக்கேற்றி, ஆரத்தி சுற்றி, ஆண்களும் பெண்களும் வட்டமாகச் சுற்றி வந்து, பாடிக் கொண்டே கும்மி கோலாட்டம் போடுவதுதான் பிரதானமாக இருந்து வந்தது. செலவும் சில நூறுகளுக்குள் அடங்கி விடும். இங்கே முடித்துவிட்டு, பெரும் வீதிகளில் நடத்தப்படும் பொது விழாவில் எல்லோரும் சென்று கலந்து கொள்வர். 'டோல்' வாசிப்பதற்கு குஜராத்திலிருந்து வாத்தியக்காரர்கள் வரவழைக்கப்படுவர். இங்கேயும் விளம்பரங்கள் மூலம் கிடைக்கும் வருவாய், ஆயிரங்களில் அடங்கிவிட்ட செலவை சரிக்கட்டிவிடும்.

ஆனால் இப்போதெல்லாம் சொஸைட்டி விழாக்களே நின்று விட்டன. சார்வஜனிக் விழா அமைப்பாளர்களும், ஐம்பது லட்சங்களிலிருந்து, இரண்டு கோடிவரை செலவழிக்கிறார்கள். சிறந்த ஆட்டக்காரார், சிறந்த ஆடை உடுத்தி வருபவர், என்று என்னென்னவோ போட்டிகள். பரிசும் முன்பு போல, ஆயிரம் ரூபாய் கிஃப்ட் செக்கோ, மிக்ஸியோ, குக்கரோ இல்லை; எல்லாம் தங்கச் செயின், வைர நெக்லஸ், ஸ்கூட்டர், கார், வெளி நாட்டு ட்ரிப் என்று 'படா' பட்ஜெட்தான்!

போதாக்குறைக்கு, பாலிவுட்டிலிருந்தும் டெலிவுட்டிலிருந்தும் சின்ன பெரிய ஸ்டார்கள் விழாவில் தலை நீட்டி, கொஞ்சம் கையைக் காலை அசைத்து, பரிசைத் தங்கள் கையால் கொடுத்துவிட்டு, எக்கச்சக்கமாக வாங்கிக் கொண்டு செல்வார்கள். இப்போதெல்லாம் இருபது பெரிய 'ராஸ் கர்ப்பா'க்களும் நானூறு சிறிய விழாக்களும் மும்பையில் நவராத்திரியை ஒட்டி நடைபெறுகின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! எவ்வளவு பணப் புழக்கம் என்பதை!

பொதுமக்களும்தான் என்னமாக மாறிவிட்டார்கள்? இந்த விழாவுக்கென்றே தினமும் ஒரு ட்ரெஸ் வாங்குபவர்கள் ஏராளம்; அதுவும் இரண்டாயிரம் ரூபாயில் துவங்கி இருபதாயிரம் ரூபாய் வரை செல்லும் ஸ்பெஷல் டிசைனர் ட்ரெஸ்ஸுகள். ட்ரெஸ்ஸுக்காகவே பரிசு-குழந்தைகளுக்குத் தனி, பெரியவர்களுக்குத் தனி- என்றிருப்பதால், ஜிலு ஜிலுவென மினுக்குவதில் போட்டா போட்டிதான்.

புராதன முறையில் யாரும் ஆடுவதேயில்லை; எல்லோரும் ஆயிரம், ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வரை விற்கும் சீஸன் பாஸ்களை வாங்கி வைத்துக் கொண்டு, பொதுவிடங்களில் டிஸ்கோ டாண்டியா ஆடச் சென்று விடுகின்றனர். தலேர் மெஹந்தியின் 'டாண்டியா பாப்'புக்கும், ப்ரீத்தி-பிங்கியின் டாண்டியா டுயட்டுக்கும் ஏக கிராக்கி என்றால், ஃபால்குனி பதக்கின் 'ராஸ் கர்பா'வுக்குத் தனி மவுசே!

இம்முறை எம்.டி.வி.அவார்டெல்லாம் வேறு வாங்கி விட்டாரா, கூட்டம் அலைமோதுகிறது. வளையல், கொலுசு, தாவணி, மருதாணி என்று இவர் படங்களெல்லாம் பெண்மை வாடையடிக்க, இவர் மட்டும் பாண்ட் ஷர்ட்டில், தலையை 'பாப்' செய்து கொண்டு, ஆண்பிள்ளை போல் துள்ளிக் கொண்டே பாடுவது, விசித்திர காம்பினேஷன்!

இங்கே ஆட வரும் பெண்கள் சிலர் மிக முன்னேறியவர்கள்! லாக்கரில் தூங்கிய நகைகளை எல்லாம் எடுத்து மாட்டிக் கொண்டு, அதற்குப் பதிலாக அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, பயம், பக்தி போன்றவற்றை வைத்து பத்திரமாகப் பூட்டிவிட்டு வந்துவிடுவார்கள். இவர்கள் புண்ணியத்தில், நிறைய புதுக் காதல்கள் மலர்கின்றன; பல ஜோடிகளின் திருமணங்கள் நிச்சயிக்கப்படுகின்றன.

ஆட்டம் நடக்கும் இடம் வேறு வேடிக்கையாய் இருக்கும்; ஏதோ கண்காட்சி நடப்பது போல் ஒரே போஸ்டர் மயம், கடைகள் மயம்தான்! ஆடிக் களைத்து, வடாபாவ் சாப்பிட்டு, கோக் குடித்து, மறுபடியும் ஆடுவார்கள்... விடிய விடிய...

சில மண்டபங்களில், 'அம்பே மாதா'வுக்கு இருபுறமும் சில 'பலே ஆசாமி'களின் படங்களிருக்கும்- ச்சீச்சீ! மஹிஷனுக்குப் பதிலாக அல்ல- இந்த மஹிஷாசுரர்களின் ஸ்பான்சர்ஷிப்பில் தானே ஒன்பது ராத்திரிகளும் தூள் பறக்கின்றன.

**— ஜெயஸ்ரீ ராஜ்**

# "தலைவரு பேசப் போறாரு!"

**அக்டோபர் ஒன்று, இரண்டு தேதிகளில் புதிய தமிழகம் கட்சியின் இரண்டாவது மாநில மாநாடு திருச்சியில் நடைபெற்றது. அதில் சில துளிகள்:**

● மதியம் ஒரு மணியிலிருந்து நகருக்குள் பேருந்து வழித்தடங்கள் முற்றிலுமாக துண்டிக்கப்பட்டு பொது மக்கள் குறிப்பாக வெளியூர்ப் பயணிகள் அனைவரும் கால்நடையாகவே நடந்து சென்ற வண்ணமிருந்தனர். (இவர்களுடையதே ஒரு மாபெரும் ஊர்வலம் போலத்தான் இருந்தது!)

● சிந்தாமணி அண்ணாசிலையிலிருந்து மாநகரின் முக்கிய சாலைகள் வழியாக கொட்டப்பட்டு மாநாட்டுத் திடலை (விமான நிலையம் அருகே) அடைவதற்கு, பேரணியில் நடந்து வந்தவர்கள் கடந்த தூரம் பன்னிரண்டு கிலோ மீட்டர். (அடேங்கப்பா!)

● முறையான பயிற்சியும், சரியான வழிகாட்டுதலும் இல்லாததால், கொஞ்சம் பிரும்மாண்டமாகத் தெரிந்திருக்க வேண்டிய பேரணி, ஏதோவொரு பெருங்கூட்டம் மாநாட்டுத் திடலை நோக்கி விரைந்து செல்வது போலிருந்தது.

● இரண்டாம் நாள் காலையில் கட்சியின் பொதுக்குழு, செயற்குழு கூடியது. தேர்தல் நேரத்தில் யாருடன் கூட்டு சேர்வது என்பது குறித்து முடிவெடுக்க கட்சியின் தலைவருக்கு முழு அதிகாரம் வழங்குவது உட்பட அறுபது தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.



● மாநாட்டுப் பந்தல் விமான நிலையத்திற்கு அருகே இருந்ததால் உணர்ச்சிகரமான சில தொண்டர்களால் திடீரென ஒரு பரபரப்பு சம்பவமும் அரங்கேற்றமானது. அக்டோபர் இரண்டாம் தேதி மதியம் 1.15க்கு ஏர் லங்கா விமானம் ஒன்று செம்பட்டு விமான நிலைய தளத்தில் தரையிறங்கிக் கொண்டிருந்த நேரம் அது. அருகே சென்று அதனைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலில் தொண்டர்கள் கும்பலாக விமானத்தை நோக்கித் தடைகளைக் கடந்து ஓட ஆரம்பித்து விட்டார்கள். ஒரு நிமிடம் ஷாக் ஆகி நின்ற காவல் துறையினர் பிறகு சுதாரித்து வேகமாய்ப் பாய்ந்து சென்று அவர்களை மடக்கி நிறுத்தி வெளியேற்றி வைத்தனர். (அப்பாடா!)

● மாலை ஐந்து மணிக்குக் கட்சியின் தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமி சிறப்புரையாற்றுவதாக அறிவிப்பு.

● மிகப் பெரிய மாநாட்டுப் பந்தலில் தொண்டர்களின் கூட்டம் கால் சதவீதப் பரப்பளவில் மட்டுமே அமர்ந்திருக்க, விமான நிலைய சுற்றுச் சுவர்களுக்கு வெளியே சாலையின் இருபுறங்களிலும் வேன்களின் மீது ஏறி நின்று அப்பொழுது கிளம்பத் தயாராய் இருந்த விமானம் ஒன்றினை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தனர் எல்லோரும்!

● பொறுத்துப் பார்த்த மாநாட்டுக் குழுவினர் ஒரு வேனில் மைக்கில் ஒரு முக்கிய அறிவிப்புச் செய்து கொண்டு அந்தப் பகுதியை வட்டமடித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் செய்த அறிவிப்பு இதுதான்: "நம்ம தலைவர் இப்போ பேசப் போறாரு. மாநாட்டுப் பந்தல்ல கூட்டமே இல்லே. எல்லாம் எங்கடான்னு பாத்தா... இங்க நின்னு வேடிக்கை பாத்துட்டு இருக்கிங்க. எல்லாரும் கீழே இறங்கி மாநாட்டுப் பந்தலுக்கு வந்து சேருங்க. என்னமோ வெள்ளக் காக்காப் பறக்கப் போறத அதிசயமாப் பாக்குறாப்புல பாத்துட்டு இருக்கிங்களே!"

● மேலெழுந்து வானில் விமானம் வட்டமடித்துப் பறந்த பிறகே மாநாட்டுப் பந்தலுக்குத் திரும்பினர் தொண்டர்கள்!

**— திருநாவு**

# சிட்னி-2000

## சில நினைவுக் குறிப்புகள்

எழுபது டிக்கட்டுகள் எடுத்தோம்
'பயணம்' செய்ததோ ஒருவர்!
- சிட்னி 2000 சிறப்புச் செய்தி.

உலகிலேயே
கழுத்துள்ள நாடு இந்தியாதான்.
ஆயினும்
தாலிக்குக் கூடத் தங்கமில்லை!

அணிந்து கொண்டிருப்பதில்
கணக்கெடுத்தால்
அதிக தங்கம் உள்ள நாடு
இந்தியா
பதக்கத்திற்கு மட்டும்தான்
பஞ்சம்!

இந்தியாவைப் பொறுத்தவரை
ஐந்து வளையங்களும்
தொங்கிக் கொண்டிருக்கும்
தூக்குக் கயிறுகளோ?

சம்யுக்தாவைக்
குதிரையிலேயே கொண்டு சென்ற நம்
பிதூர் அல்லவா
பிருதிவிராஜன்?
இன்று -
குழிபறித்ததே குதிரை!

வில்லை முறித்துச்
சீதையை மணந்தானாம்
கோதண்டராமன்!
இன்று -
பதக்கச் சீதையின்
பார்வை விழவில்லையே!

சிட்னி மைதானத்தில் வீரர்கள்
தங்கள் குழந்தைகள் விளையாடத்
தங்கப் பதக்கங்கள் தந்து மகிழ்ந்தனர்!
எம் நாட்டிலிருந்தோ...
வீரர்கள் குழந்தைகளாய்
விளையாடினர்!

போருக்குச் செல்லாமலேயே
'வீரர்கள்' என்ற பெயர்
வேறு யாருக்கு வாய்த்தது?

எரிமலையின் துவாரங்களல்லவா .
விளையாட்டு வீரர்கள்!

இந்திய வீரர்களோ -
தண்ணீருக்குள் கிழித்த
தீக்குச்சிகளாய்...

புத்தாயிரம் 2000 - இல்
நூறு கோடி என்று
பெருமிதம் கொண்டோம்
இதில்
உயிர் வாழும் நபர்
ஒருவர் மட்டுமா?

மல்லேஸ்வரி தூக்கிய பளுவில்
இருபுறம் இருந்தவை
இரும்புச் சக்கரங்களும்
இந்திய மானமும்.

அரசாங்கத்தால்
ஆணை உருவாகலாம்
கிராமங்களுக்குள் கிடக்கிற கற்களில்
எந்தக்கல் 'சிக்கிமுக்கியோ'
உரசிப் பார்த்தால் 'ஒலிம்பிக் ஜோதி'.
உதாரணம் : மல்லேஸ்வரி

ஒற்றை வெண்கல நாணயத்தை
உள்ளே போட்டுக் கொடுத்திருக்கும்
உண்டியலை
ஏதென்ஸில் குலுக்கிப் பார்ப்போம்
எத்தனை சேர்ந்திருக்கிறதென்று.

நா. வே. அருள்

✉ அரசியல் நோக்கைக் கடந்து ஒருவரை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்வது பல புதிய முன்னேற்றக் கதவுகள் திறக்க வழி வகுக்கும் என்று நீங்கள் தலையங்கத்தில் குறிப்பிட்டிருப்பது மிகவும் சரிதான். ஆனால் அந்த அளவுக்கு நம் அரசியல்வாதிகளுக்கு மன முதிர்ச்சி ஏற்படவில்லை என்பதுதான் நிதர்சனமான உண்மை.

**மதுரை, என். பாலகிருஷ்ணன்**

✉ காந்தியின் பெயருக்குக் களங்கம் ஏற்படாவண்ணம் அண்ணலின் பிறந்த நாளில் புத்தாடை அணிந்து மகிழும் காந்தி கிராம மக்களின் செயல்களை கல்கியில் படித்த பின்னர் காந்தி கிராம மண்ணை மிதித்து விட்டு வந்து விட வேண்டும் என எண்ணம் ஏற்பட்டது.

**சென்னை, சி. மகேஷ்**

✉ 2000 கோடி மோசடி பற்றி கோபாலன் எழுதிய கட்டுரையில் மோசடி செய்தவர்களின் பெயரை மட்டும் விட்டு விட்டீர்களே? ரொம்ப புத்திசாலித்தனம் என்று நினைப்பா?

**சென்னை, சித. வைரவன்**

✉ 'நெகட்டிவ்' சூழ்நிலைகளால் மனத்தைத் தளர விடா

# மறக்கமாட்டோம் சாமி!




மல் ஊக்கமும் முயற்சி செய்தால் முன்னேற்றமும் - வெற்றியும் நிச்சயம் என்கிற பாசிட்டிவ் அப்ரோச்சை முப்பது வயது மெக்கானிக் இளைஞன் கேரக்டர் மூலம் அழகாக விளக்கி, அருமையாக முடித்திருந்த பானுகுமாரின் 'உன்னை அறிந்தால்' சிறுகதை மனத்தைத் தொட்டது!

**ஈரோடு, எஸ்.ரஜினிப்பிரியன்**

✉ அரசியல்வாதியின் சத்தியத்துக்கும், நடிகைகளின் நம்பகமானப் பேட்டிக்கும் ஆயுசு ரொம்பக் கம்மி என்பது புதுவை அமைச்சர் கண்ணனுக்கு வேண்டுமானால் மறந்திருக்கலாம். சத்தியமாக நாங்க மறக்க மாட்டோம் சாமி!

**புதூர், கே.சண்முகம்**

✉ 'பா.ம.க. பிடிவாதத்தால் பரவிய தீ' கட்டுரை கண்கலங்கச் செய்தது. வன்முறையைக் கையிலெடுத்தவன் வன்முறையாலேயேதான் அழிவான் என்பதை இந்த அரசியல்வாதிகள் என்று உணர்கிறார்களோ அன்றுதான் நம்நாட்டுக்கு விமோசனம்!"

**மதுரை, எம்.வள்ளி**

✉ கலைஞருக்குக் கடிதம் கொடுத்தத் தேவதை கட்டுரை அந்த வியப்பூட்டும் நிகழ்ச்சியை நேரில் பார்த்த பிரமிப்பை ஏற்படுத்திவிட்டது!

**அயன்புரம்,**
**த.சத்தியநாராயணன்**

✉ பெரிய காட்டுப்பாளையத்தில் பா.ம.க.வினரின் வன்முறையால் ஏற்பட்ட சோகங்களை உமது நிருபர் அட்சரம் பிசகாமல் நேரடி ரிப்போர்ட்டில் தந்திருந்தார். பெருமாளின் குடும்பத்தை நினைத்தால், வன்முறையாளர்கள் மீது கட்டுக்கடங்காத கோபம் வருகிறது. இப்படிப்பட்ட தொண்டர்கள் நிரம்பிய அக்கட்சி எப்போதும் மக்கள் ஆதரவை பெற முடியாது. இப்பொழுதெல்லாம் நல்ல விஷயத்திற்கு உதாரணம் காட்டுவதற்கு அரசியல் தலைவர்கள் இருப்பதில்லை. இந்த அரசியல் போக்கு ஜனநாயகத்திற்கு விரோதமானது! கண்டிக்கத்தக்கது!

**மொரட்டுப்பாளையம்,**
**க.நா.இரேஜேஸ்வரன்**

✉ திரைக்கதை, காட்சி விளக்கத்தோடு புத்தகமாய் வந்து மூன்று ஆண்டுகள் கழிந்த பின்பே திரையில் இந்த 'பூக்கள்' (கருவேலம் பூக்கள்) மலர நேரம் வாய்த்திருப்பது, யதார்த்த சினிமாவை நாம் இன்னும் முழுமையாக அங்கீகரிக்கவில்லை என்பதையே காட்டுகிறது!"

**பொன்மலை, ஆர்.பிரகாஷ்**

✉ பாரம்பரியமான முறையில் மரபுக்கு மீறாமல் பரதம் ஆடுபவரும் அதே சமயம் சமுதாயம் பயன் பெறும் வகையில் பொதுச் சேவை அமைப்பை நடத்திக் கொண்டிருக்கும், டாக்டர் ஸ்ரீநிதி 'ஒரு புதுமைப் பெண்'

**சென்னை, கே.வி.ராமன்**

# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

**உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்**

## டெபாசிட் திரட்டும் முகாம்

## மும்பை

**பம்பாய் ஆர்ய வைஷ்ய சங்கம் ஹால்,**
**கன்யகா பரமேஸ்வரி கோயில் வளாகம்**
**403, வாசவி நிலையம், டெலாங் சாலை,**
**மாதுங்கா, மும்பை - 400 019.**
**தொலைபேசி: 4021709**

**நாள் : 11 முதல் 13 அக்டோபர், 2000 வரை**

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

# 12.12%

12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.50%.
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%
36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு வட்டி 12.00%,
காலாண்டிற்கு வட்டி 12.12%.

# 16.34%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)



**விண்ணப்பப் படிவங்கள் கீழ்கண்ட கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும் :**

● **பாண்டிச்சேரி** : 28, ஜவஹர்லால் நேரு தெரு. ● **பெங்களூர்** : 109, காந்தி பஜார், பசவங்குடி; 315, கே. காமராஜ் ரோடு; ஹோட்டல் மயூரா பில்டிங், டேங்க் பண்டு ரோடு; 30, 9வது மெயின் ரோடு, ஜெயநகர் V பிளாக், ராஜாஜி நகர்; 2947, ராஜாஜி நகர் II ஸ்டேஜ். ● **மும்பை** : மகாலக்ஷ்மி, 64, டாக்டர் டிஎன். ரோடு; 78, ஹீராபாக், M.D.S. மார்க், செம்பூர்; 356, பந்தர்கேஷ் ரோடு, மாதுங்கா; 2, வால்சந்த் ஹீராசந்த் மார்க், ஃபோர்ட். ● **அகமதாபாத்** : பஞ்சாரபோல், அம்பாவாடி. ● **எர்ணாகுளம்** : பள்ளிமுக்கு; சண்முகம் ரோடு. ● **திருவனந்தபுரம்** : கிழக்கு ஃபோர்ட், M.G. ரோடு. ● **ஹைதராபாத்** : அபிட்ஸ் ரோடு; சார்மினார் X ரோடு; நாம்பள்ளி. ● **செகந்திராபாத்** : ஸ்டேஷன் ரோடு. ● **புது தில்லி** : கரோல்பாக்; இர்வின் ரோடு; நேரு பிளேஸ்; ஜனக்புரி; 22-பி, கான் மார்க்கெட்.




*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்**
**அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**
(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)
பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648, ஃபேக்ஸ் : 044-4982894.

30-9-2000 தேதியிட்ட ஏனையபிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com



வில்லி பச்னர், வியன்னா நாட்டைச் சேர்ந்த புகைப்படக்காரர்; பத்திரிகையாளர்; குழந்தை எழுத்தாளர்.

வில்லியின் பொழுதுபோக்கு பல்வேறு உலக நாடுகளுக்கும் பயணம் செய்வது. தான் மட்டுமின்றி கூடவே ஜோ, சாலி என்று இருவரையும் அழைத்துச் செல்கிறார். இவர் எந்த நாட்டுக்குப் போய் இறங்கினாலும், விமான நிலைய அதிகாரிகளும், சக பயணிகளும், 'ஜோ'வையும் 'சாலி'யையும் வைத்தக் கண் எடுக்காமல் பார்ப்பார்கள். காரணம்: இருவரும் மனிதர்கள் இல்லை; பெங்குவின்கள்!

பெங்குவின்களை அழைத்துக் கொண்டு பல்வேறு நாடுகளுக்கும் செல்வது கஷ்டமாக

# பெங்குவின்களோடு

இல்லையா? என்றால், "அத்தனை சுலபமான விஷயமில்லைதான். ஆனாலும் அதில் ஒரு தனி த்ரில் இருக்கிறது. ஒவ்வொரு கண நேரத்தையும் நான் பரிபூரணமாக அனுபவிக்கிறேன். எனக்கு ஏற்பட்ட அனுபவங்களைப் போல, வேறு ஒருவருக்கு ஏற்பட்டிருக்குமா? என்பது சந்தேகம்தான்" என்கிறார் வில்லி பச்னர்.

பைசா நகரத்து சாய்ந்த கோபுரம், எகிப்து பிரமிடுகள், பாரிஸ் சிற்பக்கூடம், நியூயார்க், தாய்லாந்து என்று உலகின் பல்வேறு டூரிஸ்ட் ஸ்தலங்களிலும், கழுத்தில் கேமரா தொங்கும் ஜோவுக்கு ஜோடியாக சாலி நிற்கிறபோது, வாய்பிளந்து அதிசயிக்காதவரில்லை. ஜோவின் உயரம் நாற்பத்து ஐந்து அங்குலம், எடை பன்னிரண்டு பவுண்டு. சாலியின் உயரம் நாற்பத்து மூன்று அங்குலம், எடை பதினோரு பவுண்டு. ஜோவும், சாலியும் இதுவரை வில்லி பச்னருடன் சுமார் ஒன்னரை லட்சம் கிலோ மீட்டர் தூரம் பயணம் செய்தாகிவிட்டது.

பெங்குவின்கள் சகிதம் ஒரு மனிதர் எதற்காக உலகப் பயணம் செய்ய வேண்டும் என்று ஒவ்வொரு நாட்டு விமான நிலையத்திலும் கஸ்டம்ஸ் அதிகாரிகளின் மனத்தில் சந்தேகக் கேள்வி எழாமல் இல்லை. வில்லியை விட்டு விட்டு, இரண்டு பெங்குவின்களையும் அணு அணுவாகச் சோதனை போட்ட பின்னரே, பயணம் தொடருவதற்கு அனுமதி கிடைத்தது. ஒரு சமயம் ஒருவரையடுத்து ஒருவராக முப்பது அதிகாரிகள் ஐந்து மணி நேரம் கடுமையான சோதனைகள் செய்து கடத்தல் கிடத்தல் எதுவுமில்லை என்று திருப்தியடைந்த பின்னரே,





# ஒரு உலக டூர்!

அனுமதி அளித்தனராம்.

பெரும்பாலும் சாலை வழியாகவோ, நடந்தோ ஊர் சுற்றினாலும், பல்வேறு தருணங்களிலும் விமானப் பயணம் தவிர்க்க முடியாதது. அந்த சமயங்களில் வில்லி பச்னர் விமானத்தில் பயணிகள் பகுதியில் அமர்ந்து பயணம் செய்ய, ஜோவும் சாலியும் விமானத்தின் சரக்குப் பகுதியில் பிரத்யேகமான முறையில் வடிவமைக்கப்பட்ட பெட்டிகளில் உடன் வந்தன.

பிரான்ஸ் நாட்டுக்குப் போயிருந்தபோது, மோசமான வானிலை காரணமாக கீழே விழுந்ததில் ஜோவின் மூக்கில் இலேசாய் அடிபட்டு விட, வில்லி துடித்துப் போய்விட்டார். இன்னொரு சமயம் சாலியின் நகங்களில் தீட்டப்பட்டிருந்த 'நெயில் பாலிஷ்' உதிர்ந்து விட்டதால், அதற்கு நெயில் பாலிஷ் வாங்க அலைந்த அலைச்சலும் மறக்க முடியாத அனுபவம் என்கிறார்.

"டூரிஸ்ட் ஸ்தலங்களில் இரண்டு பெங்குவின்களைக் கண்டதும், கூட நின்று போட்டோ எடுத்துக் கொண்டவர்கள் அதிகம். சிலர் கண்டிப்பாக தங்கள் வீட்டுக்கு வர வேண்டும் என்று அழைப்பார்கள். வீட்டுக்குப் போகிறபோது அக்கம் பக்கம் என பலரும் பெங்குவின்களைக் காணத் திரண்டிருப்பார்கள். நியூயார்க் நகரத்து பல அடுக்கு மாடிக் கட்டடம் ஒன்றின் லிஃப்டில் சென்று, இருபதாவது மாடியில், லிப்டின் கதவு திறந்து வெளியேறிய போது அங்கே கூடியிருந்தவர்கள் ஆச்சரியத்தில் போட்ட கூச்சல் மறக்கவே முடியாது" என்கிறார்.

அன்டார்டிகா பகுதியில் பணிபுரிந்து கொண்டிருக்கும் ஒருவரது மனைவி, திடீரென்று ரோட்டில் தமக்கு எதிரே இரண்டு பெங்குவின்களைப் பார்த்த நிமிடம் உணர்ச்சி வசப்பட்டு, 'என் கணவரையே நேரில் பார்ப்பதுபோல உணர்கிறேன்' என்றாராம்!

பெங்குவின்களுடனான உலகப் பயணத்தின் போது எடுக்கப்பட்ட புகைப்படங்களும் அனுபவங்களும் அடங்கிய வில்லி பச்னரின் புத்தகங்களுக்கு ஏக டிமாண்டு.

இதெல்லாம் சரி! பெங்குவின்கள் மிகவும் குளிரான பனிப்பகுதியில் வசிக்கும் உயிரினங்களாயிற்றே! அவை எப்படி உலகப் பயணம் செய்வது சாத்தியம் என்ற நியாயமான கேள்வி உங்கள் மனத்தில் எழக் கூடும்.

காதை கிட்டே கொண்டு வாருங்கள். ஜோவும், சாலியும் நிஜமான பெங்குவின்கள் இல்லை; பாலியஸ்டர் பிளாஸ்டிக்கினால் செய்யப்பட்ட பொம்மைகள்!

ஒரு ஓர்க் ஷாப்பின் மூலையில் இரண்டு பெங்குவின் பொம்மைகளைப் பார்த்தபோது, அவற்றை ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது வில்லி பச்னருக்கு! உடனே வாங்கிக் கொண்டு வந்துவிட்டார். இவற்றை வைத்துக் கொண்டு என்ன செய்வது? என்று யோசித்த போது, பல்வேறு நாடுகளுக்கும் இந்த (உயிரில்லா) ஜோடியுடன் போய்வந்தால் புது அனுபவமாக இருக்கும் என்று தோன்றியது. செயல்படுத்திவிட்டார்!

நன்றி: **ஜெட்விங்ஸ்**
கட்டுரை: **மௌலி**





மும்பை ப்ரீச் கேண்டி மருத்துவமனையில் பிரதமர் வாஜ்பாய்க்கு முழங்கால் ஆபரேஷன் நடப்பதுதான் மும்பையில் இப்போது பரபரப்பு.

இதற்காக மருத்துவமனையின் ஏழாவது மாடி முழுக்கக் காலி செய்யப்பட்டு, பிரதமரின் நெருங்கிய உறவினர்கள், பாதுகாப்பாளர்கள், பிரதமர் அலுவலக முக்கிய ஊழியர்கள் தங்க வைக்கப்பட்டு இருக்கிறார்கள். மருத்துவமனையில் வேலை செய்கிற அத்தனை பேருக்கும் அடையாள அட்டைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

"மருத்துவமனைக்கு வரும் விஸிட்டர்கள் சில கட்டுப்பாடுகளைச் சந்திக்க நேரிடும். ஆனால் பிரதமரும் அவரது ஆட்களும் ஏழாவது தளத்துக்கு நேரடியாகச் செல்ல, தனி வழி அமைத்திருக்கிறோம். அதனால் மற்ற நோயாளிகளுக்கோ அவர்களைப் பார்க்க வருகிறவர்களுக்கோ எந்தத் தொந்தரவும் இருக்காது" என்கிறார் ப்ரீச் கேண்டி மருத்துவமனை இயக்குநர் டாக்டர் அசோக் பாத்கண்டே. ஏழாவது மாடி நோயாளிகளை, மூன்றாம் தளத்துக்கு மாற்றிவிட்டனர்.

பிரதமருக்கான உணவும், மருத்துவமனையிலேயே தயாரிக்கப்படுமாம்.

• டாக்டர் ஹரீஷ்

கடற்கரையை ஒட்டி மருத்துவமனை இருப்பதால், போலீஸ் ரோந்துப் படகுகளும், கண்காணிப்புப் போட்டுகளும் செக்யூரிடியில் தவிர்க்க முடியாதவை ஆகிவிட்டன.



• வாஜ்பாய்

பிரதமருக்கு ஆபரேஷன் செய்யப் போகும் இந்திய டாக்டர் சித்தரஞ்சன் ரணாவத்துக்கு உதவியாக டாக்டர் நந்துலாட், டாக்டர் ஹரீஷ் பெண்டே, டாக்டர் எஸ்.எஸ். உட்வாடியா ஆகிய மூவரும் இருக்கிறார்கள். பிரதமரின் தனி மருத்துவர், தில்லியைச் சேர்ந்த டாக்டர் சுபாஷ் மான்சந்தாவும் உடன் இருக்கிறார்.

பிரதமருக்கு ஆபரேஷனின்போது, ஜெனரல் அனஸ்தீஸியாவுக்குப் பதிலாக எபிட்யூரல் அனஸ்தீஸியா கொடுக்கப்படும். வயதானவர்களுக்கு ஜெனரல் அனஸ்தீஸியா கொடுத்தால், நினைவு வர நேரமாகிறது மட்டுமல்ல, சில சிக்கல்களும்



• ப்ரீச் கேண்டி மருத்துவமனை

# மும்பையில் நடக்கும் முழங்கால் ஆபரேஷன்!

ஏற்படுகின்றன. எபிட்யூரல் அனஸ்தீஸியாவினால், இதயம், நுரையீரல், மூளை, சிறுநீரகங்கள் இவற்றுக்கு எந்தவிதமான பாதிப்புகளும் உண்டாவதில்லை" என்கிறார் டாக்டர் கிரீட் திரிவேதி.

டாக்டர் ரனாவத்துக்கு உதவியாகச் செயல்படப் போகும் மும்பை மருத்துவர் டாக்டர் ஹரீஷ் பெண்டே, "ஆபரேஷன் அதிகபட்சமாக ஒன்றரை மணி நேரத்தில் முடிந்துவிடும்" என்கிறார்.

"முழங்காலின் முன்பகுதியில் எட்டு முதல் பத்து அங்குலம் வரை திறந்து, பாதிக்கப்பட்ட எலும்பின் முனையை அகற்றிவிட்டு, மேலே உலோகத் தகட்டைப் பொருத்துவார்கள். கீழ்ப் பகுதியில் பிளாஸ்டிக் தகட்டைப் பொருத்துவார்கள். பிறகு எலும்புகளை இணைத்து, போன்-சிமென்ட் பூசிவிடுவார்கள். எட்டே நிமிடங்களில் இது காய்ந்து விடும். பிறகு சதைப் பகுதியைச் சேர்த்துத் தைத்து விடுவோம்!" என்கிறார் டாக்டர் பெண்டே.

இந்தியத் தயாரிப்புக்கு இருபத்து மூன்றாயிரம் ரூபாயும், அமெரிக்கத் தயாரிப்புக்கு அறுபத்து ஐந்தாயிரம் ரூபாயும் ஆகிறது - இந்த உலோக - பிளாஸ்டிக் முழங்கால் 'கப்'புக்கு. பிரதமருக்குப் பொருத்தப்படவிருக்கும் முழங்கால் 'கப்'பை அமெரிக்காவிலிருந்து டாக்டர் ரனாவத் கொண்டு வருகிறார். 'சிக்மா-பிளக்ஸ்பி' என்று பெயர். அதி நவீனத் தயாரிப்பு.

"இரண்டாவது நாளே காலை அசைக்க முடியும். நான்காவது நாள் வாக்கர் வைத்துக் கொண்டு நடக்க முடியும். 10-12 நாட்களில் தையலைப் பிரித்துவிடுவோம். ஆபரேஷனுக்குப் பிறகு நாலு வாரங்களுக்கு பிரதமர் பிஸியோதெரபி பயிற்சிகள் செய்ய வேண்டியிருக்கும். ஆபரேஷனுக்கு முன்னால் பிரதமரின் எடையைக் குறைக்கச் சொல்லி யோசனை கூறப்பட்டிருக்கிறது. ஆபரேஷனுக்குப் பிறகு பிரதமருக்கு எந்தவித வலியும் இல்லாமல் எளிதாக நடக்க முடியும்!" என்கிறார் பெண்டே.

"பிரதமர் எங்கள் மருத்துவமனையில் அறுவைச் சிகிச்சை செய்து கொள்ள முன் வந்தது எங்களுக்குப் பெருமை தரக்கூடிய விஷயம். எனவே அவருடைய மருத்துவச் செலவுகளை ஒரு லட்சத்து அறுபதாயிரம் ரூபாயை வசூலிக்கப் போவதில்லை. ஏழாம் தள அறைகளுக்கான வாடகையை மட்டுமே வசூலிப்போம்!" என்கிறார் ப்ரீச் கேண்டி ஆஸ்பிடலின் நிர்வாக இயக்குநர் டாக்டர் கே.ஜி.நாயர்.

"டாக்டர் ரனாவத்துக்கு மாஜிக் டச் உண்டு. அவரைத் தேர்ந்தெடுத்தது மிகச் சரியான சாய்ஸ். ஒவ்வொரு கேஸையும் திட்டமிட்டு, மிக ஒழுங்காகச் செய்யக் கூடியவர் டாக்டர் ரனாவத்" என்று புகழ் பாடுகிறார் பத்திரிகையாளர் பிமல் மஹேஸ்வரி. புனேயில், 12 வருடங்களுக்கு முன் இவருக்கு இடுப்பு எலும்பு முறிவுக்கு டாக்டர் ரனாவத் ஆபரேஷன் செய்து, இன்று நலமாக இருக்கிறார் பிமல். "இத்தனைக்கும் எனக்கு இரண்டு ஆபரேஷன்கள் ஆகி, இரண்டும் தோல்வியடைந்த நிலையில், டாக்டர் ரனாவத்தின் திறமையைக் கேள்விப்பட்டு, அவரிடம் போனேன். அவர்தான் என்னைப் பழைய படி நடக்க வைத்தார்!" என்கிறார் பிமல் மஹேஸ்வரி!

- சாருகேசி

படங்கள் : நன்றி, 'மிட்டே'



• தியாக மோகன்





ஒரு நாட்டின் தலைநகராக விளங்கிய ஒரு மாநகர் இன்று ஒரு சின்னஞ்சிறிய கிராமமாய்ச் சிறுத்துப் போய்விட முடியுமா? தஞ்சையிலிருந்து எழுபத்து நான்கு கிலோ மீட்டர் தொலைவில், வரலாற்று வாசனையின் தயவில், இடிபாடுகளின் மிச்சமாய் இன்னுமிருக்கிறது கங்கை கொண்ட சோழபுரம். பிற்காலச் சோழர்களில் பொற்காலம் படைத்த மாமன்னன் ராஜராஜனின், திறமைமிக்க மைந்தன் முதலாம் இராஜேந்திரன், தனியே உருவாக்கிய இந்தப் பழமையான தலைநகருக்கு விஜயம் செய்தோம்.

பெரம்பலூர் மாவட்டம், உடையார்பாளையம் வட்டத்தில் இருக்கும் இந்த ஊரைப் பேருந்தில் நெருங்கினோம். ஊர் வந்துவிட்டதைத் தூரத்தில் தெரிந்த

**• தஞ்சை கோவிலின் அமைப்பில்**

ஆலய கோபுரம் உறுதி செய்கிறது. தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலயத்தை அப்படியே பெயர்த்து வந்து இங்கே வைத்து விட்டது போன்ற பிரமிப்பு. ஆலயத்தின் தோற்றத்தில் அப்படியொரு ஒற்றுமை. ஆலயத்தின் ராஜகோபுரம் இடிந்து, சிதைந்து, மொட்டை கோபுரமாக நிற்கிறது. மிச்சமிருக்கும் மதிற்சுவரின் தென் கிழக்கில் தென்படும் பீரங்கி மேடை, கங்கை கொண்ட சோழபுரத்தின் கோட்டைக் கொத்தள நாகரிகக் கலாசாரத்தை நமக்கு நினைவுபடுத்த, கோவிலின்



# இடிபாடுகளின் மிச்சத்தில் கங்கைகொண்ட சோழபுரம்

**மனசுக்குள் மண்வாசம்**

உள்ளே நுழைகிறோம். வேலைப்பாடு கொண்ட பிரும்மாண்ட நந்தி, பதினோரு அடி உயரத்திற்குப் படுத்திருக்கிறது. பசுமையான பரந்த புல்வெளியோடு வெளிப்பிராகாரம் கண்களையும்,

மனத்தையும் அமைதிப்படுத்த ஆலயத்தை வலம் வருகிறோம். ஆலயச் சுவர் முழுவதும் கவின்மிகு கலைச் சிற்பங்கள்.

ஒற்றைக் காலினை தூக்கியபடி நர்த்தனமாடும் கணபதி, அருகிலே அர்த்தம் பொதிந்த சிரிப்புடன் ஆடல் வல்லான். அமைதி தவழும் முகத்துடன் அர்த்தநாரீஸ்வரர். கங்காதரமூர்த்தி, ஞானசரஸ்வதி, பாற்கடல்வாசன் என்று எதிர்படும் சிற்பங்களை மணிக்கணக்கில் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

கோவிலின் வலப்புறம் சிங்கமுகத்துடன் ஒரு கிணறு. அதைத்தாண்டி பழையபடி நந்தியின் காலடிக்கே வந்து சேர்ந்த பிறகு ஆலயத்திற்குச் செல்ல படியேறுகிறோம். கிழக்கு வாயிலின் இருபுறம் கம்பீரமாக நின்று கொண்டிருக்கும் துவார பாலகர்களைத் தாண்டி உள்ளே நுழைந்தால் 153 கல் தூண்களைக் கொண்ட மகாமண்டபம். மகாமண்டபத்தைக் கடந்து கருவறைக்கு முன்புள்ள அர்த்த மண்டபத்திற்குள் பிரவேசித்



• அழிக்கப்பட்ட ராஜகோபுரம் - அதன் முன் நந்தி.

தால் ஆங்கில 'ஐ' எழுத்தினைப் போன்ற வடிவத்துடன் எட்டு தூண்கள். இந்தத் தூண்களில் 53 பரத நாட்டிய அபிநயச் சிற்பங்கள் அழகாகப் பொறிக்கப்பட்டுள்ளன. சுவர்களிலோ இராமாயணக் காட்சிகளை கண்முன் நிறுத்தும் சிற்பங்கள். கருவறையில் மூலமூர்த்தியாகத் திகழும் அருள்மிகு பெருவுடையார் காட்சி தருகிறார்.

கருவறைக்கு மேலிருக்கும் விமானத்தைக் காண மேல் தளத்திற்குப் படிக்கட்டுக்கள் நம்மை அழைத்துச் செல்கின்றன. மின் வசதி அற்று, பகல் வெளிச்சத்தின் உதவியோடு மேலே ஏறிச் சென்றால், முப்பத்தைந்து அடி உயரத்திற்கு இரண்டு மாடிகள். அதற்குமேல் மொட்டை மாடியுடன் கூடிய விமானத்தின் முன்புறம் நின்று வெளியே பார்க்கிறபோது, ஒட்டு மொத்தத் தமிழகமும் தெரிவதுபோன்ற தோற்றம். சோழர்கால கட்டடக் கலைக்கு அத்தாட்சியாய் நின்று கொண்டிருக்கும் இந்த ஆலயத்தின் வரலாறு என்ன? ஆலயத்தின் நிர்வாக அதிகாரி தியாகராஜன் சொல்கிறார்.

"1014-ல் ராஜேந்திரன் தனியாட்சி தொடங்கிய பிறகு, நிகழ்த்திய வடநாட்டுப் படையெடுப்பே இப்பேரரசனின் வெற்றியை எல்லா திசையிலும் சென்று சேர்த்தது. தக்காணத்தை அரசாண்ட இரணசூரன், வங்காளத்தை ஆண்ட கோவிந்த சந்திரன், உத்திரபிரதேசத்தை ஆண்ட மகிபாலன் ஆகியோரை ஒரே நேரத்தில் வெற்றி



• சிங்கமுக கிணறு

கொண்டு, அவர்களின் தலையில் கங்கை நீர் கொண்ட குடங்களைச் சுமக்கச் செய்து, ராஜேந்திரன் தஞ்சை திரும்பியதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இந்தப் பெரும் வெற்றியை நிலைநாட்டும் விதமாகத்தான் கங்கை கொண்ட சோழபுரம் என்ற தனித் தலைநகரையே இங்கே உருவாக்கினான்.

கோவிலை நடுநாயகமாக கொண்டே இத் தலைநகரை சுமார் ஐந்து சதுர மைல் அளவுடையதாக உருவாக்கியிருக்கிறார்கள். நகர் எல்லையின் நான்புறங்களிலும் எல்லை தெய்வமாக காளிக் கோவில் கட்டியிருக்கிறார்கள். கங்கை கொண்ட சோழபுரத்தைச் சுற்றியுள்ள பல ஊர்கள் பொருள் பொதிந்து காரணப் பெயருடன் இன்றும் விளங்கி வருவது இந்தத் தலை நகரின் சிறப்பை விளக்கும்.

"மாளிகைமேடு, உள்கோட்டை, யுத்தப் பள்ளம், ஆயுதக் களம், தொட்டிக்குளம், சுண்ணாம்புக் குழி, மெய்க்காவல் புதூர், வீர சோழபுரம், சோழன்மாதேவி, வானமாதேவி, பள்ளிவிடை என்று பல ஊர்களைச் சொல்லலாம். குறிப்பாக 1980-ஆம் ஆண்டு, தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத் துறை மாளிகை மேடு கிராமத்தில் அகழ்வாய்வு செய்ததில் அரண்மனைப் பகுதிகள் கண்டு பிடிக்கப்பட்டது. இந்தக் கோவில் கட்டுவதற் காக சுண்ணாம்பு அரைக்கப்பட்ட இடம் தான் இன்றைய சுண்ணாம்புக் குழி கிராமம். கங்கைகொண்ட சோழபுரம் முஸ்லிம் படை யெடுப்புகளின்போது அழிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று வரலாற்றாசிரியர்கள் கருதுகிறார்கள்" என்கிறார்.

● பஞ்சம் இல்லை
அமுத சுரபி
கிடைத்துவிட்டது
அள்ளித் தருகிறார்கள்
- தேர்தல்
வாக்குறுதிகள்!





● நல்ல மேய்ப்பர்
'காமராஜர் ஆட்சி'
என்ற வைக்கோல்
கன்றைக் காட்டியே
கறந்த பால்
- அம்மனுக்கு
அபிஷேகம்!

- தெ.சுந்தரமகாலிங்கம்

"தொல் பொருள் ஆய்வுத் துறை யின் பராமரிப்பில் இருந்துவரும் இந்த ஆலயத்திற்குச் சுற்றுலாப் பயணிகள் ஒவ்வொரு ஆண்டும் அதிக அளவில் வருகிறார்கள். ஆனால் இங்கே எந்தத் தங்கும் வசதியும் இல்லை. அரசோ, சுற்றுலாத்துறையோ இதைத் திரும்பிப் பார்ப்பதில்லை. ஜெயலலிதா ஆட்சியில், ராஜேந்திர சோழனின் நட்சத்திரமான திருவாதிரையில் விழா எடுக்கப்பட்டு வந்தது. அதையும் திமுக ஆட்சியில் நிறுத்திவிட்டார்கள்" என்கிறார் கிராமப் பஞ்சாயத்துத் தலைவரான தியாக மோகன்.

கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து அருகாமையில் உள்ள ஜெயங்கொண்டத்தில் உலகத் தரம் வாய்ந்த நிலக்கரி கண்டுபிடிக் கப்பட்டு விரைவில் சுரங்கம் அமைக்க மத்திய அரசு முயன்று வருகிறது. இதனால் கங்கை கொண்ட சோழபுரம் வரையில் உள்ள நிலங்களை அரசே வாங்கிக் கொள் கிறது. ஒரு ஏக்கர் விலை ரூபாய் இருபத்து இரண்டாயிரம் மட்டும் என்று அரசு விலை நிர்ணயம் செய்துள்ளது. ஆனால் பொன் னேரிப் பாசனத்தில் நெல் விவசாயம் செய்து வரும் பகுதியில் ஒரு ஏக்கர் நிலம் சுமார் ஒரு லட்சம் வரை விலை போகிறது. இது தான் எங்களின் இப்போதையப் பிரச்னை. அரசு கையகப்படுத்தும் நிலத்திற்கு நியாய மான விலை வேண்டும் என்கிறார்கள் கங்கை கொண்ட சோழபுரம் விவசாயிகள்.

ஏரிப் பாசனத்தில் ஒரு போகம் நெல் விவசாயம் தவிர எஞ்சிய காலங்கள் வறட்சியின் பிடியிலேயே பின் தங்கி கிடக்கும் இந்த கிராமத்திலும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் பாட்டாளி மக்கள் கட்சியின் ஆதிக்கம்தான் கொடி கட்டிப் பறக்கிறது.

"வருடத்தில் பாதி நாட்கள் வறட்சியும் வறுமையும் தொடர்வதால் இங்கே வன் முறை, கலவரம் என்று இறங்கி விடுகிறார் கள்" என்கிறார் எண்பது வயது வாண இரையன். ஜெயங்கொண்டத்தில் நிலக்கரிச் சுரங்கம் வந்துவிட்டால், கங்கை கொண்ட சோழபுரம் கனவு பூமியாகிவிடும், வீட்டிற்கு ஒருவருக்கு வேலை வாய்ப்பு கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையோடு இருக்கிறார்கள். ஒரே ஒரு சந்தோஷம் ஊரிலிருக்கும் பத்து வயது சிறுவனுக்குக்கூட ராஜராஜனின் மைந்தன் ராஜேந்திரன் கோட்டை கட்டி கோலோச்சிய ஊர் இது என்ற விவரம் தெரிந்திருக்கிறது.

- ஜெயந்தன்

படங்கள் : வெங்கடேஷ்















2000 அக்டோபர் 15
விக்ரம புரட்டாசி 29
மலர் : 59
இதழ் : 11

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ராவ் நடத்திய லஞ்ச அரசியல்

ஜே.எம்.எம். எம்.பிக்களுக்கு லஞ்சம் வழங்கிய வழக்கில் முன்னாள் பிரதமர் நரசிம்மராவ், முன்னாள் அமைச்சர் பூடாசிங் ஆகிய இருவரும் தண்டிக்கப்பட்டிருப்பது பெரிய சலசலப்பை ஏற்படுத்தியிருக்கிறது. ஆனால், சட்டத்தின் பிடியிலிருந்து எப்பேர்ப்பட்டவரும் தப்ப முடியாது என்று இந்தத் தீர்ப்பு உணர்த்துவதாகச் சொல்லிவிட முடியாது. இதே வழக்கில் லஞ்சம் பெறத் துணிந்த எம்.பிக்களும் லஞ்சப் பணம் கைமாறுவதற்குத் துணை நின்றவர்களும் விடுவிக்கப்பட்டுவிட்டனர். போதுமான ஆதாரம் இல்லாதது ஒரு காரணம். 'பாராளுமன்ற உறுப்பினர் என்கிற முறையில் செயல்பட்டதால் ஜே.எம்.எம். எம்.பிக்களுக்குச் சிறப்பு உரிமைகள் உண்டு' என்று உச்சநீதி மன்றம் ஏற்கெனவே தீர்ப்பளித்திருப்பது இன்னொரு காரணம்!

அப்ரூவராக மாறி குற்றத்தை ஒப்புக் கொண்டிருக்கிறார் ஜே.எம்.எம். எம்.பி.யான மஹதோ. அப்படியும் லஞ்சம் பெற்ற எம்.பிக்கள் சிறப்பு உரிமை பெற்றவர்கள் என்ற காரணத்தால் எந்தத் தண்டனையும் இன்றித் தப்புவது, சட்டத்தையும் ஜனநாயகத்தையும் நம்பி வாக்களித்துள்ள மக்களை முட்டாள்களாக்கும் முடிவாக இருக்கிறது.







பாராளுமன்ற உறுப்பினர்கள் அவையிலே அச்சமின்றி கருத்து தெரிவிக்கவும் இயங்கவும் ஏதுவாக அவர்களுக்குச் சில சிறப்பு உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. ஒரு மைனாரிட்டி அரசைக் காப்பாற்றுவதற்காக லஞ்சம் வாங்கும் அல்லது கொடுக்கும் உரிமை, சர்வ நிச்சயமாக இந்தச் சிறப்பு உரிமைகளுள் ஒன்றல்ல!

இந்த இதழ் வெளியாகும் தினத்தில் ராவ் பெறவிருக்கும் தண்டனை என்ன என்பதை சிறப்பு நீதி மன்றம் அறிவித்துவிடும். அவர் கொடுத்த லஞ்சத்தைப் பெற்றுக் கொண்டவர்கள் மட்டும் தண்டனையிலிருந்து தப்புவார்கள்!

மேல் முறையீடு செய்கிறபோது, இந்த அம்சம் ராவ் மற்றும் பூடா சிங்குக்கு மிகச் சாதகமாக அமையக் கூடும்.

## மம்தா நடத்தும் மிரட்டல் அரசியல்

பெட்ரோலிய பொருட்கள் விலையேற்றத்தால் மக்கள் படப்போகும் கஷ்டங்களுக்காக நீலிக் கண்ணீர் வடித்து ராஜினாமா செய்த மம்தா பானர்ஜி, மத்திய அரசை அடையாள விலை குறைப்புக்கு இணங்குமாறு செய்துவிட்டார். கூடவே, அமைச்சரவையில் தமது கட்சி உறுப்பினர் ஒருவருக்குப் புதிதாக இடமும் பிடித்துக் கொண்டுவிட்டார்!

மேற்கு வங்கத்தில் ஜோதி பாஸு அரசை 356 பிரயோகித்து நீக்காதது, அமைச்சரவை விரிவாக்கத்தில் திரிணமுல் காங்கிரஸ் புறக்கணிக்கப்பட்டது - இவையே மம்தாவின் ராஜினாமாவுக்கு உண்மைக் காரணங்கள் என்பது வெளிப்படையாகவே தெரிகிறது.




பிரதமர் அவரது ராஜினாமாவை ஏற்காததும் அவருடைய மிரட்டலுக்கும் பணிந்ததும் மத்திய கூட்டணி ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்ளத்தான் என்பதும் நிதர்சனமாகப் புரிகிறது.

மாநிலத் தேர்தலில் காங்கிரஸுடன் ஒரு மகா கூட்டணி அமைத்து, மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்டுகளை வெளியேற்றிவிட வேண்டும் என்று திட்டமிட்டார் மம்தா. காங்கிரஸ் பிடி கொடுக்காததால் ஏமாற்றமே ஏற்பட்டது. பாஸு அரசாங்கத்தின் பேரில் குற்றச்சாட்டுகளைக் கூறி கவிழ்க்க முற்பட்டார்.

அதற்கு மத்திய அரசு மசியவில்லை. பெர்னான்டஸும் அத்வானியும் மேற்கு வங்க யாத்திரை போய் வந்து, மிகைப்படுத்திய அபாய அறிக்கை கொடுக்க முடிந்ததேயொழிய 356ஐப் பிரயோகிக்க போதிய அளவு முகாந்திரமே இல்லை.

முகத்தில் கரி பூசிக் கொண்ட மம்தா பானர்ஜிக்கு அந்த இழிவை மூடி மறைக்கச் சௌகரியமாக வந்து சேர்ந்தது பெட்ரோலியப் பொருட்கள் விலை உயர்வு. 356 கோரிக்கையின் தோல்வியை மறைக்க, பெட்ரோல் விலையுயர்வை எதிர்த்துப் போராடி வென்றதாகக் கணக்குக் காண்பித்துவிட்டார்.

மம்தா சாதித்துவிட்டதாகக் கருதும் அடையாள விலை குறைப்பால் மக்களுக்குப் பெரிய ஆதாயம் எதுவும் இல்லை. ஆனால் மம்தா பானர்ஜிக்கு நிறைய அரசியல் ஆதாயம் உண்டு!

மம்தாவின் மிரட்டல் அரசியலும் வாஜ்பாயின் பணிதல் போக்கும் அடுத்த நான்கு ஆண்டுகளுக்குத் தொடருமானால் யார் பிரதமர்? மம்தாவா, வாஜ்பாயா? என்ற சந்தேகமே மக்களுக்கு ஏற்பட்டுவிடும்!










மூட்டு வலிக்கு நிவாரணம் பெறுவதற்காக அறுவை சிகிச்சைக்குத் தயாராகிக் கொண்டிருந்த பிரதமருக்குத் தலைவலியையும் சேர்த்துக் கொடுத்திருக்கிறார் மம்தா பானர்ஜி. பெட்ரோலியப் பொருட்களின் விலையைக் குறைக்காவிட்டால் 'ஆதரவு வாபஸ்' என்று அவர் விட்ட மிரட்டலால் வாஜ்பாய் அரசு கொஞ்சம் ஆடித்தான் போயிருக்கிறது. ஒன்பது உறுப்பினர்களைக் கொண்ட த்ருணமூல் காங்கிரஸ் ஆதரவை வாபஸ் வாங்கினாலும் ஆட்சி கவிழாது. இருந்தாலும், அப்படிப்பட்ட ஒரு நிலை தனது ஆட்சியின் ஸ்திரத்தன்மையைக் கேள்விக் குறியாக்கும்; மற்ற சின்னச் சின்னக் கட்சிகளும், வேண்டாத பிரச்னைகளைக் கொண்டு வந்து மிரட்டக் கூடும்' என்பதால் மம்தாவைச் சமாதானப்படுத்தும் முயற்சியில் இறங்கியிருக்கிறார் வாஜ்பாய்.

"ஏற்றிய விலைகளை ஓரளவுக்கு இறக்குகிறோம்" என்று மம்தாவுக்கு உறுதி கொடுக்கப்பட்டாலும், ஆபரேஷன் முடிந்து மும்பையிலிருந்து பிரதமர் திரும்பிய பிறகுதான் அது பற்றிய முடிவு எடுக்கப்படும்" என்று பிரதமர் சொல்லியிருப்பதால் மம்தா கிளப்பிய புயல் சூறாவளியாகும் வாய்ப்பு இருக்கிறது! "எனக்குக் கொடுத்த வாக்குறுதிபடி உடனே விலையைக் குறைக்க வேண்டும்" என்று பிடிவாதம் பிடிக்கிறார் மம்தா.

பெண் அரசியல்வாதிகளுக்கும் பா.ஜ.க.வுக்கும் ஏழாம் பொருத்தம் போலிருக்கிறது. 1998ல் ஆட்சிக்கு வந்தபோது ஜெயலலிதா படுத்திய பாட்டை வாஜ்பாய் ஆவி கூட மறக்காது. "முதன்முதலாக ஆட்சிக்கு ஆதரவுக் கடிதம் கொடுக்கும்போது கொஞ்சம் இழுத்தடித்து அப்புறம் மாதத்திற்கொருமுறை, "கூட்டணிக் கட்சிகளைக் கலந்தாலோசிக்காமல் முடிவெடுக்கிறார்கள்; தமிழக நலன்கள் புறக்கணிப்பு, தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு கெட்டு விட்டது, ஆட்சியைக் கவிழ்க்க வேண்டும்" என்றெல்லாம் அறிக்கை விட்டு வாஜ்பாய்க்கு நடுக்கத்தை உண்டாக்கினார் ஜெ. "தன் மீதுள்ள வழக்குகளை வாபஸ் வாங்க வேண்டும்" என்பதை ரகசியக் கோரிக்கையாக வைத்து, வெளியில் சொல்லும்போது வேறு பல குற்றச்சாட்டுக்களை அடுக்கினார் ஜெயலலிதா.

காஷ்மீர் விவகாரம், கப்பல்படை தளபதி விஷ்ணுபகவத் பிரச்னை போன்றவற்றையும் கையிலெடுத்துக் கொண்டார் ஜெ. ஒரு கட்டத்தில் ஆகஸ்ட் 15ம் தேதியன்று பிரதமர் கோட்டையில் கொடியேற்றுவாரா என்பதே சந்தேகமாகி விட்டது. அப்புறம் பெர்



னாண்டஸ் சென்னைக்கு வந்து ஆட்சிக்கு 'எக்ஸ்டென்ஷன்' வாங்கிக் கொண்டு போனார். அதே காலகட்டத்தில் வெங்காய விலை ஏற்றத்துக்காக மம்தாவும் ஆதரவை விலக்கிக் கொண்டார். பின்னர் நிலைமை சுமுகமாயிற்று. பா.ஜ.க ஆட்சியின் மீது நம்பிக்கை தீர்மானம் கொண்டு வரப்பட்டபோது, மிகவும் நம்பிக் கொண்டிருந்த மாயாவதி திடீரென்று எதிர்முகாமில் சேர்ந்துகொண்டு முதுகில் குத்தினார்.

இப்படி வேறு கட்சிகளைச் சேர்ந்த பெண் அரசியல்வாதிகள் என்றில்லை. பா.ஜ.கவைச் சேர்ந்த உமா பாரதியும், சுஷ்மா ஸ்வராஜுமே அவ்வப்போது பிரதமருக்குத் திருகுவலி கொடுக்கிறார்கள்.

இப்போது த்ருணமுல் காங்கிரஸுக்கு மேற்கு வங்கத்தில் பரவலாக செல்வாக்குக் கூடி இருக்கிறது. இந்தச் செல்வாக்குக் காரணமாக மார்க்ஸிஸ்ட் மற்றும் த்ருணமுல் கட்சித் தொண்டர்களுக்குள் தினசரி மோதல்! மார்க்ஸிஸ்ட் கட்சி ஆளும் கட்சியாக இருப்பதால் த்ருணமுல் தொண்டர்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். கிட்டத்தட்ட ஐம்பது த்ருணமுல் காங்கிரஸ் தொண்டர்கள் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். 'தாம் மத்திய அரசில் பொறுப்பு வகித்தும், 'சட்டம் ஒழுங்கை சதிராடவைக்கும் மார்க்ஸிஸ்ட் அரசை ஒன்றும் செய்ய முடியவில்லையே' என்ற கோபம் மம்தாவுக்கு. பெர்னாண்டஸும் அத்வானியும் ஜோடியாக அரசை அவ்வப்போது கடுமையாகத் தாக்கி வந்தாலும் எந்தவிதமான நடவடிக்கையும் இல்லை என்று வருத்தப்படுகிறார் மம்தா.

குறைந்த பட்சம், மாநிலத்தில் சில மாவட்டங்களை disturbed area என்று அறிவித்து மத்திய அரசின் காவல் படையைப் பாதுகாப்



# “உருவம் இரண்டு: உணர்வு ஒன்றுதான்!”

புக்கு அனுப்ப வேண்டும் என்ற கோரிக்கையைக் கூட மத்திய அரசு கண்டு கொள்ளவில்லை. "பா.ஜ.கவுக்குத் தி.மு.க.வோடு ரகசிய உறவு இருக்கிறது" என்று ஜெயலலிதா முன்பு சொன்னது போல 'பா.ஜ.க.வுக்கும் மார்க்ஸிஸ்டுகளுக்கும் தொடர்பு இருக்குமோ' என்று சந்தேகப்படுகிறார் மம்தா.

'பெண்மணிகள் புயலைக் கிளப்பும் போதெல்லாம் ஓடோடிச் சென்று உறவைச் சரி செய்யும் பெர்னாண்டஸ் Minister for Defence அல்ல; Minister for cordial relation என்று தில்லியில் கிண்டலடிக்கிறார்கள்.

"ஜெயலலிதாவும், மம்தாவும் உருவம் வேறாக இருந்தாலும் அவர்கள் உணர்வு ஒன்றுதான்" என்கிறார் பண்ருட்டி ராமச்சந்திரன். "பெண் அரசியல்வாதிகளைச் சமாளிக்கும் யுக்திகளை பா.ஜ.க கற்றுக் கொள்ள வேண்டும்" என்கிறார் அவர்! "ஒரு ஜெயலலிதா



வையோ, மமதாவையோ வைதது எல்லா பெண் அரசியல்வாதிகளையும் எடை போடக் கூடாது" என்கிறார் பா.ஜ.க.வின் தேசிய குழு உறுப்பினரான ஹண்டே. "சுசேதா கிருபளானி, ஜோதி வெங்கடாச்சலம், ருக்மணி லட்சுமிபதி என்று கண்ணியமான பெண் அரசியல்வாதிகள் நம் நாட்டில் நிறையவே இருந்திருக்கிறார்கள். ஆண் அரசியல்வாதிகளில் நம்பகத் தன்மை அற்றவர்களாக பலர் இருக்கிறார்களே. அதனால் ஒட்டுமொத்த ஆண் அரசியல்வாதிகளையும் சாடுவீர்களா. முன்பு ஜெயலலிதா, பா.ஜ.க.வுக்குக் கொடுத்து வந்த அழுத்தத்தை, பல பெண் அமைப்புகளே கண்டித்து வந்தன" என்றார் ஹண்டே.

ஜெயலலிதாவோடு கை கோத்து தேர்தலைச் சந்திக்க ஆர்வமாக உள்ள த.மா.கா.வினர் இந்தப் பிரச்னையில் கருத்து சொல்ல யோசிக்கிறார்கள்.

"எண்ணெய் தொகுப்புக் கணக்கில் நமது பாக்கித் தொகை ஏறிக் கொண்டே இருப்பதைக் கட்டுப்படுத்த விலையுயர்வு அவசியம் என்று சொல்கிறது அரசு. மக்களைச் சமாளிக்க இப்படிச் சொல்லும் மத்திய அரசு, திருப்தியான காரணங்களை மம்தாவுக்குச் சொல்ல முடியாமல் தவிப்பது ஏன்? நியாயமான உயர்வு என்றால் தைரியமாகச் சமாளிக்கலாமே! இப்போது அரசியல் காரணங்களுக்காகக்

குறைக்கப் போவதைப் பார்த்தால் ஏற்றிய உயர்வு நியாயமில்லாதது போலல்லவா தெரிகிறது" என்றார் ம.தி.மு.க.வின் முக்கிய புள்ளி ஒருவர். "எந்தப் பிரச்னையையும் தைரியமாகச் சந்திக்கும் தைரியம் வாஜ்பாய்க்குக் கிடையாது. அடி பணிந்து கை நீட்டுவதுதான் அவரது சாதுர்யம். முன்பு ஜெயலலிதாவைத் திருப்திபடுத்த அவர் மேல் தனிக்கோர்ட்டில் இருந்த வழக்குகளைக் காலதாமதப்படுத்த, வழக்கமான நீதிமன்றத்துக்கு மாற்றினார். சட்டம், ஒழுங்கை பற்றிப் பேச உள்துறை அதிகாரியைத் தமிழகத்துக்கு அனுப்பி வைத்தார். ஜெ கொஞ்சம் பொறுமையாக இருந்திருந்தால் தி.மு.க ஆட்சியைக் கவிழ்க்கும் அளவுக்குக் கூட அவர் போயிருப்பார்" என்கிறார் தமிழக காங்கிரஸ் பிரமுகர் ஒருவர். "மம்தா அவசரப்படுகிறார். மேவங்கத்தில் விரைவில் சட்டமன்றத் தேர்தல் வருவதால், தன் நிலையை இன்னமும் பலப்படுத்திக் கொள்வதற்காக இந்த அரசியல் பரபரப்பை அவர் ஏற்படுத்தியிருக்கலாம்" என்றார் அவர்.

**''கட்சில அவர் மட்டும் தியாகி பென்சன் கேட்கறாராமே...ஏன்?''**

**''வேற எந்த கட்சிக்கும் போகாம இதே கட்சில இருந்து நிறைய வருமானத்தை இழந்திருக்காராம்!''**

**— அம்பை தேவா**

ஜெயலலிதா போலல்லாமல் மம்தாவின் பெரிய பலம் கறைபடியாத அவரது கரம் தான். சட்டம் - ஒழுங்கைச் சந்தி சிரிக்க வைத்துக் கொண்டிருக்கும் மார்க்ஸிஸ்ட் அரசை, தட்டிக் கேட்க மத்திய அரசு தயங்குவதை அரசியலாக்கி, சட்டமன்றத் தேர்தலில் வோட்டுக்களைப் பெறும் அருமையான வாய்ப்பு அவருக்கு இருக்கிறது. மத்திய அரசின் கூட்டணிக் கட்சியாக இருப்பதால், பெட்ரோலிய பொருட்களை விலையேற்றியதைச் சாக்காகக் கொண்டு விலகினால், அரசிடம் மக்களுக்கு உள்ள வெறுப்பிலிருந்து தப்பலாம் என்று அவர் கருதியிருக்கலாம்.

இந்தப் பிரச்னையில் இன்னமும் சுமுக முடிவு ஏற்படாத நிலையில், பிரதமர் மும்பைக்கு சிகிச்சைக்கு செல்கிறார். இன்னமும் இருபது நாட்களுக்கு மும்பைதான் அரசியல் தலைநகரமாக இருக்கும். கல்கத்தாவுக்கும் தில்லிக்கும் உள்ள தூரத்தை விட கல்கத்தாவுக்கும் மும்பைக்கும் தூரம் அதிகம். பிரதமருக்கும் மம்தாவுக்கும் உள்ள இடைவெளி குறையுமா?

**— ப்ரியன்**

**எட்டாயிரம் டெபாசிட்தாரர்கள்; இருபத்திரண்டு கோடி ரூபாய் டெபாசிட். கடந்த 1998ம் வருடம் செப்டெம்பர் எட்டாம் தேதி, தான் நடத்தி வந்த பாலு ஜுவல்லர்ஸ் நகைக்கடையை மூடிவிட்டு, போலீசில் சரண் அடைந்தார் அதன் உரிமையாளர் பாலு ஐயப்பன். கோர்ட்டில் வழக்கு நடந்து கொண்டு இருக்கிறது. இந்தச் சூழ்நிலையில், ஐயப்பன், வரும் நவம்பர் மாதத்தில், மறுபடியும் பாலு ஜுவல்லர்ஸை திறந்து நடத்தப் போகிறார் என்று செய்தி கேள்விப்பட்டு, அவரை சந்தித்துப் பேசினோம்:**

**கேள்வி: மறுபடியும் பாலு ஜுவல் லர்ஸை நடத்தப் போகிறீர்களாமே?**

பாலு ஐயப்பன்: ஆமாம்! கோர்ட் மற்றும் அரசாங்கத்தின் அனுமதியுடன், மறுபடியும் கடையைத் திறக்கப் போகிறேன். மலேசியாவில் உள்ள சில நண்பர்கள், பத்து கோடி ரூபாய் முதலீடு செய்ய முன் வந்திருக்கிறார்கள். நகைச் சீட்டு நடத்த மாட்டோம்; டெபாசிட் வாங்க மாட்டோம் என்று உறுதிமொழி எழுதி கோர்ட்டுக்குக் கொடுத்து இருக்கிறேன். வியாபாரத்தில் தினசரி கிடைக்கும் லாபத்தின் பகுதியை, நானும் என் கடையின் டெபாசிட்தாரர்கள் நல சங்க நிர்வாகிகளும் இணைந்து துவங்கும் வங்கிக் கணக்கில் போடப் போகிறோம். ஓராண்டு ஆனதும், அந்தத் தொகை டெபாசிட்தாரர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படும். எப்படியும் ஐந்து வருட காலத்துக்குள்ளாக டெபாசிட் தொகை முழுவதையும் திருப்பிக் கொடுத்து விட முடியும் என்று முழுமையாக நம்புகிறேன்.

**கே: அசலும், வட்டியுமாகவா?**

பாலு: இல்லை. முதலில் அசலைக் கொடுத்து விட வேண்டும் என்பதே லட்சியம். இப்போது வட்டி தர ஆரம்பித்தால், வட்டி மட்டுமே கொடுத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். அசல் முழுவதும் திருப்பிக் கொடுத்த பின்னரே, வட்டி பற்றி யோசிக்க முடியும்.

**கே: இதற்கு டெபாசிட்தாரர்கள் ஒப்புக்கொண்டு விட்டார்களா?**

பாலு: சென்னை பெரியார் திடலில், அனைத்து டெபாசிட்தாரர்களையும் அழைத்து ஒரு கூட்டம் நடத்தி, அடுத்து என்ன செய்வது என ஆலோசித்தோம். மற்ற எந்த முடிவுகளையும்விட, கடையைத் தொடர்ந்து நடத்துவதால் பலன் அதிகம் என்று அவர்கள் முடிவுக்கு வந்தார்கள். அதன்பின்தான் நான் கோர்ட்டையும், அரசையும் அணுகினேன். இன்னொரு முக்கியமான விஷயம். "நான் கடையை நடத்தி, டெபாசிட்களைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். நீங்கள் என் மேல் போட்டிருக்கும் கேஸை வாபஸ் வாங்கி விடுங்கள்'' என நான் கேட்கவில்லை. கேஸ் தனியே நடந்து கொண்டிருக்கிறது. நான் வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்ற தர்மத்துக்குக் கட்டுப்பட்டுதான் இப்படி ஒரு ஏற்பாடு செய்திருக்கிறேன்.

# "டெபாசிட்தாரர்களை ஏமாற்ற நினைக்கவில்லை!"

**கே: பல்லாயிரம் பேர், ஏமாந்து நிற்கும் நிலையில், மறுபடி கடையை ஆரம்பித்தால், மக்கள் நம்பிக்கையை எப்படிப் பெற முடியும்?**

பாலு: டெபாசிட்தாரர்களை ஏமாற்ற வேண்டும் என்கிற எண்ணம், எனக்குக் கனவிலும் கிடையாது. என் கடை நன்றாக நடந்துகொண்டிருந்த சமயம், சுமார் இருபதாயிரம் கஸ்டமர்கள் எனக்கு உண்டு. அவர்களுக்கு என்னைப் பற்றி பர்சனலாக, நன்றாகத் தெரியும். இன்று ஏறத்தாழ ஐம்பது பைனான்ஸ் கம்பெனிகள் மூடப்பட்டு விட்டன. அவர்களில் எவரும்

செய்யாத முயற்சியை நான் இப்போது செய்ய முன் வந்திருக்கிறேன். என்னால் நிமிர்ந்து நிற்க முடியும்; டெபாசிட்தாரர்களின் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட முடியும் என்ற அழுத்தமான நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

**கே: தங்களது பல வருட சேமிப்பை உங்களிடம் டெபாசிட் செய்த ஆயிரக்கணக்கான நடுத்தரக் குடும்பங்கள், கடந்த இரண்டு வருடத்தில் எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பார்கள் என நீங்கள் நினைத்துப் பார்த்தீர்களா?**




**பாலு:** அவர்களது கஷ்டங்களை நான் உணர்ந்திருக்கிறேன். அவர்களைப் போலவே நானும் கஷ்டப்பட்டிருக்கிறேன். நானும் எவ்வளவு மன உளைச்சலுக்கு ஆளாகியிருக்கிறேன் தெரியுமா? ஆட்டோவில் செல்ல நூறு ரூபாய் இல்லாமல் வெளியில் போவதையே தவிர்த்திருக்கிறேன். என் சொந்தக்காரர்கள்கூட என்னைப் பற்றிக் கேவலமாகப் பேசினார்கள். யார் யார் எல்லாம் கஷ்டத்தில் கை கொடுப்பார்கள் என நினைத்தேனோ, அவர்கள் முதுகில் குத்தி விட்டார்கள். ஆனால் நான் யாரையும் ஏமாற்ற நினைக்கவில்லை: எனவே, இந்தக் கஷ்டமான காலம் சீக்கிரமே முடிவுக்கு வந்துவிடும் என்று நம்பிக்கை இழக்காமல் இருந்தேன்.

**கே: உங்களுக்கு நெருக்கமான, உங்களால் கௌரவிக்கப்பட்ட சினிமாப் பெரும் புள்ளிகள்கூட உங்களுக்கு உதவ முன் வரவில்லையா?**

**பாலு:** நிலைமை கட்டு மீறிப் போய் விட்டது. சினிமா உலக நண்பர்கள் எனக்காக அனுதாபப்பட்டார்களேயொழிய, பணம் கொடுத்து தீர்க்கும்படியான சூழ்நிலை இல்லை. ஆனாலும் பலவிதமான உதவிகளையும் செய்து, தைரியம் ஊட்டிய கவிஞர் வைரமுத்துவை என்னால் மறக்கவே முடியாது.

**கே: நிலைமை கட்டு மீறிப் போனதற்கு மூலகாரணம் என்ன?**



• மலேஷிய தொழிலதிபர் சுல்தான் அப்துல் காதருடன் பாலுஐயப்பன்

**பாலு:** என் தந்தை காலத்தில் வியாபாரம் ஓஹோ என்று இருந்தது. நகைக் கடையின் வருமானத்திலிருந்து பன்னிரண்டு கோடி வரை முதலீடு செய்து, அவர் சமையல் எண்ணெய் உற்பத்தி செய்யும் பாம்பன் ஆயில் மில் தொடங்கினார். அதில் நஷ்டம்தான் ஏற்பட்டது. தவிர,

# கொலுவுக்கு வந்த வீரப்பன்!

எக்ஸ்னோரா அமைப்பு இந்த வருடம் வித்தியாசமாக 'திருக்குறள் கொலு' வை சென்னையில் நடத்தியது. பங்கேற்ற கல்லூரிகளும், பள்ளிகளும், மகளிர் மன்றங்களும் திருக்குறளை எடுத்துக்காட்டும்படியாக பொம்மைகளை வைத்திருந்தார்கள். சிறப்பு விருந்தினர்: முதல்வரின் மனைவி தயாளு அம்மாள்.



'தூது' அதிகாரத்திலிருந்து ஒரு குறளை எழுதி வைத்து, அதன் அருகில் வைத்திருந்த பொம்மைகள்தான் எல்லோரையும் ஒரு நிமிடம் நிற்க வைத்தன! காரணம் அதிலிருந்த பொம்மைகள் வீரப்பன், நக்கீரன் கோபால், ராஜ்குமார், கருணாநிதி மற்றும் கிருஷ்ணா!

நிகழ்ச்சியில் பேசிய பொன்மணி வைரமுத்து, திருவள்ளுவர் வாழ்க்கையை டி.வி. சீரியலாக எடுக்க வேண்டும். அதற்கு சித்தி, மங்கை ஸ்டைலில் 'வாசுகி' என்று பெயர் வைக்கலாம். வள்ளுவர் மனைவி வாசுகியாக ரேவதி நடிக்க வேண்டும் என கேட்டுக் கொண்டார்.

சீரியல் பற்றி கண்டு கொள்ளாவிட்டாலும், "பிளாஸ்டிக் பைகளைப் பயன்படுத்தாதீர்கள். பழைய காலம் போல மஞ்சள் பைகளை பயன்படுத்துங்கள். அது கேவலமில்லை. மஞ்சள் நிறம் வேண்டாம் என்றால் விரும்பிய கலரில், விரும்பிய டிசைனில் துணிப்பையைப் பயன்படுத்துங்கள்" என்றார் ரேவதி.

– சி.எம்.

படம்: யோகா

உஸ்மான் ரோட்டில் புதிதாய் கடை மற்றும் வீடு வாங்கியதில் ஆறு கோடி செலவு. நகை வியாபாரத்தில் பிசியாக இருந்ததால், பாம்பன் ஆயில் மில்லில் கவனம் செலுத்த முடியவில்லை. அங்கே நிர்வாகப் பிரச்னைகள். இந்தச் சூழ்நிலையில் திடீரென என் தந்தை மரணம் அடைந்தார். அடுத்த ஆறுமாதம் வரை எந்தப் பிரச்னையும் இல்லை. அதன்பின் தினம் இரண்டு லட்சம் வரை டெபாசிட்தாரர்களுக்கு வட்டியாக மட்டுமே கொடுக்க சிரமமாக இருந்தது. போதாக்குறைக்கு, பைனான்ஸ் கம்பெனிகள் ஒவ்வொன்றாய் மூடப்பட்டன. ஒவ்வொரு கம்பெனி மூடப்படும் போதும், டெபாசிட்தாரர்கள், தம் டெபாசிட்களைத் திருப்பித் தரச் சொல்லிக் கேட்பார்கள். திடீரென்று பணம் புரட்டித் தருவது கஷ்டமாக இருந்தது. இனி தொடர்ந்து கடையை நடத்த முடியாது என்ற சூழ்நிலை ஏற்படவே கடையைப் பூட்டி, சாவியை போலீஸ் கமிஷனரிடம் ஒப்படைத்துவிட்டு, சரண் அடைந்தேன்.

**கே: ஜெ. முதலமைச்சராக இருந்த போது, நடந்த வளர்ப்பு மகன் திருமணத்துக்காக, பல கோடி ரூபாய் மதிப்புள்ள நகைகளை எடுத்துச் சென்றுவிட்டு பணமே வராத பெரும் அதிர்ச்சியில்தான் உங்கள் தந்தையார் மரணமடைந்து விட்டதாகக் கூட பரவலாக நம்பப்படுகிறதே!**

பாலு: ஜெயலலிதா மற்றும் சசிகலா குடும்பத்தினருக்கும் எங்களுக்கும் நேரடியாக எந்தத் தொடர்பும் இல்லை. வளர்ப்பு மகன் திருமணத்துக்கு, ஒரு சவரன் நகைகூட எங்களிடமிருந்து வாங்கப்படவில்லை. ஒரு அமைச்சர்தான், திருமண அழைப்பிதழ் கொண்டு வந்து கொடுத்தார்; என் தந்தை மட்டும் திருமணத்துக்குச் சென்று வந்தார். இதுதான் உண்மை. ஆனால் நீங்கள் சொல்லும் வதந்தியை நானே என் காதுபடக் கேட்டிருக்கிறேன்; சிறப்பு நீதிமன்றத்தில் நடக்கும் வழக்கு சம்பந்தமாக என்னிடம் விசாரணை நடந்த போதும் நான் இதைத்தான் சொன்னேன்!

**— கௌதம் ராம்**

படம்: **கே.எஸ். அருணாச்சலம்**

# தத்துப் பிள்ளைகள்

**'ரிதம்' படத்தில் மீனா ஒரு சிறுவனைத் தத்தெடுத்து வளர்ப்பதாகக் காட்டப்படுகிறது. இந்த சினிமாவில் வருவதுபோல் தத்தெடுத்த விஷயத்தைக் குழந்தையிடம் சொல்வது சரிதானா? குழந்தைகளைத் தத்தெடுத்துக் கொண்ட சில பெற்றோர்களிடம் கேட்டோம்.**

"சந்தேகமில்லாமல் இந்த விஷயத்தைக் குழந்தையிடம் சொல்லித்தான் ஆக வேண்டும்" என்றார் அஞ்சலி. "இது ஒன்றும் வெட்கப்பட வேண்டிய விஷயமோ ரகசியமானதோ அல்ல. 'நீ கொஞ்சம் குள்ளமாயிருக்கிறாய், நமக்கெல்லாம் இரண்டு கைகள் உண்டு என்பதையெல்லாம் குழந்தைக்கு நாம் சொல்வதைப் போல இதையும் காஷுவலாக நாம் சொல்ல வேண்டும். எல்லாவற்றையும்விட முக்கிய காரணமொன்று உண்டு. வேறு யார் மூலமாவது இந்த உண்மையைத் தெரிந்து கொண்டு குழந்தை அதிர்ச்சியடைவதை விட, பெற்றோரே இதைக் குழந்தையின் சிறு வயதிலேயே தகுந்த முறையில் கூறுவது நல்லது."

தகுந்த முறையில் என்றால்?

"என்னைப் பொறுத்தவரை என் வளர்ப்பு மகள்களுக்குச் சுமார் மூன்று வயது ஆன போது இந்த உண்மையைக் கூறினேன். அவ்வளவு இளம் வயதில் இதை நேரடியாகக் கூற முடியுமா? இதே போன்ற சூழல் உள்ள கதைகளைக் கூறி தத்து குறித்து



அவர்கள் மனத்தில் பதியவைத்து, பிறகு அந்த உண்மையைக் கூறியபோது அதை ஏற்றுக் கொண்டார்கள். சொல்வதால் சிக்கல்கள் ஏற்படுமோ என்று கவலைப்படு வதைவிட சொல்லாவிட்டால் விளையக் கூடிய ஆபத்துகள் அதிகம் என்பதை உணர வேண்டும். எனக்குத் தெரிந்த ஒரு குடும்பம் பெங்களூரில் வசிக்கிறது. குடும்பத் தலைவர் விபத்தொன்றில் சிக்கிக் கொள்ள, அவருக்கு உடனடியாக நிறைய ரத்தம் தேவைப்பட் டது. உடனே அவரது மகன் "எவ்வளவு ரத்தம் வேணுமானாலும் எங்கிட்டேயிருந்து எடுத்துக்குங்க'' என்று கூற, இதைத் தொடர்ந்து உருவான சூழலில்தான் அவரது சொந்த மகனல்ல; தத்தெடுக்கப்பட்டவன் என்பது புரிந்ததும் மனம் உடைந்து போய் விட்டான் அந்தச் சிறுவன். இந்தத் திடீர் அதிர்ச்சியிலிருந்து இன்னமும் முழுவதுமாக அவன் மீளவில்லை. மறைக்கப்பட்ட உண்மையைவிட, அந்த உண்மை மறைக்கப் பட்டதுதான் அவனை அதிகம் பாதித்தது'' என்கிறார் மணிமேகலை குமார்.

மற்றொரு வளர்ப்புத் தந்தை (பெயரைக் குறிப்பிடக் கூடாது என்று இவர் நிபந்தனை விதித்ததற்குக் காரணம் அவர் கூறும் கருத்துக்களிலேயே ஒளிந்திருக்கிறது) "இது பெற்றோர் சம்பந்தப்பட்ட விஷயம் மட்டு மல்ல. அவர்கள் உறவினர்களுக்கும் இதில் பங்குண்டு. "குழந்தையைத் தத்தெடுத்துக் கொண்டது சரி. ஆனால் இந்த விவரத்தை அவனிடம் சொல்லாதே. சொன்னால் அவனுக்கும் உங்களுக்குமிடையே ஒரு இடைவெளி உண்டாகிவிடும். அப்புறம் நியாயமான காரணத்திற்காக நீ கடிந்து கொண்டால்கூட 'சொந்தப் பிள்ளை இல்லை என்பதால்தானே இப்படி நடத்து கிறாய்?' என்று கேள்வி கேட்டு மடக்கு வான். எதற்கு வம்பு?" எனும்போது அந்தக் கருத்துகளை என்னால் ஒதுக்க முடிய வில்லை'' என்றார்.

"**வ**யிற்றில் பிறந்த குழந்தைதான் என்றாலும் பல வீடுகளில் அவர்களுக்கும் பெற்றோருக்குமிடையே உரசல்கள் இல் லையா என்ன? அதுவும் டீனேஜ் பருவத்தை அவர்கள் எட்டும்போது நிச்சயம் பலவித மான கருத்து வேறுபாடுகள் தோன்றத்தான் செய்யும். அவற்றோடு இதுவும் ஒன்று என்று எடுத்துக்கொண்டு அதைக் கையாளுவது தான் முறை'' என்கிறார் தமிழ்நாடு வளர்ப்பு பெற்றோர் குழுவின் செயலாளரான வித்யா சங்கர். திரைப்படங்களில் தத்தெடுப்பதைச் சித்திரிப்பது குறித்துக் கடுமையாக எதிர்ப்பு தெரிவிக்கிறார். "அனாதை ஆசிரமத்துக்குச் செல்வதும், அங்கு காட்டப்படும் குழந்தை களில் ஒன்றைத் தேர்ந்தடுத்து தத்தெடுத்துக் கொள்வதும் சட்டபூர்வமானது அல்ல. இதற்கென்றே உள்ள ஏஜென்ஸிகள் மட்டும்தான் இப்படி தத்துக் கொடுக்க முடியும். அரசின் நிதி உதவி தேவையில்லை என்றால் யார் வேண்டுமானாலும் ஒரு மாட்டுத் தொழுவத்தில்கூட அனாதை ஆசிரமம் நடத்தலாம் என்பதும், கொஞ்சம் பேரெடுத்தால் வெளிநாட்டு நன்கொடைகள் மூலம் அதை ஒரு லாபகரமான வியாபார மாக்கிக் கொள்ளலாம் என்பதும் களையப் பட வேண்டிய நிலைகள். பெரும்பாலான அனாதை ஆசிரமங்களில் வளருபவர்கள் உண்மையில் அனாதைகள் அல்ல. ஒரு பெற்றோராவது உயிரோடு இருப்பர். வறுமை அல்லது பொறுப்பின்மை காரண மாக அனாதை ஆசிரமத்தில் விட்டு விடு கிறார்கள். அனாதைகளுக்குத் தேவை ஆசிர மங்கள் அல்ல குடும்பச் சூழல்தான்'' என்றார் அழுத்தம் திருத்தமாக!

**— ஜி.எஸ்.எஸ்**



• வித்யாசங்கர்



"தலைவருக்கு இந்தத் தேர்தல்லே 'தீப்பெட்டி' சின்னம் கிடைச்சா பொருத்தமா இருக்குமா... எப்படி?"

"நிறைய பஸ்ஸைக் கொளுத்தியிருக்காரே!"

— தாமு



"பட்டி மன்றத்துல என்ன தகராறு?"

"நடுவரோட தீர்ப்பை ஒத்துக்க முடியாது... அப்பீலுக்குப் போகறோம்னு சொல்லி தகராறு பண்றாங்களாம்!"

— சீர்காழி வி. ரேவதி.

# தீப்பெட்டி சின்னம்!



"14 ஆண்டுகள் காட்டுக்குப் போனது ராமன்னு கூடத் தெரியாதா உனக்கு?"

"சாரி சார்...! 14 தடவைன்னு நினைச்சு கோபால்னு எழுதிட்டேன்!"

— ரேவதி.



"டி.வி.யிலே இந்த மெகா சீரியல் முடியவே முடியாதுன்னு சொல்றியே எப்படி?"

"காமராஜ் ஆட்சி அமையும்வரை தொடரும்னு போடுறாங்களே!

— தஞ்சை தாமு

# வெள்ளம் 'விழுங்கிய' அரிசி மூட்டைகள்!




• கவர்னர் அலெக்ஸாண்டரிடம் தடய அறிவியல் துறைக்கான புதிய அலுவலகக் கட்டட சாவியைப் பெறுகிறார் சந்திரசேகரன்.

எங்கள் தடய அறிவியல் துறையை ஆதிகாலத்தில் 'பிணம் அறுக்கும் டிபார்ட்மெண்ட்' என்றுதான் சொல்வார்கள்! சந்தேகத்துக்குரிய மரணங்கள் நேர்ந்தபோது போஸ்ட்மார்ட்டம் செய்து அறிக்கை கொடுப்பது மட்டுமே எங்கள் பணியாக இருந்தது! இந்தத் துறைக்கு அதிக பட்சமாக இளநிலை பட்டப்படிப்பு படித்தவர்களே வந்தனர்.

இரண்டு பட்ட மேற்படிப்பு டிகிரியுடன் இந்தத் துறையில் உதவி இயக்குனராக பணியில் சேர்ந்தேன் நான்! சேர்ந்து ஆறு ஆண்டுகள் கழித்து, என்னை இயக்குனராகப் போட்டார்கள்.

அப்போது முதல்வராக இருந்தவர் டாக்டர் கலைஞர். கோப்பில் "இயக்குனர் பொறுப்புக்குத் தேர்ந்தெடுத்து நியமிக்கப்படுகிறார்" என்று முதல்வர் எழுதியிருந்ததாகச் சொன்னார்கள். அப்படி நான் நியமிக்கப்பட்டபோது, மொத்தமாக தடய அறிவியல் துறையில் 34 பேர்களே பணியில் இருந்தனர். சென்னையில், ஒரு முக்கிய சோதனைக்கூடமும், தமிழகத்தின் பிற இடங்களில் ஐந்து சோதனைக் கூடங்களும் இருந்தன.

22 வருடங்கள் கழித்து நான் ஓய்வு பெற்றபோது சென்னை சோதனைக்கூடத்தைப் பல்நோக்கு ஆய்வகமாக, பிரும்மாண்டமான முறையில் மாற்றினேன். தமிழக தடய அறிவியல் துறை 14 கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டது. ஆறு மண்டல சோதனைச் சாலைகளும், 26 நடமாடும் சோதனைக் கூடங்களும் உருவாக்கினேன். நூற்றுக்கணக்கானவர்கள் பணியில் இணைந்தனர். இந்தியாவிலேயே தமிழக தடய அறிவியல் துறைதான் மிகச் சிறந்தது எனப் பெயர் வாங்கியது. போலீஸ் துறையிலிருந்து விடுபட்டு சுயேச்சையாக இயங்கியது தடய அறிவியல் துறை.

'குற்றம் சார்ந்த அறிவியல்' என்று வழங்கப்பட்டு வந்த forensic science பிரிவை "தடய அறிவியல்" என்று பெயர்

தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்



மாற்றி அமைத்தேன்.

மன நிறைவோடு ஓய்வு பெற இருந்த எனக்குப் பதவி நீட்டிப்பு கொடுத்தார்கள். இதற்குக் காரணம் ராஜீவ்காந்தி கொலை வழக்கு முடியாமல் இருந்ததுதான். என்னைப் போன்ற துறைத் தலைவராக இருந்தவர்களுக்குப் பதவி நீட்டிப்பு கொடுக்கும் போது புதிய நிபந்தனைகள் போட்டு புது நியமனம் போல நீட்டிப்பு தர வேண்டும். ஆனால் விரிவாக இல்லாமல், ஒரு சாதாரண ஆணை மூலமே பதவி நீட்டிப்பு கொடுத்து விட்டார்கள். அப்படிக் கொடுத்த ஆறு மாதங்களுக்குப் பிறகு உள்துறைச் செயலகத்திலிருந்து எனக்கு அனுப்பிய கடிதத்தைக் கண்டு நான் கொந்தளித்துப் போனதற்குக் காரணம் அந்தக் கடிதத்தில் எனக்கு இடப்பட்டிருந்த கட்டளைகள் தான்.

"நீங்கள் பத்திரிகைகளுக்கும், தொலைக் காட்சிகளுக்கும் பேட்டி கொடுக்கக் கூடாது; ஆராய்ச்சியில் ஈடுபடக் கூடாது; சென்னை பல்கலைக் கழகத்தில் தடய அறிவியல் பாடம் எடுக்கக் கூடாது" - இவைதான் எனக்கிடப்பட்டிருந்த கட்டளைகள்.

உடனே அரசுக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன். "இந்தத் துறையைப் பொறுத்த மட்டில் உலகம் பாராட்டும் ஒரு தமிழனாக நான் இருக்கிறேன். அரசின் கட்டளைகளை ஏற்று என்னால் செயல்பட இயலாது; அரசுக்கு இதில் உடன்பாடில்லாவிடில் என்னை விடுவித்து விடலாம்" என்று அதில் சொல்லியிருந்தேன்.



"எனக்குப் புடிச்ச பாட்டு 'மலர்ந்தும் மலராத பாதி மலர் போல' பாட்டுத் தான்!"

"சரி சரி; பாசமலருக்குப் பிறகு எந்த சினிமாவுக்கும் உன்னை நான் கூட்டிட்டுப் போகாததை சும்மா சும்மா ஞாபகப் படுத்திக்கிட்டிருக்காதே!"

— உ. ராஜாஜி

அதன்பின் தலைமைச் செயலகத்தில் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. ஒருநாள் மாலை நாலரை மணிக்கு என்னை 'விடுவித்து' விடுவதாக ஆணை வந்தது. அடுத்த ஒரு மணி நேரத்தில் ரிலீவ் செய்து விட்டார்கள். என்னை விடுவித்த விவகாரத்தில் முதல்வர் ஜெயலலிதாவுக்கு முழு விவரமும் சொல்லப்பட்டதா என்பது தெரியவில்லை. என்னை விடுவித்த பிறகு தடய அறிவியல் துறை மீண்டும் காவல் துறையுடன் இணைக்கப்பட்டு விட்டது.

தடய அறிவியல் துறையில் என்னை விடுவித்த இரண்டொரு நாளில் அண்ணா பல்கலைக் கழகத்தில் தடய பொறியியல் பட்ட மேற்படிப்புப் போதிக்கும் பேராசிரியராகப் பணியில் சேர்ந்து விட்டேன். இது போன்ற பட்ட மேற்படிப்பு உலகில் நான்கு நாடுகளில்தான் இருக்கிறது. இந்தியாவில் அண்ணா பல்கலைக் கழகத்தில் மட்டும் தான் இருக்கிறது.

துணைவேந்தர் ஆனந்த கிருஷ்ணனோடு இணைந்து இதற்கான ஏற்பாடுகளை நான் ஏற்கனவே செய்திருந்தேன். விடுவித்த பிறகு உடனடியாக அண்ணா பல்கலைக் கழகத்தில் பொறுப்பு ஏற்றுக் கொண்டது, கோட்டையில் உட்கார்ந்து என்னை "படுத்திக் கொண்டிருந்த" அதிகாரிக்குப் பொறுக்கவில்லை.

உடனே துணைவேந்தருக்கு "எப்போது அவர் வேலைக்கு மனு போட்டார்? எங்களிடம் இது பற்றிச் சொல்லி அனுமதி வாங்கவில்லை" என்று கோட்டையிலிருந்து கடிதம் எழுதினார்கள்.

"ஐயா இது மனு போட்டு கொடுக்கிற வேலை இல்லை. அவரின் தகுதிகளைப் பார்த்து பல்கலைக்கழக சிண்டிகேட், யுஜிசி ஆகியவை அங்கீகரித்து கொடுக்கும் வேலை" என்று துணைவேந்தர் உள்துறைச் செயலரிடம் விளக்க வேண்டியிருந்தது.

**த**டயப் பொறியியல் என்றால் என்ன?

ஒரு மரணம் எப்போது நிகழ்ந்தது. எப்படி நிகழ்ந்தது என்று சொல்வது தடய மருத்துவம். அதே சமயம், ஒரு கட்டடம் ஏன் இடிந்து விழுந்தது; அல்லது ஏன் உடைந்தது என்பதற்கான காரணங்களை ஆராய்ந்து சொல்வது தடய பொறியியல். இந்தச் சமயத்தில் ஒரு முக்கியமான வழக்கு என் நினைவுக்கு வருகிறது.

திருக்கோவிலூர் பக்கத்தில் அரகண்டநல்லூர் என்றொரு கிராமம். முற்றிலும்

பட்டிகாட்டு கிராமம் என்று சொல்லி விட முடியாது. நகரத்து வசதிகளையும் பெற்ற பெரிய கிராமம் என்று சொல்லலாம். அங்கு நுகர்பொருள் கழகத்தின் கிடங்கு ஒன்று இருந்தது. பத்தாயிரம் மூட்டைகளைச் சேமித்து வைக்கும் அளவுக்குப் பெரிய கிடங்கு. பத்தடிக்கு, பத்தடி உள்ள இரும்புக் கதவுகளுடன், ஆறடி உயர ஜன்னல்களுடனும் அமைக்கப்பட்டிருந்தக் கிடங்கு. அரகண்டநல்லூரரை ஒட்டினாற் போல்ஆறு. அங்கிருந்து ஆறேழு கி.மீ தள்ளி ஒரு அணை. ஒரு மழைக் காலத்தில், ஒரு வார மாகியும் மழை விடாமல், 'பெய்யென' பெய்து கொண்டிருந்தது. மழையுடன் சேர்ந்து காற்றும்.

தொடர்ந்து பெய்த மழையில் அணையின் ஒரு பகுதி உடைந்தது. ஆற்றில் வெள்ளம். பத்தடி உயரத்துக்கு ஊரில் தண்ணீர். குடிசை வீடுகள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன. கால்நடைகளுக்குச் சேதம்; வெள்ளம் வடிய ஆறு நாட்கள் பிடித்தது. கலெக்டரும், மற்ற அதிகாரிகளும், சேதத்தின் மதிப்பைக் கணக்கிட்டனர்.

நுகர்பொருள் கிடங்கின் பொறுப்பு அதிகாரி, கலெக்டரிடம் "கிடங்கில் வைத்திருந்தப் பத்தாயிரம் நெல் மூட்டைகள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு விட்டதாக அறிக்கை கொடுத்தார். கலெக்டருக்கு ஷாக்!

வெள்ளத்தின் போக்கு, கிடங்கைச் சுற்றியிருந்த சேதம், ஆகியவற்றைப் பார்த்த கலெக்டருக்கு மட்டும் "ஏதோ 'கோல்மால்' நடந்திருப்பதாகப் பட்டது. உண்மையைக் கண்டறிய என் உதவி கோரப்பட்டது.

நான் சென்று பார்வையிட்டேன். நெல் மூட்டைகள் அடித்துச் செல்லப்பட்டதற்கான சிறு தடயமும் இல்லை. வெள்ளம் கிடங்கின் உள்ளே புகுந்து மூட்டைகள் அடித்துச் செல்லப்பட்டிருந்தால், கிடங்கின் கதவுகளும், ஜன்னல் கதவுகளும், தாறுமாறாக உடைபட்டிருக்கும். அதற்கான அடையாளமே இல்லை. அதற்கு மாறாக, ஜன்னல் கீல்களிலுள்ள ஸ்குரு ஆணிகள் ஸ்குருடிரைவரின் மூலம் முறையாக நீக்கப்பட்டு, ஜன்னல் கதவுகள் அகற்றப்பட்டிருப்பது புரிந்தது. ஆனால் நடந்தது என்ன என்று நிரூபித்தாக வேண்டுமே!

சிவில் என்ஜினியர்கள் துணையுடன் சென்னை அருகே உள்ள பூண்டி நீர்த்தேக்கத்தின் கீழே, அரகண்டநல்லூர் போன்றே உயரம், பள்ளம் ஆகியவற்றைக் கணித்து, வீடுகள், கடைகள், கோயில், அலுவலகம், கிடங்கு போன்றவற்றை அமைத்தோம். சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் முன்னால், அணையிலிருந்து தண்ணீரைத் திறந்துவிட்டோம். என்ன ஆச்சர்யம்! கிடங்கின் வாசலுக்கு வந்த வெள்ளம், உள்ளே புகாமல், இருபுறமும் பிரிந்து ஓடி மறுபடி கிடங்கின் பின்புறம் ஒன்று சேர்ந்துகொண்டது. நெல் மூட்டைகளை அடித்துச்செல்லும் அளவுக்கு நீரில் வேகமோ சுழற்சியோ இல்லை. அதிகாரிகளுக்குப் பளிச்சென விளங்கி விட்டது.

கிடங்குக்குப் பொறுப்பான அதிகாரியும், அவர் கீழிருந்த ஊழியர்களும், வெள்ளம் வருவதற்குப் பல நாட்களுக்கு முன்னரே திருட்டுத்தனமாக மூட்டைகளை விற்று விட்டிருந்தார்கள்! காவல் துறை விசாரித்தபோது உண்மை வெளிப்பட்டு விட்டது!

**திருநெல்வேலி மாவட்டம் பாளையங்கோட்டையில் இருக்கும் பிரபலமான சர்ச் 'ஹோலி டிரினிட்டி'. இந்த ஆலயம் 1826ம் ஆண்டு கட்டப்பட்டது. இந்தச் சர்ச்சுக்கான 'ஆலயமணி' இங்கிலாந்திலிருந்து 1850ம் ஆண்டு வரவழைக்கப்பட்டது. இந்த மணியில் சில வருடங்களுக்கு முன்பு விரிசல் ஏற்பட்டது. அதனை சரி செய்ய ஆலய நிர்வாகம் முயன்று கொண்டிருந்தது. இதனை எப்படியோ கேள்விபட்ட இங்கிலாந்தின் லெய்ஸெஸ்டர் பகுதி மக்கள் ஒன்று சேர்ந்து 300 கிலோ எடையுள்ள புதிய மணி செய்து கப்பலில் அனுப்பி வைத்து விட்டார்கள். இந்த ஆண்டு மே 1ம் தேதி பொருத்தப்பட்டது.**



**தகவல் : கோவி. இராஜேந்திரன்**

ஒருமுறை சேப்பாக்கம் மைதானத்தில் பரபரப்பாக நடந்துகொண்டிருந்த கிரிக்கெட் போட்டியில் ஒரு சர்ச்சை. ஒரு அணியின் விக்கெட்டுகள் மட மடவெனச் சரிந்து கொண்டிருந்தன. எதிரணி பந்து வீச்சாளர்கள் வீசிய பந்தில் ஏதோ ரசாயனம் தடவி வீசியதால் தான் இப்படி நடக்கிறது என்று பரபரப்பாகப் பேசப்பட்டது. என் உதவி கோரப்பட்டது.

(தொடரும்)

ஜி.ஆர். சுரேந்திரநாத்

# கொடிது...

மொட்டை மாடியில் நின்றபடி, வீதியில் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் மனிதர்களைக் கவனித்தேன். எல்லோரும் இழந்தவை தெரியாமலே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆற்றில் குதித்து, எதிர்கரைக்குச் சென்று பூப் பறிக்காமலே பையன்கள் வளர்கிறார்கள். மார்கழி மாதத்தில் தெருவடைத்துக் கோலம் போடாமலே பெண்கள் வளர்கிறார்கள். குஷியாகக் குதிரை வண்டியில் செல்லாமலேயே குழந்தைகள் வளர்கிறார்கள். வரவர சென்னை வாழ்க்கை சலிப்பாகத்தான் இருக்கிறது.

மொட்டைமாடியில் ஒரு பகுதியிலிருக்கும் என் வீட்டு ஜன்னலை நோக்கி குரல் கொடுத்தேன்.

"சௌமி... கௌம்பிட்டியா?" என்றேன்.

''இதோ வந்துட்டேன்.'' என்றபடி வெளியே வந்தாள் சௌம்யா.

வீட்டைப் பூட்டிக் கொண்டு கீழே இறங்கினோம்.

''டாக்டர்கிட்ட கும்பலா இருக்குமா?'' என்றாள் சௌம்யா.

"ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்தானே... அப்படி ஒண்ணும் கும்பல் இருக்காது" என்றேன்.

"ஏன் தெரியுமா இப்படி வந்திருக்கு?" என்று சௌம்யா தனது கீழுதட்டிற்குக் கீழ் விரலை வைத்துக் காண்பித்தாள்.

அங்கு சின்னதாக, வட்டம் போன்று, சற்று பெரிய வேர்க்குருபோல் தடித்திருந்தது.

"ஏன்?" என்றேன்.

"பல்லி மூத்திரம் பட்டுதான் இப்படி வந்திருக்க" என்றாள் அதிரடியாக.

"சீ... லூசு மாதிரி உளறாத. ஏதாச்சும் வைரஸ் இன்ஃபெக்ஷனா இருக்கும்."

"அய்யோ... உங்களுக்குத் தெரியாது. எங்க பாட்டி சொல்லியிருக்காங்க."

பாட்டி சொல்லியிருக்காங்களா? அவ்ளோதான். இனி கடவுளே வந்து இதை எதிர்த்துச் சொன்னாலும், என் மனைவி ஒத்துக் கொள்ளமாட்டாள். எனவே மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் நடந்தேன்.

நான் எதிர்பார்த்தபடியே டாக்டர் க்ளினிக்கில் அதிகமாகக் கும்பல் இல்லை. ஒரு நாலைந்து பேர் இருந்தார்கள். காலியாக இருந்த சேர்களில் அமர்ந்தோம்.

முதலாவதாக அமர்ந்திருந்த ஒரு பெரியவர், தனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு அம்மாவிடம், ''எனக்கு ஒண்ணும்

அவசரமில்லைங்க. அடுத்து நீங்க போங்க, நான் அப்புறமா போய்க்குறேன்." என்றார்.

அந்தம்மா வாயெல்லாம் பல்லாக, "ரொம்ப தேங்கங்க" என்று கூற, இருவரும் இடம் மாறிஅமர்ந்து கொண்டனர்.

எனக்கு ஆச்சரியமாயிருந்தது. ஆளாளுக்கு அவசரமாகப் பறக்கும் இந்த நகரில் யார் இப்படி விட்டுக் கொடுப்பார்கள்?

இப்பொழுது பெரியவர், அந்தம்மாளிடம் முன்னே செல்ல அனுமதி கொடுத்த உரிமையில் பேச ஆரம்பித்தார்.

"நான் ரிட்டையர்ட் ரயில்வே எம்ப்ளாயி. வீட்டுல போயி சும்மாதான உக்காந்திருக்கப் போறேன். உங்களுக்கு வேற ஏதும் வேலையிருக்கும். இப்பல்லாம் எங்க போனாலும் காத்திருக்க வேண்டியதா இருக்கு. மெட்ராஸ்ல ஜனங்க அதிகமாயிட்டாங்க. ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்டுங்கறதால இங்க கும்பல் கம்மியா இருக்கு. இப்ப ஜனமெல்லாம் கார்டியாலஜிஸ்ட்டுகிட்டதானே குவியது."

அந்த அம்மாள் ஆமோதிப்பது போல் தலையை அசைத்தார்.

சரி... பெருசு சக்கையா ப்ளேடு போடப் போகுது என்று நினைத்துக் கொண்டேன். இந்தப் பெரியவர்களிடம் எனக்கு இதுதான் பிடிப்பதேயில்லை. பொது இடத்தில் தனக்கு சம்பந்தமில்லா மனிதர்களுடன் வளவளவென்று பேசுவதைக் கண்டாலே எரிச்சலாக இருக்கும். பெரியவர் தொடர்ந்து பேசினார்.

"ஜனம் நெருக்கமில்லாம, மரம், காத்துன்னு இருந்தாதானே வியாதி வராம இருக்கும். இப்பதான் மரத்தையெல்லாம் இடிச்சு, கட்டடமாக் குறாங்களே.. உங்களுக்கெல்லாம் ஒரு விஷயம் தெரியாது.."

"போச்சுடா..." என்றேன் மனைவியிடம்.

"இப்ப திருவள்ளுவர் பஸ் ஸ்டாண்ட் இருக்கே... அங்க ரொம்ப வருஷத்துக்கு முன்னாடி ஒரு பார்க் இருந்துதுன்னா உங்களால நம்பவே முடியாது. அவ்னோ மரம். சாயங்காலம் போய் உக்காந்தா காத்து பிச்சிகிட்டு வீசும். இப்ப சாயங்காலம் அந்த இடத்துல போய் ஒரு



# கொடிது...

நிமிஷம் கூட நிக்கமுடியாது'' என்றார் பெரியவர்.

நான் கேள்விப்படாத புது விஷயமாக இருந்தது.

"அப்பல்லாம் இவ்வளவு ஜனங்க கிடையாது. சத்தம் கிடையாது. பெட்ரோல் புகை கிடையாது. நோய் நொடியில்லாம இருந்தோம். இப்ப அப்படியா? அப்படி என்னத்த இங்க கொட்டி வச்சுருக்குன்னு தெரியல. இப்ப இவ்ளோ ஜனங்க வந்துட்டாங்க.'' என்றார் பெரியவர்.

பார்ப்பவர்களிடம் பழங்கதை பேசுவதையே வாடிக்கையாகக் கொண்டிருக்கும் பெரியவர்களைச் சகித்துக் கொள்வது கஷ்டமான காரியம். எரிச்சலுடன் அவரைக் கவனித்தேன்.

உள்ளே போயிருந்த பேஷன்ட் வெளியே வர, அந்தம்மாள் உள்ளே சென்றார். சரி பெரியவர் அடுத்து டாக்டரைப் பார்த்து விட்டு கிளம்பி விடுவார் என்று நிம்மதியாக இருந்தேன். பெரியவர் என் நினைப்பில் மண்ணை வாரிப் போட்டார்.

பக்கத்திலிருந்த சுடிதார் பெண்ணிடம், ''அடுத்து நீ போம்மா, அடுத்து நான் போய்க்கிறேன்'' என்று கூற, நான் அதிருப்தியுடன் என் மனைவியை நோக்கினேன். அவள் "நல்லா மாட்டுனியா?" என்பது போல் சிரித்தாள்.

எரிச்சலாக இருந்தாலும் ஒரு பக்கம் ஆச்சரியமாகவும் இருந்தது. ஒரு நிமிஷம் சிக்னலில் நிற்கக் கூட பொறுமையின்றி ஓடும் மனிதர்கள் நிறைந்த நகரில் இப்படி ஒரு மனிதரா?

பெரியவர் அந்தப் பெண்ணிடம், "நீ வேலைக்குப் போறியாம்மா?" என்றார்.

"ஆமாம் சார்."

"எங்க வேல பாக்குற?"

"சிட்டி பேங்க்."

"ம்... என் மருமவளும் ஒரு ப்ரைவேட் கம்பெனிக்குப் போறா. நான் சொல்றேன்னு தப்பா நினைச்சுக்கக் கூடாது பாப்பா...'' என்று அந்தப் பெண்ணை நோக்கி கூறிவிட்டு, மீண்டும் பொதுவாக அனைவரையும் பார்த்து பேசினார். "இந்த காலத்துப் பொண்ணுங்க சுதந்தரம்னு நினைச்சுகிட்டு, மேலும் மேலும் விலங்குப் போட்டுக்கறாங்க. என் மருமவளும் வேலைக்குப் போறா. ஒம்பது மணி ஆபீசு, காலைல அஞ்சரைக்கு எழுந்திரிச்சு ரெண்டு வேளைக்குச் சமைச்சுட்டு, பசங்கள ஸ்கூலுக்குக் கிளப்பி, தல நனையாம குளிச்சுட்டு, பறக்க, பறக்க ஓடுவா. சாயங்காலம் வந்து மறுபடியும் சமையல், தூக்கம், மறுநாள் ஓட்டம். இப்படி போய்க்கிட்டிருக்கு. அமெரிக்காவுல எல்லாம் வேலைக்குப் போறாங்கன்னா, புருஷன்காரன் அவனே ரெண்டு பிரட்ட ரோஸ்ட் பண்ணி தின்னுட்டு போயிடுவான். நம்ப ஆம்பளைங்களுக்குப் பொண்டாட்டி கொண்டு வந்து கொடுக்கற பணமும் வேணும், வக்கணையா சாம்பாரு, ரசத்தோட சாப்பாடும் வேணும். லேடீஸ்க்குதான் கஷ்டம். சுதந்தரம் வேற. வேலைக்குப் போறது வேற... இது புரியல... வீடு முழுகும் சாமான நெறச்சி வைக்குறாங்க. அதான் பலன்'' என்றார்.

எனக்குப் பெரியவர் பேச்சு பிடிக்கவில்லை. தனது காலத்தில் ரெண்டு பேர் சம்பாதித்து சொகுசாக வாழ முடியாத கையாலாகத்தனம்தான் பெண்கள் வேலைக்குச் செல்வதில் உள்ள நெகடிவ் பாயிண்ட்சை மட்டும் பெரிது படுத்தி பேச வைப்பதாகத் தோன்றியது.

நான் எரிச்சலுடன் என் மனைவியிடம் "பெரிசு வந்தமா... டாக்டர பாத்தமான்னு போகாம கழுத்தறுக்குது" என்றேன். "உங்களுக்குப் பிடிக்கலன்னா காத மூடிக்குங்க. அவர் பாட்டுக்குப் பேசறது உங்கள என்ன பண்ணப்போகுது?" என்றாள் சௌம்யா.

பெரியவர் சுடிதார் பெண்ணை உள்ளே போகச் சொல்லிவிட்டு, அதற்குப் பிறகும் டாக்டரை பார்க்கும் உத்தேசமின்றி, அடுத்து போகும்படி ஒரு கண்ணாடிக்காரரிடம் சொல்லிக் கொண்டிருந்தார். நான் அலுப்புடன் எழுந்து கேட்டருகே இருந்த மரத்தடிக்குப் போய் நின்று கொண்டேன்.

சில நிமிடங்கள் கழித்து மீண்டும் இருக்கைக்கு வந்து அமர்ந்தேன். இப்பொழுது பெரியவர் என் மனைவியிடம் உரிமையுடன் பேசிக் கொண்டிருந்தார். என் மனைவி தனது அகன்ற கண்களை மேலும் விரித்து, சுவாரஸ்யமாக ஊர்க்கதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். என் மருமவன்ட்ட ஒன்னு சொன்னா

---

**''புறையேறும் போது உன் மாமியார் தலையில் நீ தட்டினதால அவங்க மயங்கி விழுந்துட்டாங்களா? என்னடி சொல்றே?''**

**''நான் தட்டினது பூரிக்கட்டையால!''**

**– ஆலங்குளம் ரா. சாலமோன்**

---

போதும். முணுக்குன்னு கோபம் வந்திடும். நேத்து சாயங்காலம், இங்க பாரும்மா பிஸ் கெட்லாம் எறஞ்சு கெடக்குதுன்னேன். அவ் ளோதான், உள்ளே பாத்திரத்த எல்லாம் நங்கு நங்குன்னு வைக்குறா. "ஏன் சனியனே உயிர எடுக்குற'ன்னு பேரனப் போட்டு அடிச்சா. அந்த சொல்லும், அடியும் எனக்குன்னு தெரி யாம பேரன் அழுவுறான். என்ன பண்றது? தலையெழுத்துன்னு ஓட்டிகிட்டிருக்கேன்."

சௌம்யா, 'சித்தி' சீரியல் பார்க்கும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தாள். கண்களில் இரக்கம் பொங்கி வழிந்து கொண் டிருந்தது.

"ஆனா பொண்ண நல்லபடியா கட்டிக் கொடுத்துட்டன்ம்மா. திருச்சில இருக்கா. மாப்பிள்ளைக்கு எல்.ஐ.சி.ல வேல. சௌக்கி யமா இருக்கா. ரெண்டு மாசத்துக்கு ஒருதடவ போய்ப் பாத்துட்டு வருவேன்" என்று கூறி



விட்டு, பெரியவர் ஓய்வாக சேரில் சாய்ந்து அமர்ந்து கொண்டார்.

எனக்கு சலிப்பாக இருந்தது. கண்ணாடிக் காரர் உள்ளே சென்றவுடன், பெரியவர் எங் களை நோக்கி, "அடுத்து நீங்க போய்டுங்க" என்றார்.

எனக்கு ஆத்திரமாக வந்தது. வேற யாராச் சும் வந்தா அறுக்கவா என்று நினைத்துக் கொண்டு, "இல்லல்ல. எங்களுக்கு ஒண்ணும் அவசரமில்ல. நீங்க ரொம்ப நேரமா வெய்ட் பண்றீங்க. நீங்க போய்ட்டு வந்திடுங்க" என்றேன்.

பெரியவர் முகம் ஏனோ தெரியவில்லை, அதிர்ச்சியடைந்தாற் போல் மாறியது. பதற் றத்துடன் பெரியவர் வேக வேகமாக, "நோ...நோ... எனக்கு ஒரு வேலையும் இல்ல. நீங்க போய்ப் பாருங்க" என்றார்.

என் மனசிற்குள் பிடிவாதம் அதிகமா னது. கட்டாயம் அவருக்கு முன்னால் போவதில்லை என்று முடிவெடுத்தேன்.

"இல்ல சார். எங்களுக்கும் ஒரு வேலையும் இல்ல. நீங்க போங்க" என்றேன் கண்டிப்பாக.

"இல்ல தம்பி..." என்று இழுத்த பெரிய வரிடம்,

"நீங்க போங்கன்னு சொல்றேன்ல்ல" என்றேன் அதட்டலாக.

சில வினாடிகள் விழித்த பெரியவர், எழுந்து கேட்டை நோக்கி நடக்க ஆரம்பித் தார்.

நான் பின்னாலேயே சென்றேன். "ஏன் சார் டாக்டர பாக்கல?" என்றேன்.

"இல்ல தம்பி" என்றார் அமைதியாக.

"ஏன்?" என்றபடி, கேட்டை மறித்தாற் போல் நின்று கொண்டேன். அவர் பதில் சொல்லாமல் செல்ல அனுமதிப்பாக இல்லை.

சுற்றும் முற்றும் பார்த்த பெரியவர், இலேசாகக் கண்கள் கலங்க, "நான் டாக்டர பாக்க வரல தம்பி. வீட்டுல மகன், மருமவ, பேரப்புள்ளங்க யாரும் என்கிட்ட ஒரு வார்த்த கூட பேசறதில்ல தம்பி. சோறு போட்டா போதும்ன்னு நெனச்சுக்கிட்டிருக் காங்க. மத்தபடி நான் ஒரு மனுஷன் அங்க இருக்கன்னு மதிச்சு பேசறதேயில்ல. என் வயசு சொந்தக்காரங்க, ஃப்ரண்ட்ஸ்ங்க எல்லாம் மேல போயாச்சு. சில தடவ ரெண்டு நான் கூட- ஒரு வார்த்தை கூட பேசாம இருந்திருக்கேன். அப்படியே பேசாம இருந்தா பைத்தியம் புடிச்சிடும் போல இருக் கும். இந்த டாக்டர்கிட்ட ரூமுக்கு வெளிய டோக்கன் குடுக்கறவன், நர்சுன்னு யாரும் இருக்கமாட்டாங்க. அதான் டெய்லி சாயங் காலம் வந்து டாக்டர பாக்கற மாதிரி, எல்லா ரையும் முன்னாடி அனுப்பறது. அதனால வந்திருக்கறவங்க மரியாதையா ரெண்டு வார்த்த பேசுவாங்க. மனசுக்குத் திருப்தியா இருக்கும். இந்தப் பேச்சு கூட இல்லன்னா எனக்கு என்னிக்கோ பைத்தியம் புடிச்சிருக் கும். நீங்க திடீர்னு உள்ள போகமாட் டேன்னு சொல்லிட்டீங்க. வேற யாரும் இல்ல. என்ன பண்றதுன்னு புரியல. அதான் வந்துட்டேன். ரொம்ப சங்கடமா இருக்கு தம்பி. இனிமே இங்க வரமாட்டேன் தம்பி..." என்ற பெரியவர், உண்மையைச் சொல்ல நேர்ந்த அவமானத்தில், பொங்கி வந்த அழு கையை அடக்கியபடி, என்னைத் தாண்டி ரோட்டில் இறங்கினார்.

எனக்கு சில வினாடிகள் வார்த்தைகளே வரவில்லை. மனசு முழுவதும் அவர் மேல் கோபப்பட்ட குற்ற உணர்வு. இப்பொழுது அவருடன் நீண்ட நேரம் பேசவேண்டும் போல தோன்றியது. ●

# பொன்னியின் செல்வன்



முப்பத்து நான்காம் அத்தியாயம்

## "போய் விடுங்கள்!"

"ஐயோ! பிசாசு!" என்ற பீதி நிறைந்த குரல் வந்த திசையை நோக்கி வந்தியத்தேவன் விரைந்து ஓடினான். ஓடும்போதே அவன் உள்ளத்தில் "இது மணிமேகலையின் குரல் அல்லவா? இவள் எதற்காக இந்நேரத்தில் இங்கு வந்தாள்? எதைப் பார்த்துவிட்டு இப்படி அலறினாள்? பிசாசு என்பது ஒன்று இருக்க முடியாது. பின் என்னவாயிருக்கும்? குரலில் உண்மையான பயம் தொனித்ததே? அவளை இப்போது நாம் அணுகிச் செல்வதிலிருந்து ஏதாவது தொல்லை ஏற்படுமோ? அவளுடைய தமையனோ நம்மைக் கடித்துத் தின்றுவிட வேண்டுமென்றிருக்கிறான். ஆதித்த கரிகாலர் வெறி கொண்டிருக்கிறார். பழுவூர் ராணி மனத்தில் என்ன வஞ்சம் வைத்திருக்கிறாளோ, ஒன்றும் தெரியவில்லை...!" என்ற எண்ணங்கள் துரிதமாகத் தோன்றி மறைந்தன. இப்படி உள்ளத்தில் கலக்கம் இருந்தபடியால் அவன் கவனக்குறைவு அடைந்திருந்தான். திடீரென்று ஒரு பன்னீர் மரத்தின் வேர் தடுக்கித் தரையில் விழுந்தான். மேல் துணியின் தலைப்பு பக்கத்திலிருந்த பூம்புதரில் சிக்கிக் கொண்டது. விழுந்தவன் சமாளித்து எழுந்து உட்கார்ந்து அங்கவஸ்திரத்தை மெள்ள எடுக்க முயன்றான். எத்தனையோ பகைவர்களும் சதிகாரர்களும் செய்ய முடியாத காரியத்தை இந்தச் சிறிய மரத்தின் வேர் செய்து

**அமரர் கல்கி**

விட்டதே, நம்மைக் கீழே தள்ளி விட்டதே, இது ஏதேனும் அபசகுனத்துக்கு அறிகுறியோ, அல்லது நம்மை ஆபத்துக்கு உள்ளாக்காமல் இந்த மர வேர் தடுத்து ஆட் கொள்கிறதோ என்று எண்ணி வந்தியத்தேவன் தனக்குத் தானே புன்னகை புரிந்துகொண்டான்.

அச்சமயம், "அம்மா! அம்மா! எங்கே இருக்கிறீர்கள்?" என்ற குரல் கேட்டது. அது சந்திரமதியின் குரல்.

"இங்கேதானடி இருக்கிறேன். அல்லிக்குளத்தின் அருகில் இருக்கிறேன்! சீக்கிரம் வா!" என்றது மணிமேகலையின் குரல்.

காலடிச் சத்தங்கள் கேட்டன; காலில் அணியும் நூபுரங்களின் இனிய ஒலிகளும் கேட்டன.

அல்லிக்குளம் என்று மணிமேகலை கூறியது அந்தப் பூங்காவனத்தின் மத்தியில் செய் குன்றத்தின் அருகில் இருந்த சிறிய பளிங்குக்கல் தடாகத்தைத்தான். அந்தக் குளம் அல்லிப் பூவின் வடிவத்தில் அமைக்கப்பட்டிருந்தது. அதில் சில அல்லிக்கொடிகளும் செங்கழுநீர்க் கொடிகளும் இருந்தன. அச் சமயம் சில மலர்களும் இருந்தன. இந்த அல்லிக் குளத்தை முன்னமே வந்தியத்தேவன் பார்த்திருந்தான். அதன் அருகிலே தான் அவனும் விழுந்திருக்க வேண்டும்! நல்ல வேளையாக, அப் பெண்கள் இருவரும் அவனைக் கவனிக்கவில்லை. பகல் வேளையாக இருந்து அவர்கள் அவன் விழுந்ததைப் பார்த்திருந்தால் கலகல வென்று சிரித்து அவனுடைய மானம் போகும்படி செய்திருப்பார்கள். இப் போது மணிமேகலையின் துணைக்குச் சந்திரமதி வந்து விட்டபடியால், அந்தப் பெண்களுக்குத் தெரியாமலேயே அவன் அங்கிருந்து நழுவிப் போய் விடலாம்.

இதற்கிடையில் அந்தப் பெண்களின் பேச்சு அவன் காதில் விழுந்தது.

"அம்மா! எதைக் கண்டு பயந்தீர்கள்? ஏன் அப்படிக் கூச்சலிட்டீர்கள்?" என்றாள் சந்திரமதி.

"அடியே! அந்த மதிள் சுவரைப் பாரடி! அதன் மேலே ஏதோ தெரிந்தது. தலையில் சடையும் முகத்தில் தாடியும் மீசையுமாக ஓர் உருவம் தெரிந்தது. அதன் கழுத்தில் – சொல்லப் பயமாயிருக்கிறதடி! – மண்டை ஓட்டு மாலை ஒன்று அணிந்திருந்தது! நான் கூச்சலிட்டதும் அது மறைந்துவிட்டது!" என்றாள் மணிமேகலை.

"நன்றாயிருக்கிறது, இளவரசி! தங்களுடைய மனப் பிராந்திதான் அது! பேயும் இல்லை, பிசாசும் இல்லை! உயரமான மதிள் சுவரின் மேல் யாரும் வந்து உட்கார்ந்திருக்கவும் முடியாது" என்றாள் சந்திரமதி.

"இல்லையடி! என் மனப்பிராந்தியில் அப்படிப் பேய் பிசாசு ஒன்றும் தோன்றுவது வழக்கமில்லை..."

"ஆமாம்! மன்மதனையொத்த வடிவழகரின் முகந்தான் உங்கள் கனவிலும் நனவிலும் தோன்றுவது வழக்கம்!"

"சீச்சீ! இப்போது கூட உனக்கு விளையாட்டா?"

"பின், எப்போது விளையாடுவது? முன் மாலை நேரத்தில் பூங்காவனத்தில் அல்லிக் குளத்தினருகே வந்து காத்திருக்கிறீர்கள். முல்லை மலர்களின் மணம் கம்மென்று வீசுகிறது... ஆனால், பாவம், என்ன செய்கிறது? தாங்கள் வல்லத்து இளவரசரை எதிர்பார்த்துக் கொண்டிருக்க, மீசையும் தாடியும் உள்ள பிசாசு வந்து சேருகிறது!"

"போதும் போதாததற்கு நீயும் வந்து சேருகிறாய்!"

"என்னைப் பார்த்து விட்டுத்தான் அந்தப் பிசாசு பயந்து ஓடி விட்டதோ, என்னமோ? கடம்பூர் அரண்மனைப் பணிப்பெண் சந்திரமதியைக் கண்டால் பேய் பிசாசுகள், பூதங்கள், வேதாளங்கள் எல்லாம் பயந்து ஓடும் என்பது உலகப் பிரசித்தியாயிற்றே!"

"சந்திரமதி! உன் வேடிக்கைப் பேச்செல்லாம் இப்போது வேண்டாம். உண்மையாகவே நான் அந்த மதிள் சுவரின் மேல் கோரமான ஓர் உருவத்தைப் பார்த்தேன். நீ நம்பா விட்டால், வேண்டாம்! நீ போன காரியம்



என்ன ஆயிற்று என்று சொல்லு!''

"போன காரியம் பலிக்கவில்லை, இளவரசி!''

"ஏன்? ஏன்?''

"காஞ்சி இளவரசரும் கடம்பூர் இளவரசருந்தான் அங்கே கூடிக் கூடிப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். வல்லத்து இளவரசரைக் காணவே காணோம்...''

''ஒருவேளை அவரையும் எங்கேயாவது அனுப்பி வைத்து விட்டார்களா, என்ன?''

''அப்படியும் தெரியவில்லை. தங்கள் தந்தையும் பல்லவருந்தான் மலையமான் அரசரை எதிர்கொள்ளப் போயிருக்கிறார்கள். இடும்பன் காரியைக் கேட்டேன். இன்று சாயங்காலம் கரிகாலர் வல்லத்தரசர் மீது ஏதோ எரிந்து விழுந்தாராம்...!''

"அவருக்குப் பைத்தியந்தான் பிடித்திருக்கிறது. எல்லார் பேரிலும் எரிந்து விழுகிறார். பிறகு...?''

"இன்றைக்கு இனிமேல் என் முகத்தில் விழிக்காதே! நாளைப் பொழுது விடிந்த பிறகு வா!' என்று சொல்லி அனுப்பி விட்டாராம்!"

"பின்னர் அவர் எங்கே போயிருப்பார்?" என்றாள் மணிமேகலை.

"இந்த மாளிகை மதிள் சுவருக்குள்ளேதான் எங்கேயாவது அலைந்து கொண்டிருக்க வேண்டும். அதனால் தான் சொன்னேன். ஒருவேளை அவரே பிசாசு போல் வேஷம் போட்டுக் கொண்டு தங்களைப் பயமுறுத்தினாரோ என்று."

"இல்லை; இந்த அரண்மனையில் வேஷக்காரர்கள் பலர் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் அவர் வேஷம் போட்டு ஏமாற்றுகிறவர் அல்ல..."

"இப்படித்தான் நம்மைப் போன்ற அபலைப் பெண்கள் புருஷர்களை நம்பி ஏமாந்து போவது வழக்கம்."

"அப்படியேயிருக்கட்டும். நீ மறுபடியும் போய்த் தேடிப் பார்! அரண்மனை மதிளுக்குள்ளேதானே எங்கேயாவது இருக்க வேண்டும்? இடும்பன் காரியையும் தேடிப் பார்க்கச் சொல்லு!"

"இளவரசி! அந்த இடும்பன்காரியைக் கண்டால் எனக்குப் பிடிக்கவேயில்லை. விழித்து விழித்துப் பார்க்கிறான். அவனிடம் எனக்குப் பயமாகக் கூட இருக்கிறது..."

"பேய் பிசாசுக்குப் பயப்படாதவள் இடும்பன்காரிக்குப் பயப்படுகிறாயே? போனால் போகட்டும். அவனிடம் ஒன்றும் சொல்லாமலிருப்பதே நல்லது. நீயே இன்னொரு தடவை போய்த் தேடிப் பார்த்து விட்டு வா!"

"அதுவரையில்..."

"நான் இங்கேயே இருக்கிறேன்..."

"மறுபடியும் அந்தப் பிசாசு இங்கு வந்தால்...?"

"உன் பெயரைச் சொல்லி விரட்டியடித்து விடுகிறேன்!"

சந்திரமதி அங்கிருந்து போவதற்கு அறிகுறியான நூபுரத்தின் மெல்லிய ஒலி கேட்டது.

இவற்றையெல்லாம் ஒருவாறு ஊகித்துக் கொண்டு... 

இவ்விதம் நடந்த சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவனுடைய மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றின. சுவரின் மேலிருந்து எட்டிப் பார்த்த 'பிசாசு' யாராகயிருக்கும் என்று யோசித்தான். ஆழ்வார்க்கடியான் காளாமுகனுடைய வேடம் தரித்து வந்து தன்னைக் காப்பாற்றியது அவன் நினைவு வந்தது. ஒருவேளை அந்த வீர வைஷ்ணவனாகவே இருக்குமோ? தஞ்சாவூரிலிருந்து தனக்கு ஏதேனும் முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறானோ? இங்குள்ளவர்களுக்கு அடையாளம் தெரியாமலிருக்க அப்படி வேஷம் தரித்து வந்திருக்கிறானோ?

மணிமேகலை தன்னைப் பார்க்க இவ்வளவு ஆவல் கொண்டிருப்பதின் காரணம் என்ன? எதற்காகத் தோழியை அனுப்பித் தேடி அழைத்துக்கொண்டு வரச் சொல்கிறாள்? அவன் விஷயத்தில் மணிமேகலையின் மனோநிலை அவனுக்கு ஒருவாறு தெரிந்திருந்தது. அதனாலேயே அவள் அருகில் அதிகமாக நெருங்காமலிருந்து வந்தான். கந்தமாறனுடைய பகைமையை இன்னும் தூண்டி விடாமலிருக்கவும் விரும்பினான். ஆயினும், இப்போது நந்தவனத்தில் வந்து தனிமையாக உட்கார்ந்து கொண்டு அவனை அழைத்து வரச் சொல்லியிருக்கிறாள். ஏதோ முக்கியமான காரியம் இல்லாவிட்டால் இவ்வளவு துணிச்சலான காரியத்தில் இறங்கியிருக்க மாட்டாள். பாவம்! அவளுக்கும் ஏதாவது சங்கடம் நேர்ந்திருக்கிறதோ, என்னமோ? அல்லது நந்தினி அவளிடம் ஏதாவது செய்தி சொல்லி அனுப்பியிருக்கலாம். கடவுளே! இங்கே, இந்தக் கடம்பூர் அரண்மனையில் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் மனத்தில் ஏதோ ஒன்றை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சற்று முன்னால் மணிமேகலை கூறியது ரொம்ப உண்மை. எல்லாருமே வஞ்சக வேஷதாரிகள். இவர்களுக்கு மத்தியில் இந்தப் பேதைப் பெண் அகப்பட்டுக் கொண்டு தின்

டாடுகிறான். பழுவூர் ராணி இந்தப் பெண்ணை எந்தத் தீய காரியத்துக்குப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறாளோ, தெரியவில்லை. ஆம்; மணிமேகலையின் மனத்தில் ஏதோ சந்தேகம் தோன்றி யிருக்க வேண்டும். ஏதோ ஓர் அபா யத்தை அவள் எதிர்பார்த்திருக்க வேண் டும். ஆகையினாலேயே அவள் தன்னு டைய உதவியை நாடுகிறாள்.

அந்தக் கள்ளங் கபடமற்ற பேதைப் பெண் முன்னொரு சமயம் தனக்குச் செய்த உதவியை வந்தியத்தேவன் நினைத்துப் பார்த்துக்கொண்டான். அவளுக்கு உண்மையாகவே ஏதேனும் துன்பம் நேர்ந்திருந்து தன்னுடைய உதவியைக் கோருவதாயிருந்தால், அதை மறுப்பது நன்றி கொன்ற பாதகம். எப்படியிருந்தாலும் உண்மையைத் தெரிந்து கொள்ளுவதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம். சந்திரமதி போய்விட்டாள்; மணிமேகலை தனியாக இருக்கிறாள். யார் கண்டது? அவளுடைய உதவி அவ னுக்கு மறுபடியும் தேவையாயிருக்கக் கூடும். அவளுடைய சகாயத்தினால் இந்தச் சூழ்ச்சி குடி கொண்ட அரண் மனையை விட்டுப் போக முடிந்தால் கூட நல்லதுதான். எதற்கும் அவளிடம் இச்சமயம் போய்க் கேட்டு உண் மையைத் தெரிந்து கொள்ளலாம்...

அல்லிக் குளத்தின் கரையிலிருந்த பளிங்குக்கல் மேடையில் மணி மேகலை உட்கார்ந்திருந்தாள். மேகங்கள் சூழ்ந்திருந்த வானத்தில் ஆங்காங்கு சில நட்சத்திரங்கள் சுடர் விட்டு ஒளிர்ந்தது போல் அல்லிக்குளத் திலும் அடர்த்தியாகப் படர்ந்திருந்த இலைகளுக்கு மத்தியில் மலர்கள் தலை தூக்கி நின்றன. சுற்றிலும் சூழ்ந்திருந்த இருளில், இரவில் பூக்கும் அம்மலர் களின் வெண்மை நிறம் நன்கு எடுத்துக் காட்டப்பட்டது. அல்லிக்குளத்துக்கு அப்பால் முல்லைப் புதர்களில் பாதி மலர்ந்த பூக்களும் மொட்டுக்களும் நீல நிற விதானத்தில் முத்துக்களைப் பதித்தது போல் காட்சி தந்தன.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த மணிமேகலை தனக்குப் பின்னால் காலடிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். மிகச் சமீபத்தில் வந்திருந்த உருவத்தைக் கண்டு அவசர மாக எழுந்தபோது கால் தடுமாறிப் பின்னாலிருந்த குளத்தில் விழப் போனாள்.

"ராஜகுமாரி! நான்தான்!" என்று கூறிக்கொண்டே வந்தியத்தேவன் மணி மேகலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

மணிமேகலையின் உடல் சிலிர்த்தது. இயற்கையாக ஏற்பட்ட கூச்சத்தினால் அவனுடைய கரங்களைப் பற்றி அப் பால் தள்ளி விட்டுத் தன்னை விடுவித் துக் கொள்ளப் பார்த்தாள். ஆனால் அதற்கு வேண்டிய பலம் அப்போது அவளுடைய கரங்களில் இல்லை!

அந்த முயற்சியில் மறுபடியும் பின் னாலே தான் சாயும்படி நேர்ந்தது.

வந்தியத்தேவன் இன்னும் கெட்டி யாக அவளைப் பிடித்துத் தாங்கி முன்பக்கமாகக் கொண்டு வந் தான்.

மணிமேகலை ஒரு பெரு முயற்சி செய்து தன்னைச் சுதாகரித்துக் கொண்டு, "விடுங்கள்! என்னைத் தொடாதீர்கள்!" என்று கோபக் குரலில் கூறினாள்.

வந்தியத்தேவன் அவளை விட்டு விட்டு "ராஜகுமாரி! மன்னிக்க வேண் டும்!" என்றான்.

மணிமேகலை இன்னமும் படபடப்பு நீங்காத தழதழத்த குரலில், "தங்களை நான் எதற்காக மன்னிக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

"திடீரென்று வந்து தங்களைத் திடுக் கிடச் செய்ததற்காகத்தான்!"

"வந்ததுதான் வந்தீர்கள்! எதற்காக என்னைத் தொட்டுப் பிடித்துக் கொள்ள வேண்டும்?" என்று மணி மேகலை கேட்ட குரலில், அவள் தன்னை நன்றாகச் சுதாகரித்துக் கொண்டு விட்டாள் என்பது வெளியா

யிற்று.

"தாங்கள் குளத்தில் விழாமல் பிடித்துக்கொண்டேன்!"

"அழகாயிருக்கிறது! அன்று ஏரியில் விழுந்து நான் முழுகித் தத்தளித்தபோது இவ்வளவு பரிவு காட்டவில்லையே? இந்த முழங்கால் அளவு தண்ணீர் உள்ள குளத்தில் நான் விழாமல் காப்பாற்றுவதற்கு வந்து விட்டீர்களே?"

"அது என் குற்றந்தான்!"

"நீங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை; குற்ற



மெல்லாம் என்னு டையது."

"அது எப்படி? தாங்கள் குற்றம் எதுவும் செய்யவில்லை. என் பேரில் ஏதோ கோபத்தினால் இவ்விதமாகச் சொல்லுகிறீர்கள்!"

"முன்னொரு நாள் தாங்கள் வேட்டை மண்டபத்துக்குள்ளிருந்து திடீரென்று நான் இருந்த அறையில் புகுந்தீர்கள். அன்றைக்கும் என்னைத் திடுக்கிட வைத்தீர்கள். அப்போதே நான் கூக்குரலிட்டுத் தங்களை என் தந்தையிடம் பிடித்துக் கொடுத்திருக்க வேண்டும்!"

"அன்றைக்கு என்னைப் பெரும் அபாயத்திலிருந்து காப்பாற்றினீர்கள். அதை என்றைக்கும் நான் மறக்க

மாட்டேன்...''

''அதற்குப் பதில் தாங்கள் நன்றி செலுத்திய விதத்தை நானும் மறக்க மாட்டேன்... நன்றி கெட்டவர்களிலே தங்களைப் போல் நான் பார்த்ததே இல்லை...''

''இளவரசி! இது பெரிய அபாண்டம்! எந்த விதத்தில் நான் நன்றி கெட்டவன்? சொல்லுங்கள்!''

''தங்களை யாரோ கொலைகாரர்கள் துரத்தி வருவதாகப் பொய் சொன்னீர்கள். நான் வேட்டை மண்டபத்துக்குப் போய்ப் பார்த்துவிட்டு வருவதற்குள் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே திருடனைப் போல் ஓடி விட்டீர்கள்!''

''திருடனைப் போல் ஓடி விட்டேன் என்றா சொன்னீர்கள்?''

''திருடனைப் போல் என்று கூறியது தவறு; திருடனேதான்!''

''இளவரசி! அன்று நான் எவ்வளவு இக்கட்டான நிலைமையிலிருந்தேன் என்பது தங்களுக்குத் தெரியாது...''

''தெரியாதவர்களுக்குத் தாங்கள் தெரியப்படுத்தியிருக்கலாமே? யார் வேண்டாம் என்று தடுத்தார்கள்?''

''தங்கள் தோழி சந்திரமதிதான். தாங்கள் வேட்டை மண்டபத்துக்குள் சென்றதும் சந்திரமதி இன்னொரு வாசல் வழியாக வந்து விட்டாள். அவள் கண்களில் படாமல் இருப்பதற்காக யாழ்க் களஞ்சியத்தில் மறைந்து கொண்டேன்.''

''பிறகு அங்கிருந்து மாயமாய் மறைந்து போய்விட்டீர்கள்.''

''இல்லை; மச்சுப்படி ஏறி மாடங்களையெல்லாம் தாண்டி மதிள் சுவர் மேலும் ஏறிக் குதித்துத்தான் போனேன். இளவரசி! அன்று என்னை யாராவது கண்டுபிடித்திருந்தால், நான் ஏற்றுக் கொண்டிருந்த காரியமும் கெட்டிருக்கும்; தங்களுக்கும் வசைச் சொல் ஏற்பட்டிருக்கும்...''

''இந்தப் பேதைப் பெண்ணைப் பற்றித் தங்களுக்கு எவ்வளவு கவலை...?''

''உண்மையாகவே கவலைதான்!''

''அப்படியானால், இங்கே தாங்கள் திரும்பி வந்து இத்தனை நாள் ஆயிற்றே? சொல்லாமல் ஓடிப் போன காரணத்தைச் சொல்லியிருக்கலாமே...?''

''அதற்கு சந்தர்ப்பத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்...''

''ஏன், ஐயா, வெறும் வார்த்தை? நான் இருக்கும் திக்கையே தாங்கள் திரும்பிப் பார்ப்பது இடையாதே?''

''சகோதரி...!''

''நான் தங்கள் சகோதரி அல்ல!''

''தாங்கள் என் சிநேகிதன் கந்தமாறனுடைய சகோதரி; ஆகையால் எனக்கும் சகோதரி.''

''கந்தமாறன் என்னுடைய சகோதரன் அல்ல; தங்களுக்கு அவன் சிநேகிதனும் அல்ல. நம் இருவருக்கும் அவன் கொடிய பகைவன்...''

''இளவரசி! அதுதான் தங்களுக்குத் தெரிந்திருக்கிறதே! சில நாள் முன் வரையில் கந்தமாறன் என் உயிர்க்குயிரான நண்பனாக இருந்தான். இப்போது அடியோடு மாறிப் போயிருக்கிறான். பார்த்திபேந்திரன் எப்போது என் தலைக்கு உலை வைக்கலாம் என்று பார்த்துக் கொண்டிருக்கிறான். ஆதித்த கரிகாலரோ நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுகிறார். இந்த நிமிஷம் அன்பாகப் பேசுகிறார்; அடுத்த நிமிஷம் எரிந்து விழுகிறார். எப்போது என்ன ஆபத்து வருமோ என்று எதிர்பார்த்துக் காலங் கழிக்கிறேன். இந்த நிலைமையில் என்னுடைய நன்றியைச் செலுத்துவதற்காகத் தங்களை நான் தேடி வந்தால்...''

''ஐயா! தங்களைக் காப்பாற்றிக் கொள்வதில் தாங்கள் இவ்வளவு ஊக்கமாயிருப்பது பற்றி நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்...!''

''இளவரசி! என்னைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் உயிரைப் பற்றியும் கவலைப்படவில்லை. தங்களுக்கு என்னால் தீங்கு எதுவும் நேராமலிருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்!''

''கவலைப்பட்டு உருகிக் கொண்டே இருக்கிறீர்கள். ஆண் மக்கள் எல்லாருமே வஞ்சகர்கள் என்று சந்திரமதி

சொல்லுவாள். அது உண்மை என்று இப்போதுதான் நிச்சயமாகிறது.''

''யார் என்ன சொன்னாலும் சரிதான்; என் உயிர் உள்ளவரையில் தங்களை நான் மறக்க மாட்டேன்! தாங்கள் எனக்குச் செய்த உதவியையும் மறக்க மாட்டேன்!''

மணிமேகலை சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு "ஐயா! இப்போது தாங்கள் சொன்னதை இன்னொரு தடவை சொல்லுங்கள்!" என்றாள்.

"ஆயிரம் தடவை வேணுமானாலும் சொல்கிறேன். என் உயிர் உள்ளவரையில் தாங்கள் செய்த உதவியை மறக்க மாட்டேன்!'' என்று வந்தியத்தேவன் உறுதியுடன் கூறினான்.

''ஆயிரம் தடவை சொன்னால் மட்டும் என்ன பயன்? அதை நிறைவேற்ற முயற்சி எடுக்க வேண்டும் அல்லவா?''

''எந்த விதத்தில் முயற்சி எடுப்பது? சொல்லுங்கள், இளவரசி!''

''தங்கள் உயிர் உள்ள வரையிலே தானே எனக்கு நன்றி செலுத்துவீர்கள்? ஆகையால், தங்கள் உயிரை முதலில் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தங்களுக்காக இல்லாவிட்டாலும், எனக்காகக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்!''

"இளவரசி! இது என்ன...?"

"ஐயா! உண்மையைச் சொல்லுங்கள்! சற்று முன்னால் நானும் என் தோழியும் பேசிக்கொண்டிருந்ததைத் தாங்கள் கேட்டுக் கொண்டிருந்தீர்களா?''

''மன்னிக்க வேண்டும், இளவரசி! 'ஐயோ! பிசாசு!' என்று தாங்கள் கூவியதைக் கேட்டு ஓடி வந்தேன். அதற்குள் தங்கள் தோழி சந்திரமதி வந்து விட்டாள். உங்களுடைய பேச்சைக் கேட்கும்படி நேர்ந்துவிட்டது...''

''தங்களை எப்படியாவது தேடிப் பிடித்து அழைத்து வரும்படி அவளை நான் அனுப்பியது தெரியும் அல்லவா?''

''காதில் விழுந்தது; அதனாலேதான் தங்களை அணுகி வந்தேன்...''

''இல்லாவிடில் என் அருகிலும் வந்திருக்க மாட்டீர்கள். அடடா! என்ன கரிசனம்? போனால் போகட்டும். தாங்கள் எவ்வளவு கல்நெஞ்சராயிருந்தாலும், என் மனம் கேட்கவில்லை. தங்களுக்கு ஆபத்து என்றால், நான் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை.''

''இளவரசி! என்னுடைய ஆபத்தான நிலைமை எனக்குத் தெரிந்தேயிருக்கிறது. எனக்குத் தெரியாத புதிய ஆபத்து ஏதேனும் வரப் போகிறதா?''

''ஐயா! இந்த அரண்மனையை விட்டுத் தாங்கள் உடனே போய் விடுங்கள்!''

''என்னைப் புறங்காட்டி ஓடச் சொல்கிறீர்களா?''

''போர்க்களத்தில் புறங்காட்டி ஓடக் கூடாது. சதிகாரர்களிடமிருந்து தப்பிச் செல்வதில் குற்றம் என்ன?''

''யார் சதிகாரர்கள்?''

''வேறு யார்? கந்தமாறனும் பார்த்திபேந்திரனுந்தான்.''

''அவர்களுக்குப் பயந்து நான் இந்த அரண்மனையை விட்டு ஓட முடியாது.''

''என் தமையனால் தங்களுக்குத் தீங்கு நேர்வதை அறிந்து, நான் அதைச் சகித்துக் கொண்டிருக்க முடியாது.''

''இளவரசி! கந்தமாறனுடைய காரியங்களுக்குத் தாங்கள் எப்படிப் பொறுப்பு ஆவீர்கள்?''

''என் காரணமாகவே அவனும் பார்த்திபேந்திரனும் தங்களுக்குத் தீங்கு இழைக்கப் பார்க்கிறார்கள்...''

''தங்களுக்காக நான் துன்பம் அடைந்தால் அது என் பாக்கியம். தாங்கள் செய்த உதவிக்குப் பிரதி செய்ததாக எண்ணிக் கொள்வேன்...''

''நந்தினிதேவி கூறியது சரிதான்!''

''ஆகா! பழுவூர் ராணி தங்களிடம் என்ன சொன்னாள்!''

''உங்களிடம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்படி சொன்னால், கேட்க மாட்டீர்கள்; - வேறு யுக்தி செய்ய வேண்டும் என்றார். ஐயா! தயவு செய்து தாங்கள் என்னுடன் வாருங்கள். பழுவூர் ராணி தங்களை ஏதோ ஒரு அவசர காரியமாகப் பார்க்க வேண்டுமாம்.''

''அந்த அவசரமான காரியம் என்ன

வென்பது தங்களுக்குத் தெரியும் அல்லவா?''

''தெரியும்; பழுவேட்டரையர் கொள்ளிடத்தைத் தாண்டும்போது படகு கவிழ்ந்து போய் விட்டதாக ஒரு செய்தி வந்திருக்கிறது...''

''நானும் கேள்விப்பட்டேன்.''

''தாங்கள் உடனே போய் அதைப் பற்றிய உண்மையைத் தெரிந்துகொண்டு வர வேண்டுமாம். அவ்விதம் தங்களிடம் பழுவூர் ராணி நேரில் கேட்டுக் கொள்ளப் போகிறார்.''

வந்தியத்தேவன் சிறிது யோசித்து விட்டு, ''இதையெல்லாம் என்னிடம் முன்னால் கூற வேண்டாம் என்று பழுவூர் ராணி எச்சரிக்கவில்லையா?'' என்றான்.

''ஆமாம்!''

''பின், ஏன் இதைப் பற்றி என்னிடம் சொன்னீர்கள்?''

''என் மனம் குழம்பியிருக்கிறதுதான் காரணம். ஐயா! சில நாளைக்கு முன்னால் வரையில் நான் கள்ளங் கபடறியாத பெண்ணாயிருந்தேன். யாரைப் பற்றியும் எந்தவிதமான சந்தேகமும் கொண்டதில்லை. யாரைப் பற்றியேனும் என் தோழிகள் குறை சொன்னாலும் நம்புவதில்லை. இப்போது எல்லாரையும் சந்தேகிக்கிறேன்; எல்லாவற்றையும் சந்தேகிக்கிறேன்.''

''என் முகத்தில் விழித்த நேரத்தினால் ஏற்பட்ட விபரீதம் போலிருக்கிறது.''

''ஒருவிதத்தில் அது உண்மைதான்! பழுவூர் இளையராணி தங்களை அழைத்து வரும்படி எனக்குச் சொல்லி அனுப்பினார். அவருடன் பேசும்போது ஒரு சந்தேகமும் தோன்றவில்லை. எல்லாம் சரியென்று தோன்றியது... இப்பால் வந்ததும் அவர் பேரிலேயே சந்தேகம் ஏற்படுகிறது.''

''என்ன சந்தேகம், இளவரசி? நந்தினி தேவியின் பேரில் தங்களுக்கு என்ன சந்தேகம்?''

''அவரும் சேர்ந்து தங்களுக்குத் தீங்கு செய்ய எண்ணுகிறாரோ என்றுதான்.''

''இந்தச் சந்தேகம் ஏன் வந்தது? அவர் எனக்கு என்ன தீங்கு செய்ய முடியும்?''

''அதுவும் என்னால் சொல்ல முடியாது. ஆனால் அவருடைய பேச்சும் நடவடிக்கைகளும் யோசித்துப் பார்த்தால் சந்தேகம் உண்டாக்குகின்றன. அடிக்கடி ஒரு நீண்ட வாளைக் கையில் வைத்துக்கொண்டு ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிறார்...''

''ஒரு பெண்ணின் கையில் உள்ள வாளைக் கண்டு நான் அஞ்சுவதில்லை. அதைக்காட்டிலும்...''

''முகத்திலுள்ள கண்களாகிற வாள்களுக்கு அஞ்சுவீர்கள். எல்லாரும் சொல்லும் கதைதான் இது. ஐயா! நந்தினி தேவியின் வாளுக்கு மட்டும் தங்களை நான் பயப்படச் சொல்லவில்லை. முதன்முதலில் தாங்கள் வேட்டை மண்டபத்திலிருந்து நான் இருந்த அறைக்குள் வந்ததை ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள்...''

''நன்றாக ஞாபகம் இருக்கிறது.''

''கொலைகாரர்கள் சிலர் தங்களைத் தொடர்ந்து வந்ததாகச் சொன்னீர்கள். முதலில் அதை நான் நம்பவில்லை. பிறகு வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்த்தேன். அங்குள்ள மிருகங்களுக்குப் பின்னால் சிலர் மறைந்திருப்பதாகத் தோன்றியது. அவர்கள் தங்களைக் கொல்ல வந்தவர்களா, அல்லது தங்களுடனேயே வந்தவர்களா என்று அப்போது என்னால் நிச்சயிக்க முடியவில்லை. அதனாலேயே அதைப் பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. அவர்களைப் பற்றிச் சொன்னால், தங்களைப் பற்றியும் சொல்ல வேண்டியதாகும் அல்லவா?''

''எனக்குத் தாங்கள் செய்த பேருதவி எவ்வளவு என்பதை இப்போதுதான் நன்கு உணர்ந்து கொள்கிறேன்.''

''அதற்காக நான் அந்த விஷயத்தை இப்போது சொல்லவில்லை. சற்று முன்னால் நந்தினி தேவி தங்களை அழைத்து வரும்படி என்னை அனுப்பினார். உடனே, ஏதோ அவரிடம் கேட்பதற்காகத் திரும்பிப் போனேன். கதவைத் தாளிட்டுக் கொண்டிருந்தார். உள்ளே,

வேட்டை மண்டபத்திலிருந்து பேச்சுக் குரல்கள் இலேசாகக் கேட்டன. ஐயா! என் சந்தேகத்தைத் தங்களுக்கு இப்போது சொல்லி விடுகிறேன். வேட்டை மண்டபத்தில் யாரோ ஆள்கள் வந்து ஒளிந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. அவர்களுக்கும் பழுவூர் ராணிக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டும் என்றும் சந்தேகிக்கிறேன்.''

வந்தியத்தேவன் இப்போதுதான் நிலைமையின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தான். இன்று ஏதோ விபரீத சம்பவம் நிகழப் போகிறது என்பதாக அவன் உள்ளுணர்ச்சி அவனுக்குச் சொல்லிக் கொண்டேயிருந்தது. மணிமேகலை கூறிய செய்திகள் அவன் உள்ளுணர்ச்சியை உறுதிப்படுத்தின.

"இளவரசி! எனக்குத் தாங்கள் ஓர் உதவி அவசியம் செய்ய வேண்டும்!''

"என்னவென்று சொல்லுங்கள்!''

"வேட்டை மண்டபத்துக்கு, வெளியிலிருந்து சுரங்கப்பாதை மூலமாக வரும் வழி ஒன்றிருக்கிறது. இப்போது நந்தினிதேவி இருக்கும் அறை வழியாகப் போவதற்கும் ஒரு வாசல் இருக்கிறது. இவற்றைத் தவிர மூன்றாவது வழி ஒன்றும் இருக்கிறதல்லவா?''

''ஆமாம்; வேலைக்காரர்கள் போவதற்கென்று ஒரு வழி இருக்கிறது. அரண்மனைக்குப் புதிதாக வரும் விருந்தாளிகளை அந்த வழியாகத்தான் என் தந்தை அழைத்துப் போவது வழக்கம்...''

"இளவரசி! அந்த வழியாக என்னை இப்போதே வேட்டை மண்டபத்துக்கு அழைத்துப் போங்கள்!''

"எதற்காக?''

''அங்கே வந்து ஒளிந்திருப்பவர்கள் யார், அவர்கள் என்ன நோக்கத்துடனே வந்திருக்கிறார்கள் என்று கண்டுபிடிப்பதற்குத்தான்...''

''தங்களை அபாயத்திலிருந்து தப்புவிக்க வந்தேன். அபாயத்துக்கே இட்டுச் செல்லும்படி கேட்கிறீர்கள்...''

"என் இடையில் எப்போதும் கத்தி இருக்கிறது. இளவரசி! தெரியாமல் வரும் அபாயத்தைக் காட்டிலும் தெரிந்த அபாயத்தை எதிர்ப்பது எளிது. அபாயத்தை நாமே எதிர்கொண்டு போவது இன்னும் மேலானது.''

''ஒரு நிபந்தனைக்குச் சம்மதித்தால் தங்களை வேட்டை மண்டபத்துக்கு அழைத்துப் போவேன்.''

''அது என்ன?''

"நானும் தங்களுடன் வருவேன்; என் இடையிலும் ஒரு சிறிய கத்தி வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று மணிமேகலை தன்னுடைய கத்தியை எடுத்துக் காட்டினாள்.

வந்தியத்தேவன் அதற்குச் சம்மதம் கொடுத்தான்.

"அப்படியானால் சீக்கிரம் என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். சந்திரமதி இங்கே என்னைத் தேடி வருவதற்குள் போய் விட வேண்டும்" என்றாள்.

நந்தவனத்தைக் கடந்து வந்தியத்தேவனை மணிமேகலை அழைத்துச் சென்றாள். பிறகு, மாளிகையின் ஓரமாகச் சுவர்களின் கரிய நிழல் அடர்ந்திருந்த இடங்களின் வழியாக அழைத்துச்சென்றாள். பிறகு மாளிகையில் புகுந்து ஜன சஞ்சாரம் இல்லாத தாழ்வாரங்கள், நடைபாதைகள் வழியாக அழைத்துச் சென்றாள். பின்னர், கதவு சாத்தப்பட்டிருந்த ஒரு வாசற்படியின் அருகில் வந்தாள். அங்கேயே வந்தியத்தேவனை நிற்கச் செய்துவிட்டு விரைந்து சென்று ஒரு கைவிளக்கை எடுத்து வந்தாள். கதவைத் திறந்து உள்ளே விளக்கைத் தூக்கிக் காட்டிய போது வரிசையாகப் படிக்கட்டுக்கள் அமைந்த குறுகிய நடைபாதை காணப்பட்டது. இருவரும் அப் படிகளில் இறங்கிச் சென்றார்கள். சிறிது நேரம் சென்ற பிறகு, முன்னால் சென்ற மணிமேகலை சட்டென்று நின்று, மெல்லிய குரலில், "நில்லுங்கள்! ஏதோ காலடிச் சத்தம் போலிருக்கிறது. தங்களுக்குக் கேட்கிறதா?'' என்றாள்.

(தொடரும்)

# அக்கினிப் பூக்கள்!

இருச்சியிலுள்ள பல்வேறு கல்லூரி மாணவ மாணவிகள் ஒன்றிணைந்து அக்கினிப்பூக்கள் என்ற சமூக சேவை அமைப்பை ஆரம்பித்திருக்கிறார்கள் சமீபத்தில்!

"அது சரியில்லை, இதைச் செய்யவில்லை' என்று குறை சொல்வதை விட்டுவிட்டு நேரிடையாக நாமே களத்தில் இறங்கி ஒரு கைபார்த்தால் என்ன என்று நினைத்ததன் விளைவுதான் இந்த அமைப்பு" என்கிறார் இதன் உறுப்பினர் செய்யது அஹமது கபீர்.


• கபீர்


• ஜெகனாத நாகராஜா


• இரா. கவிதா

திருச்சி-கரூர் நெடுஞ்சாலையின் அருகே அகல ரயில் பாதைக்கு மறுபுறம் அமைந்துள்ள முருங்கப்பேட்டை கிராம ரயில்வே தண்டவாளங்களைக் கடக்கும் முன்பு, போடப்பட்டிருக்கும் தடுப்புக் கம்பியைத் தாண்ட வேண்டும். சாலையிலிருந்து ஒன்றரையடி உயரத்தில் இருக்கும் கம்பியைத் தாண்டும்போது அதன் மறுபுறம் இருக்கும் இரண்டடி ஆழப் பள்ளத்தில் விழுந்து உடலைக் காயப்படுத்திக் கொண்டவர்கள் பலர். இரவு நேரத்தில் மின் விளக்கு வசதியும் இல்லாததால் கேட்கவே வேண்டாம் விபத்துக்கு!

அக்கினிப் பூக்கள் இதில் குதித்தது(!) பள்ளத்தை நிரப்பி, ஒன்றரையடி உயரத்திலிருந்தக் கம்பியை மேல் மட்டமாக வைத்துக் கொண்டு அதன் இருபுறமும் மணல் கொட்டி விளிம்புகளில் சரளைக் கற்களைப் பதித்து சரிவாக ஏறி இறங்கும் ஒரு சின்ன மேம்பாலப் பாதையை உருவாக்கி தந்து விட்டார்கள் மாணவர்கள். இப்பொழுது யாரும் கீழே விழுந்து எழுந்து கொள்ளும் சம்பவங்கள் இல்லை.

பல கிராமங்களுக்கு இவர்கள் நடந்து சென்றும், சைக்கிளில் சென்றும் கண் சிகிச்சை முகாம் பற்றி பிரசாரம் செய்திருக்கிறார்கள். அறுநூறு



● எந்தப் பழக்கத்தையும் ஜன்னல் வழியாகத் தூக்கி எறிந்துவிட முடியாது. கையைப் பிடித்துப் படிப்படியாக இறக்கி அழைத்துப் போய்த்தான் வெளியேற்ற வேண்டும்.

– மார்க் ட்வைன்

தகவல்: ஆர். பார்த்திபன்



## பட்டாசு வெடிக்காத கிராமம்!

மதுரை-திருப்பத்தூர் மெயின் ரோட்டில் உள்ள ஊர் வேட்டங்குடி. இங்கு பறவைகள் சரணாலயம் உள்ளது. பல அரிய வெளிநாட்டுப் பறவைகள் வந்து தங்கியுள்ளன. இப்பறவைகளின் நலனை கருத்தில் கொண்டு இக்கிராம மக்கள் தீபாவளிக்குக் கூட பட்டாசுகளை வெடிப்பதில்லை!

தகவல்: வி. சிவா

பேர்களுக்குக் கண் பரிசோதனை நடத்தப்பட்டது. அதில் முப்பத்தி மூன்று பேர்களுக்குத் திருச்சி, ஜோசப் கண் மருத்துவமனையில் இலவசமாகக் கண் அறுவை சிகிச்சை அளிக்க இவர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

அறுவை சிகிச்சைக்குப் பின்னர் ஒரு மாதம் கழிந்து அந்தக் கிராமங்களுக்குச் சென்று அவர்களையெல்லாம் சந்தித்து 'இப்பொழுது பார்வை எப்படி இருக்கிறது?' என்று அன்புடன் நலம் விசாரித்து விட்டும் வந்திருக்கிறார்கள்.

திருச்சி, எடத்தெருவில் பொது மருத்துவ முகாம் ஒன்றும் நடத்தி இருக்கிறார்கள். அந்த முகாமில் நூற்றுக்கணக்கானவர்களுக்கு பொதுமக்களுக்கு நகரின் தலைசிறந்த மருத்துவர்கள் ஒரு நாள் முழுவதும் தங்கியிருந்து சேவை செய்தது மறக்க முடியாதது என்கிறார்கள். "இந்த முகாமுக்காக சுமார் இரண்டரை லட்ச ரூபாய் மதிப்புள்ள மருந்துகள், மாத்திரைகளை அன்பளிப்பாக மருத்துவப் பிரதிநிதிகள் பலரும், டாக்டர்களும் தந்துள்ளார்கள்" என்கிறார் அக்கினிப் பூக்களில் செயலாற்றும் ஜெகனாத நாகராஜா.

இதெல்லாம் அக்கினிப் பூக்களின் செயல்பாடுகளுக்குச் சின்ன சாம்பிள்!

"கல்லூரிப் படிப்பு, இடையிடையே சமூக சேவை என்று கிளம்பி விடுவதால் வீட்டில் பெற்றோர்களிடம் முணுமுணுப்பு இருக்கத்தான் செய்கிறது. பெற்றோர்களைச் சமாதானப்படுத்தவும், சரியென ஏற்றுக் கொள்ள வைக்கவும் வேண்டி 'குடும்பத் திருவிழா' என்ற ஒன்றினை நடத்திக் காட்டியுள்ளார்கள், அதில் மாநிலங்களவை உறுப்பினர் திருச்சி சிவா பேசிய பேச்சு பெற்றோர்களுக்கும், அக்கினிப்பூக்களுக்கும் இடையே இனிய பாலமாக அமைந்து போனதாம்!

சமூக அக்கறையுள்ள நாடகம், கலை நிகழ்ச்சிகளையும் நடத்தி வருகிறார்கள் இவர்கள்.

"இந்த அளவிலான சமூக சேவைகள் கல்லூரிப் பருவத்தோடு முடிந்து போய்விடாமல் அதற்கு அப்பாலும் தொடர வேண்டும் என்பதே எங்கள் லட்சியம்!" என்கிறார் 'அக்கினிப் பூக்களில்' ஒருவரான சு. இரா. கவிதா.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# இவர்கள் சொல்கிறார்கள்



• தமிழரசி



• வசந்தா



D.ராணி



• கிளியம்மாள்



• S. Ravi



E. இராமு



• மாசிலாமணி, பெரம்பூர், சென்னை - 39.



• ஜெய்சங்கர்-மாரியம்மாள், தேனாம்பேட்டை, சென்னை



• உஸ்மான் அலி, ஷம் ஜுனிஷா பேகம்

1) நான் கர்ப்பப்பை கோளாறு காரணமாக நோய் முற்றிய நிலையில் கர்ப்பப்பை அகற்றப்பட வேண்டும் என்று சென்னையில் உள்ள மிகப்பெரிய மருத்துவமனையில் அறிவுறுத்தப்பட்டு, ரப்பானி வைத்தியசாலாவில் சிகிச்சை பெற்ற பின் கர்ப்பப்பை அகற்றப்படவேண்டிய நிர்பந்தம் இல்லாமல் ஆகிவிட்டது.

2),3) இவர்கள் இருவருக்கும் சுமார் 5 வருடங்களாக இருந்து வந்த கடுமையான மூட்டு மற்றும் கை, கால் வலி முழுவதுமாக ரப்பானி வைத்திய சாலாவில் காண்பித்த பிறகு நீங்கிவிட்டது என்கிறார்கள்.

4),5) உடம்பில் உப்பு அதிகம் இருந்ததால் தங்கள் கிட்னி ஃபெயிலியர் ஆகி அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய நிலையில் ரப்பானி வைத்திய சாலா சென்று சுமார் 6 மாத காலத்திற்குள் முழுவதும் குணம் அடைந்திருக்கிறோம் என்கிறார்கள்.

6),7) இவர்கள் பல வருடங்களாக உடம்பில் அரிப்பு ஏற்பட்டு சோரியாஸிஸ் நோயால் கடுமையாக பாதிக்கப்பட்டு இறுதியில் ரப்பானி வைத்தியசாலாவில் சிகிச்சை பெற்று புது தோலுடன் புது மனிதனாக இருக்கிறோம் என்கிறார்கள்.

8),9) இவர்கள் திருமணமாகி பல வருடங்களாகியும் குழந்தையில்லாமல் பல மருத்துவமனைகள் ஏறி இறங்கி இறுதியில் ரப்பானி வைத்திய சாலாவில் சிகிச்சை பெற்றபின் இவர்களுக்கு குழந்தை பிறந்துள்ளது.

*மேலும் இங்கு மூட்டுவலி, கிட்னி ஃபெயிலியர், குழந்தையின்மை, அல்சர், ஆண்மைகுறை, சோரியாசிஸ், ஆஸ்துமா, காகாய் வலிப்பு மற்றும் சகல வியாதிகளுக்கும் இங்கு சிகிச்சை பெற்று பயன்பெற்ற பல அன்பர்கள் தினமும் இவருக்கு கடிதம் மூலமும், தொலைபேசி மூலமும், நேரி லும் சந்தித்து நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.*

*(திங்கள், புதன் மற்றும் வெள்ளிக் கிழமைகளில் காலை 8.30 மணி முதல் 9 மணி வரை டாக்டரின் பேட்டியை* VIJAY TV *யில் காணத் தவறாதீர்கள்)*



## டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்
## ரப்பானி வைத்ய சாலா

73/1, டாக்டர் பெசன்ட் ரோடு, மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில்,
இராயப்பேட்டை, சென்னை – 600 014. போன்: 8510989, 8410874

# ஆங்கிலமே, Z

என்ன ஸார் இது? 'like'ன்னா 'விரும்பு'ன்னு சொல்றீங்க சரி, ஆனா இதே வார்த்தைக்கு 'போல', 'மாதிரி'னும் அர்த்தம்னு சொல்றீங்களே, கொஞ்சம் குழப்பமா இருக்கு எனக் கேட்டு சில கடிதங்கள் வந்துள்ளன.

உங்களுக்குக் குழப்பம் ஏற்படக் கூடாதுங்கறதுக்காகத்தான் நான் ஒவ்வொரு வார்த்தையையும் தமிழ் அர்த்தத்தோட, தெளிவா சொல்லியிருந்தேன்.

இருந்தாலும் உங்கள்ள சில பேருக்குக் கொஞ்சம் குழப்பமா இருந்தா 'like'ங்கற வார்த்தையை எப்படி use பண்ணணும்னு இன்னொரு வாட்டி சுருக்கமா சொல்றேன்.

'I like sweets' ன்னா இனிப்பு பிடிக்கும்னு அர்த்தம் இல்லியா?

சரி, 'It is like a sweet ன்னா இது ஸ்வீட் மாதிரியிருக்குன்னு அர்த்தம்.

இந்த வாக்கியத்துல 'like'ங்கற வார்த்தைக்கு 'மாதிரி' (போல)ன்னு அர்த்தம்.

அதாவது 'like'ங்கற வார்த்தைக்கு விரும்பு, மாதிரின்னு இரண்டு அர்த்தம் உண்டு.

I like ன்னா நான் விரும்புகிறேன்.

I don't like ன்னா எனக்கு விருப்பமில்லை. அதாவது நான் விரும்பவில்லைன்னு அர்த்தம்.

இப்போ இந்த வாக்கியத்தை கொஞ்சம் படிச்சுப் பாருங்க.

I don't like it when you look at me like that

நீ அதைப் போல என்னைப் பார்ப்பது எனக்குப் பிடிக்கவில்லை.

என்ன, இப்போ புரியுதா?

சரி விஷயத்துக்கு வரலாம்.

'விருப்பு வெறுப்பு என்பது எல்லோருக்கும் உண்டு. இதை இங்கிலீஷில் 'likes and dislikes' என்று சொல்வது வழக்கம்.

☐ இவ்வளவு தூரம் என்னோட வீடு தேடி வந்திருக்கே. வீட்ல யாரும் இல்லை. எல்லாரும் கோயிலுக்குப் போயிருக்காங்க. சாயங்காலம்தான் வருவாங்க. கொஞ்சம் இரு. உனக்கு காபி கலந்து தரேன்.

காபி strongஆ இல்லை light டா? எனக் கேட்க How do you like your coffee, strong or light? என்று கேளுங்கள்.

சர்க்கரை போடணுமா இல்லை சர்க்கரை இல்லாமலா? என்று விசாரிக்க with sugar or without sugar ன்னு கேளுங்க. (தயவு செஞ்சு இந்தக் கேள்வியைக் கொஞ்சம் வயசானவங்களா பாத்துக் கேளுங்க)

☐ எனக்குச் சாப்பிட பிடிக்கலை.

☐ எனக்கு வெளியில எங்கேயும் போக பிடிக்கலை.

☐ எனக்கு டீ.வி பார்க்கப் பிடிக்கலை என்றெல்லாம் நாம் சில சமயங்களில் சொல்வதுண்டு.




வி. ராஜகோபாலன்




பார்த்து ஆங்கில வார்த்தைகளின் உச்சரிப்பு பற்றி தெரிந்து கொள்ளுங்கள்.

எடுத்த எடுப்பில் எவராலும் சிறந்த பேச்சாளராகி விட முடியாது. Yes, good speakers are not born, they are made.

'பாடப் பாடத்தான் ராகம்' என்று சொல்வதுண்டு. அதேபோல ஒரு மொழியைப் பேசப் பேசத்தான் அம்மொழியில் தங்கு தடையின்றி பேசும் ஆற்றலைப் பெற முடியும்.

கடந்த 26 வாரங்களாக நான் கூறியுள்ள விஷயங்களை நினைவில் கொண்டு தங்கு தடையின்றி ஆங்கிலத்தில் பேசும் முயற்சியில் இன்றுமுதல் ஈடுபடுங்கள்.

இது போன்ற சந்தர்ப்பங்களில் I don't feel like '__________' என்ற வார்த்தைத் தொடரை use பண்ணலாம்.

I don't feel like eating anything. எனக்கு சாப்பிடப் பிடிக்கவில்லை.

I don't feel like watching T.V. எனக்கு T.V பார்க்கப் பிடிக்கவில்லை என்றெல்லாம் சொல்லலாம்.

ஒரு செயலைச் செய்ய உங்களுக்குள்ள விருப்பத்தைத் தெரிவிக்க அதாவது எனக்கு cricket விளையாடப் பிடிக்கும் என்பதை I like playing cricket என்று சொல்லலாம்.

இதே போல I like collecting stamps. I like watching T.V என்றெல்லாம் உங்களது விருப்பத்தைத் தெரிவிக்கலாம். சரி, உங்களது விருப்பம் என்ன?

You like speaking English fluently அல்லவா?

ஆங்கில வார்த்தைகளின் பிரயோகங்கள் பற்றி நீங்கள் மேலும் தெரிந்து கொள்ள ஆங்கில நாளிதழ்களைப் படிப்பது நல்லது.

மேலும் டி.வி.யில் நியூஸ் மற்றும் டாக்ஷோக்களைப்

'இனி வெற்றி உங்கள் அருகில்தான்'

All the best.




# அருகில் வா!





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel & Fax: 237 6129.
E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர்! வணக்கம், வரும் தீபாவளி திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும், ஒரு கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவங்கப்பட்டுள்ளது.

## தீபாவளி திருநாளில்

★குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

★குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்தர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை, அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ● காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| ● மதிய உணவு | ரூ. | 2,000/- |
| ● இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| ● பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 750/- |
| ● ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ● ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ. | 3,000/- |
| ● ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 9,000/- |
| ● குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

சிசுவுக்குத் தாய்ப்பால்தான் உகந்தது என்பதை வலியுறுத்தும் விளம்பரத்தில் நீங்கள் என்னவெல்லாம் எதிர்பார்ப்பீர்கள்? ஒரு மலர்ந்த முகத் தாய்... ஒரு பால் குடிக்கும் புஷ்டியான சிசு... தாய்ப்பாலின் மகத்துவத்தைப் பறைசாற்றும் சில வரிகள்... இவ்வளவுதானே? மிஞ்சி மிஞ்சிப் போனால், அந்தத் தாய் ஒரு சினிமாப் பிரபலமாக இருக்கலாம் (தப்பித்தவறி போஸ் கொடுக்க இசையும் பட்சத்தில்)... இல்லையா? ஆனால்...

விரைவில் இந்தியாவெங்கிலுமுள்ள கிளினிக்குகளிலும் நர்ஸிங் ஹோமிலும் நீங்கள் காணப் போவது, தாய்ப்பாலின் சிறப்பை, தன் திடகாத்திரமான தோள் வலியால் பிரத்யட்சமாகப் பிரகடனப்படுத்தும் ஒரு பாலிவுட் ஸ்டாரை!

ஹாங்.... ஹிர்த்திக்கேதான்! ரோஷன் நாமாவை வைத்துக் கொண்டு இவர்கள் ரேஷன் அரிசியையே விற்றுவிடுவார்கள் போலிருக்கிறது!



# தாய்ப்பால் விளம்பரத்தில் ஹிர்த்திக்!

கையில்லாதக் கறுப்பு சட்டையில், தனது பயில்வான் உடலைக் காட்டி, "you can always tell a mothers milk baby" என்ற வாசகத்தில் ஹிர்த்திக் கையெழுத்திட்டிருக்கும் போஸ்டர்கள், ஒன்பது இந்திய மொழிகளில் தயாராகியிருக்கின்றன. (கவலை வேண்டாம்– தமிழில் நிச்சயம் உண்டு!)

விளம்பர ஸ்பான்ஸர்களான "நோவார்டிஸ் ந்யூட்ரிஷன் இந்தியா லிட்''டின் ஜிஎம்மான சைதன்யா, "இது ஒரு விளம்பரப் படமல்ல, விழிப்புணர்ச்சிப் படம்; தாய்ப்பாலின் அவசியத்தைப் போதிக்கும் படம்; இந்தப் போஸ்டர்களை ஆஸ்பத்திரிகளில் மட்டுமே காணலாம்" என்கிறார்.

அது சரி... ஆனால் அதற்காக ஒரு நடிகையைப் போடாமல், நடிகரை வளைத்திருப்பானேன்?... என்று இழுத்தால், ப்ராஜெக்ட் மானேஜரான அதுல் டான்டேகர், 'நாங்கள் அம்மாக்களுடன் பேச விரும்பவில்லை; முற்றிலும் புதிய கோணத்தில், குழந்தையின் வாயிலாக எங்கள் கருத்தை வலியுறுத்த நினைத்தோம்; அதற்கொரு அழகான, வலுவான, வாலிபக் குழந்தை தேவைப்பட்டது. ஹிர்த்திக்கைக் காட்டிலும், பொருத்தமான முகம் வேறு ஏது?'' என்கிறார்.

இவர்கள் கேட்டவுடன் ஹிர்த்திக் 'ஷாக்'காகிவிட்டாராம்; என்னை எதற்கு வம்புக்கு இழுக்கிறீர்கள் எனத் தயங்கினாராம். ஆனால் அப்புறம், இது ஒரு நல்ல நோக்குடன் செய்யப்படும் சமூக சேவை என்பதை விளக்கியவுடன் ஒப்புக்கொண்டு விட்டாராம்.

"அவனே தாய்ப்பால் குடித்து வளர்ந்தவன் தானே? மற்ற குழந்தைகளுக்கும் அந்தப் பாக்கியம் கிட்டட்டுமே?'' என்கிறார் அப்பா ராகேஷ் ரோஷன்.

ஹிர்த்திக் மாடல் செய்வதால், இளம் தாய்மார்கள் மனத்தில் தாய்ப்பாலின் மகத்துவத்தை ஆணித்தரமாக பதிய வைக்கலாம்" என்பது விளம்பரத் தயாரிப்பாளர்களின் எண்ணம்.

இனி செக்கப்புக்குப் போய், டாக்டருக்காகக் காத்திருக்கும் இளம் தாய்மார்களை ஹிர்த்திக் போஸ்டர்கள் வரவேற்கும்.

— ஜெயஸ்ரீ ராஜ்

11

# அலை உறங்கும் கடல்

**வெ**ற்றுத் தேகம் வருடிய காற்றில் மழை ஈரம் உணர்ந்த அருள்தாஸ் உறக்கம் கலைந்து வானம் பார்த்தான். குடிசைக்கு வெளியே மணல் வெளியில் கிடந்த அவன் கட்டிலின் காலருகே நாயொன்று சுருண்டு கிடந்தது. கண் எட்டும் தூரத்தில் இருள் பூசிக் கிடந்த கடல் ஒரு குழந்தை போல் உறங்கிக் கொண்டிருந்தது. ஒரு சீற்றமில்லை. சப்தமில்லை. முட்டி மோதும் வேகமில்லை. அருகே நிழலுருவங்களாகத் தென்பட்ட படகுகள் இரவுக்குக் காவல் புரிவது போலிருந்தன.

மணி இரண்டரை அல்லது மூன்று இருக்கும் என்று அவன் நினைத்தான். நட்சத்திரங்களற்ற வானில் மேகம் திரள்வதைக் கடலின் அமைதியைக் கொண்டு அவன் உணர்ந்தான். ஆனால் இது மழையாக மறுஉருவங்கொள்ளாது. வீசும் ஒரு சிறு வெப்பக் காற்றில் சிதறிப் போகும் பொய் மேகம். தவறி, சிறு தூறல்கள் விழலாம். கமறிக் கிடக்கிறது மண் பரப்பு. அதன் வாசமெழுந்து நிறுத்திவிடக்கூடும், விநாடிப் பொழுதில்.

சற்றே அசைந்து அவன் தலைக்குக் கைகொடுத்து நேராகப் படுக்கவும் கனம் தாங்காமல் 'கீ' என்றது கட்டில். நாய் தன் வாலை ஒருமுறை தூக்கி விட்டு இறக்கிக் கொண்டது.

கனவே போலிருந்தது அவனுக்கு. சமயமற்ற சமயமாக இருளில் ஒரு சிறு பறவை விரைந்தோடியதை அதிசயமாகக் கண்டான். இந்தக் கணம் தன்னைப் போல் உறங்காதிருக்கும் உயிர்கள் எத்தனை இருக்கும் என்கிற யோசனை எழுந்தது.

நள்ளிரவு பன்னிரண்டு மணி வரை அற்புதமேரி உறங்கவில்லை. அவன் மடியில் தலை வைத்துப் படுத்து கேவிக் கேவி அழுது கொண்டே இருந்தாள். மகிழ்ச்சியில் அவளுக்கு ஒரு சொல் கூட உதிக்கவில்லை. அம்மையின் நிம்மதி, வெளிப்பட்ட அவளது ஆங்காரம் மிகுந்த வசவுகளில் தென்பட்டது. 'எச்சி நாயே! எங்கொழிஞ்சி போன?' என்று சீறிய சீற்றத்தில் அவளது அன்பின் சாறு ததும்பித் தென்பட்டது அவனுக்கு.

வந்து சேர்ந்த விவரம் சொல்ல நேவி ஆபீசுக்குப் போன போது, உடை கசங்குவதைப் பொருட்படுத்தாமல் இறுக்கி யணைத்து முதுகில் தட்டிய அதிகாரி அவன் நினைவுக்கு வந்தார். வீட்டுக்கே



வந்து விட்டார், தனுஷ்கோடி சப்-இன்ஸ்பெக்டர். விசாரணை விவரமென எழுத எழுதத் தீராமல் வந்து கொண்டே இருந்தன வெள்ளைத் தாள்கள்.

"பாவி! ஹென்றி ஷாரியர் கணக்கால்ல தப்பியிருக்கான்" என்று ஆச்சரியப் பட்டார் தேவாலயத் தந்தை.

கனவே போலத்தான் இருந்தது அவனுக்கு. சிலிர்ப்புடன் அதைப் பகுதி பகுதியாக நினைத்துப் பார்க்க, அவ



னுக்கே திகிலுடன் கூடிய பரவசமுண் டானது.

முதலில் தன்னை வழிமறித்து வந்து கொண்டிருந்த படகு கடற்படையினுடையதுதான் என்று அவன் நினைத்தான். தன் அடையாள அட்டையை எடுத்து, சட்டைப் பையில் வைத்துக் கொண்டு, நம்புமாரியை இஞ்சின் அறைக்கு அனுப்பி விட்டுத் தான் வெளியே வந்து விளிம்பில் நின்றான்.

எதிர்ப் படகு இருபதடி தூரத்தில் நெருங்கியபோது அவனுக்கு விளங்கி விட்டது. அபாயத்தின் ரூபம் எதுவாயிருக்கும் என்கிற யோசனையினூடே கைவசமிருக்கும் டீசலின் இருப்பு பற்றிய கணக்கும்



**''தலைவரே, தொகுதியிலே எவனோ உங்களைப் பற்றி பொய்யான தகவலைப் பரப்புறான்.''**

**''நல்லதாப் போச்சு, என்னைப் பற்றி உண்மையான தகவலைப் பரப்பினாத்தான் ஆபத்து!''**

**– டேவிட் ராஜசீலன்**

மனத்தில் எழுந்தது.

சந்தேகமேயில்லை. அதைத்தான் அவர்களும் கேட்டார்கள், முதலில்.

"கொறச்சுத்தாங்க இருக்கு. நூறு லிட்டருக்குங் கிழதான் இருக்கும்" என்றான் அருள்தாஸ்.

மோதி நிற்கும் நெருக்கத்தில் இரு படகுகளின் விளிம்பிலுமாகக் கால் பரப்பி உயர்ந்து நின்றவனின் தோளில் ஆடிய துப்பாக்கி சற்றே துருப்பிடித்திருந்தது.

"ம்... ம்! மாத்து!'' என்று கட்டளையிட்டான் இன்னொருவன்.

பதிலேதும் பேசுவதற்கில்லை என்பதை அருள்தாஸ் உணர்ந்தே இருந்தாலும் இருக்கிற டீசலைக் கொடுத்து விட்டுப் பின் திரும்பிச் செல்வது எப்படி என்கிற கவலையில் ஆழ்ந்தான்.

"மாத்துன்னு சொல்றமில்லை?" என்றான் எதிர்ப்படகில் இஞ்சின் அறையில் இருந்தவன்.

இவை தாமதிப்பதற்கான தருணங்களல்ல. நடுக்கடலாயினும் தமிழனுக்குத் தமிழன் உதவித்தானாக வேண்டும் துப்பாக்கி முனையிலேனும்.

வெறும் இரண்டு லிட்டர் டீசல் மிச்சமிருக்க, அருள்தாஸின் படகு காலியானது சில நிமிடங்களில்.

"இந்தா!'' என்றான் இரு படகு விளிம்புகளிலுமாகக் கால் வைத்து நின்ற வீரன்.

எண்ணிப் பார்க்கவே வேண்டாம். அருளுக்குத் தெரியும்; அது எத்தனை ரூபாய் என்று. தாராளமாக ஐந்நூறு லிட்டர் டீசல் வாங்கலாந்தான். ஆனால் முதலில் கரையைச் சென்றடைய வேண்டும்.

அவர்கள் வந்த படகு திரும்பி, தொலைவில் மறைந்து விட்ட பிறகும் இஞ்சினை அணைத்து விட்டுச் செய்வதறியாமல் அமர்ந்திருந்தான் அருள்தாஸ்.

ராமேஸ்வரத்துப் படகுகள் ஏதாவது தென்படுகிறதா என்று மாரி சிறு பைனாகுலரில் பார்த்துக் கொண்டிருந்தான்.

இருவருக்குமே பசித்தது. உறக்கமற்று நீண்ட இரு இரவுகள் தந்த சலிப்புக்குப் பிரதியாக ஏதுமில்லை. ஒரு கட்டு பீடியைத் தவிர.

இந்திய ரோந்துக் கப்பல்கள் கூட வராத பிராந்தியம் அது. கச்சத் தீவுக்கு வடமேற்கே பதிமூன்று கடல் மைல்கள் தொலைவிலிருந்தது அருள்தாஸின் படகு. அகப்பட்ட மீன்களில் அதன் அடி மடி பிதுங்கிக் கொண்டிருந்தது. எப்போதும் வாய்ப்பதில்லை இப்படி. ஆனால் எப்படிக் கரை திரும்புவது?

"பாரேன், மீனுக்கார பயமக்கள் ஒருத்தனானா வாரானா அங்கிட்டிருந்து?" என்று அலுத்துக் கொண்டான் மாரி.

அருள்தாஸ் புன்னகை செய்தான். மாரியின் குரலிலொத்த ஏக்கத்தின் அர்த்தம் அவனுக்கு விளங்கியது.

இலங்கை மீனவர்கள் இப்படியான சமயங்களில் மிகுந்த உதவி செய்வார்கள். பிரதிபலன் எதிர்பாராத உதவி.

''டீசல் குடுத்துட்டீகளாக்கும். ஐயே'' என்று கிண்டல் புரிந்தாலும் செயலில் அதனைச் சரிசெய்து விடுவார்கள். இருந்தால் டீசல் தருவார்கள். இல்லாவிட்டால் கட்டுமரம் தருவார்கள். திரும்பிப் போய் டீச

லெடுத்து வந்து படகை மீட்கும் வரை இலவசமாகக் காவலிருப்போரும் உண்டு.

"அங்கச் சண்டை உச்சமாயிருச்சி மாரி. ஆரும் கடலுக்குள்ள வாரதில்ல" என்றான் அருள்தாஸ்.

வேறு வழியில்லாமல் கடற்படையினரிடம் அகப்பட்டுக் கொண்டார்கள்.

எல்லை தாண்டி வந்த குற்றம் கூட மன்னிக்கப்படலாம். எதிரிக்கு கூசல் கொடுத்தவனைச் சும்மா விட மாட்டார்கள்.

அருள்தாஸின் சட்டை, நிஜார் பையைப் பரிசோதித்துப் பணத்தை எடுத்தார் ஓர் அதிகாரி.

நேவி ஆபீசிலேயே கட்டிப் போட்டு வைத்திருந்தார்கள்.

எதற்கு விசாரிக்க வேண்டும்? எதுவுமே உணரக்கூடிய விஷயங்கள். தேவை கொஞ்சம் மனிதாபிமானம்,

"இப்பஞ் சண்டைக் காலம்ங்கறதால நம்மளை விடறது அத்தனை லேசில்லை பாத்துக்க. முடிஞ்சா தப்பிச்சிற வேண்டியது தான்" என்றான் அருள்தாஸ்.

இருள் பூசிய அறையின் மேற்குச் சுவர் மேலிருந்த சாளரத்தை கவனித்துக் கொண்டிருந்தான் அருள். பகல் பொழுதில் வெயிலடிக்கும் விதத்தைக் கொண்டு கடலிருந்த திசையை ஊகித்தான். ஏறிக் குதித்தாலும் எதிர்ப்புறமாகத்தான் ஓடியாக வேண்டும். அபத்தமாக மாட்டிக் கொண்டால் பிறகு மீள முடியாது போகலாம்.

மூன்று தினங்கள் கடந்து விட்டிருந்தன. பகலில்லை. இரவில்லை. காலம் உறைந்து விட்டாற்போலிருந்தது அவனுக்கு. துக்கமெல்லாம் வற்றி, வெளியேறுவது பற்றிய சிந்தனை ஒன்றே இருவர் மனத்திலும் நீக்கமற நிறைந்திருந்தது.

ஏழாம் நாள் காலை அந்த அறைக்குப் புதிதாக ஒரு விருந்தாளி வந்து சேர்ந்தான். கடற்படையின் படகையே திருடப் பார்த்த சொந்தச் சகோதரன்.

'உங்களையெல்லாம் இப்போது விசாரிக்கவும் மாட்டார்கள்; திருப்பியனுப்பவும் மாட்டார்கள். இங்கே நிலைமை வெகு மோசமாகியிருக்கிறது. நீதிபதிகளெல்லாம் மருத்துவ விடுப்பில் போய் விட்டார்கள்' என்று சிரித்தான்.

சாப்பிடும் போது, 'பணம் வைத்திருக்கிறீர்களா?' என்று கேட்டான், புதியவன்.

அருள்தாஸ் எடுத்துக் காண்பித்தான்.

'போதும்' என்றான் அவன்.

கழிப்பறையைச் சுத்தம் செய்ய வந்த பெண்மணியிடம் அவன் அந்தப் பணத்தை அப்படியே அளித்த தினத்தின் இரவில் அறைக் கதவின் பூட்டு திறந்து கொண்டது.

பாதை புலனாகாத இருளில் அருள்தாஸும் மாரியும் பதறி ஓடுவதைப் பார்த்துக் கொண்டே அவன் படுத்து உறங்க ஆரம்பித்தான். தலைமன்னாரில் நல்ல உணவும் பாதுகாப்பான உறையுள்ளும் வெளியே வேறு கிடைப்பதில்லை போலும் என்று நினைத்துக் கொண்டான் அருள்தாஸ்.

பதுங்கிப் பதுங்கி நகர்ந்து அவர்கள் அலைச் சப்தம் எட்டும் தூரத்தைத் தொடவே முக்கால் மணி நேரமானது.



"என்னையும் மதிச்சு புதுசா வாங்கின பாத்திரங்கள் நல்லா இருக்கான்னு கேக்கறது ரொம்ப சந்தோஷமா இருக்கு சரசு!"

"என்ன இருந்தாலும் உங்களோட பேண்ட் ஷர்ட்டைப் போட்டு வாங்கின தாச்சே!"

— சீர்காழி வி.ரேவதி

சற்றும் யோசிப்பதற்கில்லாமல் குதித்து நீந்தி, இலக்கற்றுப் பயணஞ் செய்து கரை தேடிக் கண் சொருகிய போது யாரும் தம்மைத் தொடர்ந்து வராததை அவன் கவனித்தான்.

பதினெட்டு மைல்கள்தாம். நீந்தியே கூடக் கடந்து விட முடியும். பயம் கவிந்த மனம் உடலைத் துவளச் செய்யாதிருந்தால் அது பெரிய விஷயமல்ல என்று அவன் நினைத்தான்.

தலை கிறுகிறுக்க, கால்கள் துவண்டு அவர்கள் மூழ்கி மூழ்கி எழுந்த போது ஒரு படகு வந்தது. இலங்கைப் படகு. தலைக்கு எட்டாயிரம் கொடுத்துத் தமிழகக் கரையோரம் வந்து சேர முனைந்த அகதிகள்

## கொஞ்சம் கவனியுங்கள்!

சிவகங்கை மாவட்டம் பிள்ளையார்பட்டியிலிருந்து மூன்று கி.மீ. தூரத்தில் உள்ளது சிறுகூடல்பட்டி. கவியரசு கண்ணதாசன் பிறந்த ஊர். இந்த ஊரின் கிராமதேவதை மலையரசியம்மன். இந்தக் கோவிலில்தான் கவியரசு கண்ணதாசன் பத்து வயதில் தன் முதல் கவிதையை எழுதினார்.

இந்தக் கோவிலின் உட்பிராகரத்தில் மலையரசியம்மனைப் பற்றி கண்ணதாசன் எழுதிய கவிதைகளை வரிசையாக எழுதி வைத்துள்ளனர். பகுத்தறிவாளர் இயக்கத்தில் பற்றாளராக இருந்த கண்ணதாசன் கடவுள் மறுப்புக் கொள்கையை கடைபிடித்தவர். அதிலிருந்து மீண்டபின் அவர் மலையரசியம்மனைப் பற்றி பாடிய கவிதைகள் அதில் இடம் பெற்றுள்ளது.

இந்தக் கோயிலுக்கு அருகில்தான் கண்ணதாசன் பிறந்த வீடு. பராமரிக்க ஆளின்றி கழுவை முட்களின் புகலிடமாக இருக்கிறது. காரைக்குடியில் கண்ணதாசனுக்கு மணிமண்டபம் கட்டிய தமிழக அரசு கண்ணதாசன் பிறந்த இடத்தில் ஒரு நினைவுச் சின்னத்தை எழுப்பலாம் என்பது சிறுகூடல்பட்டி மக்களின் எதிர்பார்ப்பு.

• கண்ணதாசன் பிறந்த வீடு



— கி. சிங்காரவடிவேல்

அருள்தாஸையும் மாரியையும் பிடித்து இழுத்து, ஏற்றிப் போட்டார்கள்.

அப்போதும், தனக்கின்னும் நினைவு தப்பாதது பற்றிய வியப்பிலேயே இருந்தான் அருள்தாஸ்.

"மாரி, முளிச்சிக்கடா. அந்தோணிசாமிதான் நம்மைக் காப்பாத்திருக்காவ" என்று அவனைப் பிடித்து உலுக்கினான்.

ஆசுவாசப்படுத்திக் கொள்ள அவர்கள் சற்று அவகாசமும் சில வாழைப்பழங்களும் தந்தார்கள். இருபது பேர். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் சாமான்களும்.

இரவின் கருமையில் முகந்தெரியாத அன்பின் பனிப்பொழிவில் இருவரும் நன்றியுடன் கண்பனித்தார்கள்.

நாலாந்திட்டுக்கு சங்குக் கடை ராஜு வந்திறங்கிய உடனே அருள்தாஸைப் பார்த்து விட்டான்.

"அருளு...! வந்துட்டியா!" என்று ஓடிப் போய் அவனை அணைத்துக் கொண்டவன், உணவுப் பொட்டலங்களைத் தன் சகாக்களை வழங்கச் சொல்லிவிட்டு இருவரையும் ஏற்றிக் கொண்டு, தனுஷ்கோடிக்கு வராமல், சுற்றிக் கொண்டு பாம்பனில் போய் இறங்கினான். பிறகு பஸ் பிடித்து ராமேஸ்வரம் வந்து, கட்சி ஆபீசில் ஜீப் எடுத்துக் கொண்டு கிளம்பினான், தனுஷ்கோடி காவல் நிலையத்துக்கு.

சாத்தியமற்ற சம்பவங்களையும் சாத்தியமாக்கும் தருணங்கள். அருள்தாஸுக்கு இப்போதும் கனவே போலத்தான் இருந்தது, தான் தப்பிப் பிழைத்ததும் உயிர் மீண்டதுமான தருணம்.

இத்தனையும் எடுத்துச் சொன்னால் புரிந்து கொள்வாளா உமா? 'அவங்களுக்கு டீசல் தர மாட்டேன் போடா'ன்னு சொல்ல வேண்டியதுதானே என்று குழந்தை மாதிரிக் கேட்பாள்.

தரமாட்டேன் என்று சொல்ல முடியாத அபாயத்தை விளக்கினால் இனி நீ கடலுக்குப் போகாதே என்பாள்.

அபாயங்களைக் கருதுபவன் எப்படியொரு உண்மையான மீனவனாயிருக்க முடியும்? ஆனால் உமாவைப் போலொரு பெண்ணை மணக்க முடிவு செய்தபின் தான் தொடர்ந்து கடல் வேலைக்குச் செல்ல முடியுமா என்றும் அவனுக்குக் குழப்பமாயிருந்தது.

படித்திருக்கலாம். குறைந்தது பத்தாம் வகுப்பு வரையிலாவது. ஆனால் ஒரு கடை போட்டுப் பிழைக்கப் படித்த ஏழாம் வகுப்பு உதவாமலா போய்விடும்?

இப்படி யோசித்துக் கொண்டிருந்த போதே, அவனுக்குத் தான் படகை இழந்து விட்டோம் என்கிற எண்ணம் உதிக்க, திக்கென்று அடைத்தது மனம். கடை போடும் எண்ணமெல்லாம் வந்த சுவடு தெரியாமல் ஓடி மறைய, படகை இழந்த துக்கம் பெரும் அழுகையாகப் பீறிட்டு வெடித்தது.

(தொடரும்)

வண்ணப்படம் : கோபுலு



நினைத்தாலே களிப்பூட்டும் கலைக்களஞ்சியம்

# கல்கி தீபாவளி மலர் - 2000

விலை ரூ.60/-

# கவனிப்பில் இளகிய

**மே**ற்கு வங்கத்தில் அசைக்க முடியாத உறுதியுடன் அரசியல் களத்தை ஆக்கிரமித்திருந்த மார்க்ஸிஸ்ட் கட்சிகூட ஆட்டம் கண்டிருக்கிறது. கால் நூற்றாண்டு ஆதிக்கம் தளர்ந்து தோல்வி பயம் ஏற்பட்டுள்ளதற்குக் காரணம் மம்தா பானர்ஜி! "ஆனால், 'இந்தப் பயத்தினால் திருணமுல் தொண்டர்களை மார்க்ஸிஸ்டுகள் தாக்குகிறார்கள்' என்கிற குற்றச்சாட்டில் முழு உண்மை இல்லை" என்கிறார் ஒரு மார்க்ஸிஸ்ட்.

"திருணமுல் ஒரு மாபெரும் சக்தியாக உருவாகிவிட்டதற்காகப் பயந்து நாங்கள் தாக்கவில்லை; அவர்கள் பெரும் நாச வேலைகளில் ஈடுபடுகிறார்கள். குறிப்பாக மம்தா பானர்ஜி அமைச்சரான பிறகு இது அதிகரித்திருக்கிறது. மார்க்ஸிஸ்டுகள் நடத்துவது எதிர்த்தாக்குதல்தான்" என்கிறார் அவர்.

இடைத் தேர்தலில் மார்க்ஸிஸ்டுகள் வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றி கள்ள வோட்டுப் போட்டதாகக் குற்றம் சாட்டியிருக்கிறார் மம்தா பானர்ஜி.

"அது உண்மையானால் எங்கள் கட்சியைச் சேர்ந்த குருதாஸ் தாஸ்குப்தா ஏன் தோற்க வேண்டும்?" என்று கேட்கிறார் தர்பார் வட்டாரத்துக்கு நெருக்கமான அந்த மார்க்ஸிஸ்ட்காரர்.

மத்திய அமைச்சரவையில் அங்கம் வகிப்பதால் மம்தா படுத்தும் பாடைப் பார்த்துவிட்டுத்தான், "மார்க்ஸிஸ்டுகளும் மத்திய அரசியலில் பங்கேற்பது அவசியம்" என்ற முடிவுக்கு வந்திருக்கிறாராம் ஜோதிபாஸு!

**மூ**ட்டு வலியைக் காட்டிலும் பிரதமருக்குத் தொல்லை கொடுத்து வரும் மம்தா பானர்ஜி, "மேற்கு வங்கத்தில் 356 பிரயோகிக்க முடியாவிட்டால் 355 ஆவது பிரயோகியுங்கள்" என்கிறார்! இந்த ஷரத்தின் கீழ், மாநிலத்தில் ஒரு பகுதியில் கலவரம் என்று கூறி மத்திய அரசு தலையிட முடியும். ஆனால் அவ்வாறு தலையிடும் முன் மாநில அரசே, மத்திய அரசுக்கு 'கலவரம்' என்று அறிக்கை தர வேண்டும். அவ்வாறு அறிக்கை தரப்படாமலே மத்திய அரசு செயல்பட்டு ஒரு மாநிலத்தின் சில பகுதிகளை கலவர பூமியாக அறிவிக்க அதிகாரம் பெறும் வகையில் 'டிஸ்டர்ப்ட் ஏரியா ஆக்ட்' என்ற சட்டத்தைத் திருத்தி விடலாமாம் – யோசனை தருபவர் – வேறு யார்...? மம்தா பானர்ஜிதான்!

**உ.பி** பக்கம் போனால் அங்கும் சுசமுசாதான். கல்யாண் சிங் வெளியேறிய பிறகு பி.ஜே.பி.யின் இமேஜ் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரிடையே சரிந்து போய்விட்டது. இப்போது உ.பி. பா.ஜ.கவின் புதிய தலைவர் கல்ராஜ் மிஷ்ரா – "மாயாவதியுடன் கூட்டணி வைத்துக் கொள்வோம்" என்று ஆரம்பித்திருக்கிறார்! தலித் வாக்குகள் வேண்டும் என்பதற்காகத்தான் இந்த முடிவு என்பதைச் சொல்லத் தேவையில்லை.

முலாயம்சிங்கை முந்திக்கொண்டு இதைச் செய்துவிட வேண்டும் என்று குறியாயிருக்கிறது உ.பி. பி.ஜே.பி. பிற்படுத்தப்பட்ட வகுப்பினர், மைனாரிடிகளின் ஆதரவை ஏற்கெனவே கணிசமாகப் பெற்றுள்ளார் முலாயம்.

உ.பி.யில் தோல்வி என்பது பி.ஜே.பியால் நினைத்துப் பார்க்க முடியாத விஷயம். பிரதமரின் மாநிலம் –



• கல்யாண் சிங்

அவர் எம்.பியாக இருக்கும் லக்னோ தொகுதியைத் தலைநகராகக் கொண்ட மாநிலம்!

நரசிம்மராவ் பிரதமராக இருந்தபோது காங்கிரஸ் ஆந்திராவில் தோற்றது போல் ஒரு நிலை வந்துவிடக் கூடாது என்று எச்சரிக்கை உணர்வு எழுந்துள்ளது.

**ச**ம்பிரதாயங்களை மீறி, ஒரு அயல் தேச அதி

## டெல்லி தர்பார்

# புதின்!


• புதின்

பருக்கு இந்தியப் பிரதமர் தனிப்பட்ட விருந்து வழங்கியிருப்பது இதுவே முதல் முறை. டெல்லி வந்து இறங்கிய இரவே புதினுக்கு வாஜ்பாய் விருந்து வைத்தார். தாம் ஒரு 'வலது சாரி ஹிந்து தேசியவாதி' என்ற இமேஜ் இதனால் திருத்தப்படும் என்று கணக்குப் போட்டு பிரதமர் செய்த நல்ல காரியம் இது.

பில் கிளின்டனுக்குக் கிடைக்காத ஒரு கூடுதல் மரியாதை புதினுக்குக் கிடைத்தது – மாப்பிள்ளைத் தோழர் போல் ஓர் இந்திய அமைச்சர் அவரது விஜயம் முடிய கூடவே இருக்க ஏற்பாடு செய்யப்பட்டது. தோழர் – அருண்ஷோரி!

அயலுறவுத் துறை வட்டாரங்கள், புதின் தமக்குக் கிடைத்த கவனிப்பால் மகிழ்ந்து இளகியதாகத் தெரிவித்தன.

கையெழுத்தான ஒப்பந்தம் பரஸ்பர ராணுவ, பொருளாதார, பாதுகாப்புப் பரிமாற்றங்களுக்கு வழி செய்துள்ளது. சட்ட வல்லுனர்கள், வழக்குகள் நடத்த உதவி போன்றவைகூட பரிமாறிக் கொள்ளப்படும்.


• ஜோதிபாஸு

பாகிஸ்தானுக்கு எதிராகவும் இந்தியாவுக்கு ஆதரவாகவும் ரஷ்ய பிரகடனங்கள் அமைந்தாலும் இன்னமும் இஸ்லாமாபாத்துடன் ஓர் இணக்கம் இருக்கிறது. இதற்குக் காரணம் ரஷ்யாவின் செசனியா பகுதியிலுள்ள முஸ்லிம்கள் பிரச்னைக்கு பாக். மூலம் தீர்வு பிறக்கும் என ரஷ்யா நம்புவதுதான். எனினும், 'பாக். தெற்காசிய பகுதியில் பயங்கரவாதம் பரப்புகிறது' என்று பகிரங்கமாக - புதின் கூறிவிட்டதால் டெல்லி – மாஸ்கோ வலை ஒரு மிகப் பெரிய இணையமாகி விடும் என்று ராஜதந்திர வட்டாரங்கள் மகிழ்கின்றன.

புதின் வருகையை யொட்டிய மிகப் பெரிய ஜோக்: விஞ்ஞான பவனில் பேசிய முரளி மனோகர் ஜோஷி, ரஷ்யா பற்றிய புள்ளி விவரங்களைத் தப்பும் தவறுமாகக் கூற, அங்கேயே அப்போதே எழுந்து புதின் அவரைத் திருத்தினார்!

— இந்த்ரப்ரஸ்தன்

# மனக்குடைச்சல்

**வீ**ட்டினுள் நுழையும்போது மயான அமைதியை உணர்ந்தான் ரஜ்னீஷ். தயங்கிய படி அச்சத்தோடு மெதுவாய் உள்ளே எட்டிப் பார்த்தான். முற்றத்தில் காற்றில் அசைந்து கொண்டிருக்கும் 'பங்கஜின்' மூன்று சக்கர சைக்கிளையே இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தாள் ஆர்த்தி. அம்மா ஆகாயத்தின் நட்சத்திரங்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வீட்டின் அமைதி அவனுடைய இதயத்தின் வெறுமையை அதிகமாக ஆழப்படுத்தி விட்டது. 'அப்பா'...'அப்பா' என்ற வார்த்தைகளின் பெருமையை வீட்டின் முற்றமும், சுவரும், மூலை முடுக்கும் துழாவித் தேடுவதாய் உணர்ந்தான். மெல்ல உள்ளே பிரவேசித்தான்.

தன்னுடைய ஆண்மையைப் பற்றிய எவ்வளவோ இடர்பாடுகளை அவனால் பொறுத்துக் கொள்ள முடிந்தது. ஆனாலும் இப்போது எதையும் அவனால் தாங்க முடியாது.

ஒரே ஒருமுறை ஆர்த்தி, பங்கஜைத் திரும்ப அழைத்து வரும்படி கேட்டால், இந்த வீட்டின் அழகு திரும்ப வரும். பங்கஜ் இல்லாதது பற்றி ரஜ்னீஷ் 'மனம்' உடைந்து போனான். ஒவ்வொரு நிமிடமும் அவனுடைய குற்றத்தின் சுமை அவன் மனத்தை அழுத்திக்கொண்டிருந்தது.

உண்மை என்னவென்றால் ஒரு பாவமும் அறியாத பங்கஜோடு அதிகமாக விளையாடிவிட்டான்.

கடைசி முறையாக ஹாஸ்டல் வராந்தாவில் ரஜ்னீஷ் கால்களைப் பிடித்துக் கொண்டே கேட்டான் பங்கஜ்.

"அப்பா... நான் நீங்கள் இல்லாமல் எப்படி இருப்பேன்?"

ரஜ்னீஷ் செய்ய வேண்டிய பிராயச்சித்தம் அப்போதே ஆரம்பித்துவிட்டது. ஆனால் தயங்கினான்.

எல்லாக் குறைகளும் எல்லா மனப் புழுக்கங்களும் நொடியில் மறைந்து போனது மாதிரி ரஜ்னீஷ் உணர்ந்தான். பங்கஜை ஹாஸ்டலில் விட்டது பற்றிக் கொடிய தந்தை என்ற பழி வந்து விடுமோ என்ற பயமும் ஏற்பட்டது.

கவலைகளாலும் மனமுடைந்து போன நிலையிலும் அவனுடைய இதயத்தை பங்கஜ் நினைவு ஆக்ரமித்துக்கொண்டது.

ஹாஸ்டலில் இருக்கும் குழந்தைகளுக்கு எந்தக் குறையும் இல்லை. ஆனால் இவர்களுடைய ஒரே மகன் கல்யாணம் ஆகிப் பத்து வருடங்களுக்குப் பிறகு ஆர்த்தியின் வயிற்றில் வந்தவன். அம்மாவின் எத்தனையோ பிரார்த்தனைகளுக்குப் பலனாகக் கிடைத்தவன். இதனாலேயே எல்லோரும் அவனிடம் பாசமாக இருந்தார்கள். இயல்பாக இருந்தார்கள். ஆனால் இவனால் அப்படி முடியாது. இவனை யாரும் சந்தேகக் கண்களோடு பார்த்து விடக் கூடாதே என்ற பயம் இருந்தது. பங்கஜை ஹாஸ்டலில் விடுவது என்பது முன்னமே எடுத்த முடிவு தான். ஆனால் அம்மா படபடத்தாள்.

"உனக்கிருக்கும் ஒரே பிள்ளையை ஹாஸ்டலில் கொண்டு போய் விடுவதற்கு வெட்கமாக இல்லை உனக்கு? இவனுக்காகக் கடவுளிடம் எவ்வளவு பிரார்த்தனை செய்து வேண்டி இருப்போம்? மறந்து விட்டாயா?

ரஜ்னீஷ் மௌனமாக இருப்பதைப் பார்த்து அம்மா மார்பில் அடித்துக் கொண்டே புலம்பினாள்! அழ ஆரம்பித்தாள். ஆர்த்தி, பங்கஜை அணைத்தபடி, அம்மா அருகில் அமர்ந்து விசும்பிக்கொண்டிருந்தாள். அம்மாவுக்கும் ஆர்த்திக்கும் வேதனை ஆழமாக இருந்தது. உண்மையில் ரஜ்னீஷின் வேதனையை எடை போடுவது கடினமானது. அவன் ஒரு போதும் தன்னுடைய வேதனையைக் கண்ணில் மின்னவிடவில்லை. இதயத்தில் மறைந்திருந்த வலி மெல்ல மெல்ல ஆழ்ந்த புண்ணாகப் புற்றுநோயாக ஆகி விட்டிருந்தது.

விளைவு... ரஜ்னீஷ் கொடூரமானவனாக எல்லோருக்கும் தோன்றினான். அவனு



டைய துரதிருஷ்டம் சரளமான தோழமையை வெளிப்படுத்த முடியாமல் அரக்கனாக மாற்றிவிட்டிருந்தது.

ரஜ்னீஷ் மௌனமாகப் படுத்துக்கொண்டான். அவனால் தூங்க முடியவில்லை. கண்கள் திறந்த நிலையில் படபடத்தன. பங்கஜின் குரல் காதில் ஒலித்துக்கொண்டிருந்தது.

''அப்பா... நீங்கள் இல்லாமல் நான் எப்படி இருப்பேன்?''

''ரஜ்ஜீ... சாப்பிட வா....'' – அம்மாவின் குரல்.

''இல்லே... வேண் டாம்... பசிக்கலே...''

பதில் கேட்டதும் அம்மா வேகமாகத் திரும்பிப் போனாள். இன்று மறுபடியும் யாரும் எதுவும் சாப்பிட மாட்டார்கள். ஆர்த்தி அதிகமாய் அழுவாள். அதனாலேயே உறக்கமும்

இந்தியில்: **நிர்மலா சுரேந்திரன்**

தமிழில்: **சித்ரகலா ஸ்ரீதரன்**

அவளுக்குச் சீக்கிரமே வந்து விடும். ஆனால் அவனால் அழவும் முடியாது; தூங்கவும் முடியாது.

தூங்குகிற முயற்சியில் அவன் வலுக்கட்டாயமாய்க் கண்களை மூடியபோது சரீரத்தின் மூலை முடுக்கெல்லாம் யுத்தம் ஆரம்பம் ஆகி விட்டது. எலும்புக்கும் தசைக்கும் நடுவிலே ஒரு ஆழமான யுத்தம். யுத்தத்தில் கத்தல்கள் – கூப்பாடுகள் இடையே காது கிழிபட ஆரம்பித்ததாய் அவனுக்குத் தோன்றிற்று. அவன் ஓங்கிக் கத்தி – அவ்வளவு ஓங்கி – எவ்வளவு என்றால் ஆர்த்தியின் இதயம் வரை ஊடுருவ வேண்டும்.

அப்புறம் ஆர்த்தி தன்னுடைய தோழமை உணர்வால் அவனுடைய வலியைக் குறைக்க முயற்சிக்க வேண்டும். ஆர்த்திக்கு உடல்நலக் குறைவு காரணமாக அவனுடைய நண்பன் டாக்டர் கஷ்யப்பிடம் போக நேர்ந்தது.

"இங்கே பார்... ரஜனீஷ்... அண்ணிக்கு மனநோய் இருக்கிறது. அவள் அம்மா ஆக முடியவில்லையே என்ற ஏக்கத்தால்தான். ஒருவேளை அவள் அம்மா ஆகாவிட்டால் பைத்தியம்கூட ஆகக் கூடும். ஆர்த்தி அண்ணியின் மேல் உள்ள அக்கறையால்தான் இவ்வளவு பெரிய விஷயத்தை உன்னிடம் சொல்கிறேன்" –

"..............."

"உங்கள் இருவரையும் பரிசோதித்ததில் குறை அண்ணியிடம் இல்லை... உன்னிடம் தான்..."

"என்ன...?" வீறிட்டெழுந்தான் ரஜனீஷ். கடந்த பத்து வருடங்களாக ஆர்த்தி, அம்மாவின் கோபத்திற்கு ஆளாகி இருந்தாள். ஆனால் அவனிடமேதான் குறை இருந்தது. தன்னுடைய ஆண்மையின் மீது இத்தனை ஆழமான அடி விழும் என்று அவனுக்குத் தோன்றாமல் இருந்தது. அவன் குழந்தையாய்த் துடித்துப் போனான்.

"இது அழுகிற விஷயம் இல்லை.. ரஜனீஷ்... உன் குறையை உணர்ந்து அதை ஆராய்வதற்கான நேரம் இப்போது இல்லை. உன்னை நீயே சபித்துக் கொள்வதால் பயன் இல்லை. நீ ஆர்த்தி அண்ணியை மறுபடியும் ஒருமுறை இங்கு அழைத்து வர வேண்டும். இரண்டு நாளைக்கு அவளை மருத்துவமனையில் சேர்த்து விட வேண்டும்."

"எதற்காக?"

"உனக்கு நானே சொல்ல வேண்டும் என்றிருந்தேன். ஆனால் இதைக் கேட்டு உன் மனம் உன் வசம் இருக்குமா? என்ன பாடுபடுமோ! ஆனால் நான் உனக்குச் சொல்ல வேண்டியது மிகவும் முக்கியம். இங்கே பார்... ரஜனீஷ்... விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்திருக்கிறார்கள். இப்போது எல்லாப் பெண்களும் தாயாக முடியும். கணவன் கொஞ்சம் புரிந்து கொள்பவனாக – இந்தக் காரியத்தில் பங்கேற்கிறவனாக – இருக்க வேண்டும். ஆர்த்தி அண்ணியும் அம்மா ஆகலாம். இதற்கு ஒரே வழி தான் இருக்கிறது. ஆபரேஷன் மூலமாக வேறொரு ஆணின் விந்துவை அண்ணியின் கர்ப்பத்தில்..."

"ம்... கூடாது..." – வீறிட்டான் ரஜனீஷ். எவ்வளவு பெரிய அவமானம்! வாழ்க்கை முழுவதையும் அவனால் எப்படி சகித்துக் கொள்ள முடியும்? அந்தக் குழந்தையை – அவனுடையது அல்லாத ஒன்றை – ஆனால்

**''பெட்ரோல் டீசல் விலையேறப் போறதை நினைச்சு அந்த ஆளு ரொம்ப ஃபீல் பண்றாரு.''**

**''எப்படி?''**

**''காருல பாய்மரம் வச்சு ஓட்ட முடியுமான்னு கேட்குறாரு!''**

**– பாம்பன் செ. சல்மான்**

ஆர்த்தி? அவள் இல்லாமல் வாழவும் முடியாதே?

இதயத்திலும் மூளையிலும் ஆழமான யுத்தம் மூண்டது. வெற்றி என்னவோ மூளைக்குத்தான். ஆர்த்தியின் வாழ்க்கையைக் காப்பாற்றும் பொருட்டு ரஜனீஷ், இதைத் தீர்மானம் செய்ய வேண்டியதாயிற்று. இந்த அவமானத்தை அவன் ஜீரணித்தே ஆக வேண்டும். இந்த விஷயத்தை யாரிடமும் சொல்ல மாட்டேன் என்று டாக்டர் கஷ்யப் உறுதி அளித்தார். ஆர்த்திக்குக் கூட தெரியாமல் நடைமுறைப்படுத்த முடிந்தது.

**வி**ஞ்ஞானக் கண்டுபிடிப்பு ஆர்த்தியின் வாழ்க்கைக்கு நன்மை அளித்தது! ஆர்த்தியின் கர்ப்பத்தில் வளரும் குழந்தையின் பொருட்டு அவன் பொருமுவான்.

ஆர்த்தி சந்தோஷமாக இருந்தாள் என்றால் அவனுக்கு உடலும் உள்ளமும் எரிந்தன. எத்தனையோ முறை ஆர்த்தி அவனுடைய காதை இழுத்துத் தன் வயிற்றின் மீது வைத்தபோது அவனுடைய நாடி நரம்பு

களைச் சம்மட்டியால் அடிப்பதாய் உணர்வான். போலியாகப் புன்னகை செய்து, தன் முகத்தைக் காட்டினாலும் உள்ளூரக் கொதித்துப் போவான்.

ஆர்த்தி உற்சாகமாக இருக்கும்போது தாய்மையின் பூரிப்பு கண்களில் மின்ன, அவன் கைகளைப் பற்றித் தன் வயிற்றின் மீது தடவிக் கொண்டே குழந்தையின் துடிப்பை – அசைவை – தெரிவிப்பாள். அப்போது அந்த முகம் அறியாத குழந்தையின் மேல் கடுப்பாக இருக்கும்.

ஆர்த்தி குழந்தையுடன் வீடு வந்த போது குழந்தைக்கான பெயர்கூட 'பங்கஜ்' என்று தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டது. ஒவ்வொரு நாளும் குழந்தையின் செயல்களை உன்னிப்பாய்க் கவனிப்பாள். அதனுடைய ஒவ்வொரு மாறுதலையும் கண்டு கூத்தாடு



வாள். கொஞ்சும் கிளியின் குரலில் கேட்பாள்:

''யாரோட செல்லக் கண்ணன்... சொல்லு...!''

பதிலாக அவளே சொல்லிக் கொள்வாள்: "அம்மாவோட செல்லக்குட்டிதானே நீ?"

குழந்தை ஆர்ப்பரித்து சிரிப்பான்.

ரஜ்னீஷ் மனதுக்குள்ளேயே சிரித்துக் கொள்வான்: ''உண்மைதான்... அவன் அம்மாவின் பிள்ளைதான். அவனுடைய தந்தை இந்த வீட்டிலேயே இல்லையே!''

அடுத்தடுத்துப் பல மாறுதல்கள்... கவிழ்வது, பல் முளைப்பது, தவழ்வது, மழலையில் மிழற்றுவது... எல்லாவற்றுக்கும் ரஜ்னீஷ் மௌனமாகவும் – மனத்துக்குள் போராடுபவனாகவும், ஆர்த்தியோடு மகிழ்ச்சியாக இருப்பதாக நடிப்பவனாகவும் இருந்தான்.

'அப்பா... என்று குழந்தை முதல் முதலில் அழைக்க ஆரம்பித்தபோது ஆர்த்தி சந்தோஷத்தில் பைத்தியம் ஆகாத குறைதான்.

எப்போதாவது ஆர்த்தி ஆசையோடு கேட்பாள்.

"யாரோட செல்லக் கண்ணன் நீ?"

அப்போது பங்கஜ் மெல்லத் தன் விரல்களை அப்பாவை நோக்கிக் காட்டி, மலர் போன்ற தன் சின்ன இதழ்களை விரித்து மழலையில், "அ..ப்..பா" என்பான்.

''சீ... நீ ரொம்பப் பொல்லாதவன். தொந்தரவெல்லாம் செய்வது அம்மாவிடம். அன்பு செய்வது அப்பாவிடமா?''

ஆர்த்திக்கு அவனைச் சீண்டும் எண்ணமோ? ஆனால் அவன் மனம் இதில் எல்லாம் ஈடுபடவில்லை. எந்த மனக்குடைச்சலில் அவன் வாழ்ந்து வந்தானோ, அதிலிருந்து அவன் விடுபட சமயத்தை எதிர் பார்த்திருந்தான். பங்கஜ் அவனிடமிருந்து தொலைவில் இருந்தால் மனக்குடைச்சல் குறையும் என்று நினைத்தான். அவனை ஹாஸ்டலில் விடுவதன் மூலம் தன்னை 'அப்பா... அப்பா...' என்று அழைப்பதிலிருந்து விடுபடலாம் என்று நினைத்தான்.

அவன் உள்மனம் கல்லாகவும் மெழுகாகவும் இருந்தது. இதயத்தின் கடினம் மேலுக்குப் படிந்திருந்தது. அது கலைந்த போது அவன் துடித்துப் போனான். ஹாஸ்டலுக்கு அனுப்பிய பின் பங்கஜின் மழலைப் பேச்சு – ஓடி ஆடுவது – அப்புறம் அலுவலகத்திலிருந்து வந்ததும் கால்களைப் பிடித்துக் கொள்ளுதல் – எல்லாம் ஒரு புது வடிவமாய் எதிரில் வந்தது. பங்கஜ் தன் பிஞ்சுக் கைகளைப் பரப்பி அவனிடம் தாவி வருவானே... அதெல்லாம் இப்போது நினைவுக்கு வந்தது.

அம்மாவோ ஆர்த்தியோ குழந்தை மேல் செலுத்தும் அன்பின் பொருட்டு – அவன் இல்லாமல் அவர்கள் ஏங்குவதை வெளிப் படுத்தினால் – அதையே ஒரு காரணமாக வைத்து – அவன் பங்கஜைத் திரும்ப அழைத்து வந்து விடுவான். அதற்கப்புறம் திருப்பி அனுப்ப வேண்டாம். தவறாய்த் தீர்மானித்து விட்டதற்காகப் பச்சாதாபப்பட்டுக் கொண்டான். கூடவே தவறை ஒப்புக் கொள்ளக் கூடாது என்ற பிடிவாதமும் இருந்தது. இது பற்றிய விஷயம் தெரிந்த பிறகு ஆர்த்தி அவனை மன்னித்து ஏற்பாளா? ஒருவேளை ஏற்காவிட்டால் – இது பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினால் – அப்புறம் இந்த ரகசியத்தை இத்தனை நாள் காத்ததற்கு அர்த்தம் என்ன?

அவனால் உண்மை என்னவென்று சொல்ல முடியும்? ஆர்த்திக்கு இந்த உண்மை தெரிகிற பட்சத்தில் கஷ்டமானது என்பதை விட விஷயம் விஷமாகிப் போகும். அத

னால் தவறை ஒப்புக் கொள்வதென்ற பேச்சுக்கே இடமில்லை.

ஆர்த்தி, ரஜ்னீஷை ஹாஸ்டலில் விடுவதென்ற தீர்மானத்தை எவ்வித சந்தேகமும் இன்றி பங்கஜின் நன்மைக்குத்தான் என்று நினைத்தாள். ஒருவேளை அதனாலேயே அவள் பங்கஜைத் திரும்ப அழைத்து வரும்படி வற்புறுத்தவில்லையோ! இது வேறு தனி விஷயம். அவர்கள் பேசுவதை நிறுத்திக் கொண்டார்கள். ஆனால் அவன் தனக்குத் தானே செய்த சதியில் மோசமான நிலையில் சிக்கிக் கொண்டான். விடுதலை பெறுவதற்கான எந்த உபாயமும் புலப்படவில்லையே..!

நினைத்து நினைத்து எப்போது கண்கள் மூடிக் கொண்டனவோ, அவனுக்கே தெரியாது. கண்களைத் திறந்தபோது உடம்பு பூராவும் சண்டையிட்டுக் கொண்டிருந்தது.

அழைப்பு மணியின் அலறலில் அவன் அறையை விட்டு வெளியே வர வேண்டியதாயிற்று. வந்தவன் தயங்கி நிற்க வேண்டியதாயிற்று. வந்தவர் டாக்டர் கஷ்யப். மிகுந்த கவலை முகத்தில் தென்பட, ஆர்த்தியின் அருகே அமர்ந்து கொண்டார்.

''என்ன அண்ணி...? என்ன விஷயம்?''

"என்னுடைய கவலையைச் சொல்வதற்காக அழைத்தேன்."

எத்தனையோ நாட்களுக்குப் பிறகு இன்று அவனுக்கு ஆர்த்தியின் குரல் கேட்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

"அம்மாவின் உடல்நிலை மோசமாக இருக்கிறது. பங்கஜ் இல்லாமல் அவர்கள் சோகமாக இருக்கிறார்கள். இரண்டே வாரங்களில் எல்லாமே மாறிவிட்டது போல் இருக்கிறது. நான் சொல்வதை அவர் கேட்டதாக சரித்திரம் இல்லை. கேட்கவும் மாட்டார். நீங்களே புரிய வையுங்களேன்...''

"முடியாது அண்ணி..." நீண்ட பெருமூச்சு விட்டார் டாக்டர் கஷ்யப்...

"பங்கஜை ஹாஸ்டலுக்கு அனுப்புகிற செய்தி கேட்ட உடனேயே ரஜ்னீஷை சந்தித்துப் புரிய வைக்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் இதற்கு மேல் என்ன புரிய வைக்க வேண்டும்? சில வருடங்களுக்கு முன் ஏற்றுக் கொள்ள வேண்டிய விஷயம் என்று சொல்லி இருந்தேன். அதனுடைய தகிப்பு இன்னும் குறைந்தபாடில்லை போல் இருக்கிறது. பரிதாபப்படுகிறேன். சில பேருடைய குணங்களையும் எண்ணங்களையும் மாற்றவே முடியாது. சின்ன மனிதர்களுடைய எண்ணங்களை மாற்றவே முடியாது."

''சில வருடங்களுக்கு முன் என்ன சொல்லிப் புரிய வைத்தீர்கள் அவருக்கு?''

"உங்களைப் பற்றி..."

அந்த வார்த்தைகளைக் கேட்டு சிலிர்த்துப் போன ரஜ்னீஷ் முன்னே பாய்ந்து வந்தான்.

''அடே... எப்படா வந்தே நீ?'' – கஷ்யப்பின் பேச்சை வெட்டியபடி அவன் நடுவில் புகுந்தான்.

''உன்னிடம் வரலாம் என்றிருந்தேன், உன்னுடைய கார் தேவைப்படுகிறது. டிரைவரோடு கார் வேண்டும். இப்போது பங்கஜ் இல்லாமல் எதுவும் நன்றாக இல்லை. அவனை அழைத்து வந்துவிடலாம் என்று நினைக்கிறேன். போன முறை பஸ்ஸில் வந்தபோது ரொம்பவும் சோர்ந்து போய் விட்டான். அதனால்..." – சொல்லிக் கொண்டே வெட்கப்பட்டான் ரஜ்னீஷ்.

டாக்டர் கஷ்யப் மெதுவாகத் தன் கைகளில் அவனுடைய கைகளை வைத்து அழுத்தினார். ரஜ்னீஷ் கண்களில் பச்சாதாபக் கண்ணீர் பெருகிற்று.

"நீயும் வருகிறாயா ஆர்த்தி?" படபடப்போடு ரஜ்னீஷ் கேட்டபோது, கண்களில் கண்ணீரோடு புன்னகைத்தாள் ஆர்த்தி. துணியை உலர்த்திக் கொண்டிருந்த அம்மா, ஸ்தம்பித்து நின்றாள். ○

**கல்கி 8.10.2000 இதழில் இடம்பெற்ற 'காஞ்சி டு காஷ்மீர்' என்ற கட்டுரையில் காஞ்சி பெரியவருடன் விமான பயணத்தில் இரு ராணுவ வீரர்கள் சிகிச்சை பெற்ற வண்ணம் வந்ததாகச் செய்தி இடம்பெற்றுள்ளது. அவ்விரு வீரர்களும் சிகிச்சை பெற்று நலமடைந்து விட்டார்கள். கட்டுரையின் இறுதி வரிகள் தவறான செய்தி உணர்த்தியமைக்கு மிகவும் வருந்துகிறோம்.**

**– ஆசிரியர்.**



# கோஸ்ட்டுனிகா!

பெல்கிரேடில் எதிர்க்கட்சியினரும், பொது மக்களும் நாடாளுமன்றத்தை முற்றுகையிட்டுத் தாக்கும் அளவுக்கு கொந்தளித்துக் கொண்டிருக்கிறது யூகோஸ்லோவியா!

செப்டெம்பர் 24ஆம் தேதி நடந்த தேர்தலில், தற்போதைய அதிபர் மிலோசெவிக்குக்கு முதல் சுற்றில் 40.25 சதவிகித வோட்டுக்களும், அவரை எதிர்த்துப் போட்டியிட்ட கோஸ்ட்டுனிகாவுக்கு 48.96 சதவிகித வோட்டுக்களும் பதிவாகியிருந்தன. ஆனால் உண்மையில் இவருக்கு 52.54 சதவிகித வோட்டுக்கள் பதிவாகி இருப்பதாகவும், தேர்தல் கமிஷன் முந்நூறு வோட்டுச் சாவடிகளில் பதிவாகியுள்ள ஆறு லட்சம் வோட்டுக்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், மிலோசெவிக்குக்கு ஆதரவாகப் பொய்க் கணக்குச் சொல்லுவதாகவும் எதிரணியினர் குற்றம் சாட்டினர்.

இரண்டு லட்சம் பேர் பங்கு கொண்ட பிரும்மாண்டமான பேரணியில், தாம் தெளிவான மெஜாரிடி பெற்றுவிட்டதாகவும், தேர்தல் கமிஷனின் இரண்டாவது சுற்று எண்ணிக்கைக்குக் காத்திருக்கத் தேவையில்லை என்றும் அறை கூவல் விடுத்தார் கோஸ்ட்டுனிகா. இவருக்கு ஆதரவாக, பல முக்கிய நகரங்களில் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன.

கோஸ்ட்டுனிகா சட்டத்துறைப் பேராசிரியர். 17 எதிர்க்கட்சிகள் சார்பில், பொதுவான வேட்பாளராக மிலோசெவிக்குக்கு எதிராகப் போட்டியிட்டார்.

மிலோசெவிக்கின் ஆட்சி, கிட்டத்தட்ட சர்வாதிகார ஆட்சி. இவர் மீது ஏகப்பட்ட குற்றச்சாட்டுக்கள். நாட்டின் பொருளாதார நிலை மிக மோசமாக இருக்கிறது. சராசரியாக 900 மார்க் மாத வருமானம் பெற்றவர்கள், இப்போது 85 மார்க் மாத வருமானம் பெறுகிறார்கள்! ஆனால் மிலோசெவிக்கும், அவர் குடும்பத்தினரும் மட்டும், துளியும் கவலைப்படாமல் ராஜபோகமாக வாழ்க்கை நடத்தி வருகிறார்கள்.

'கடவுளே, எங்கள் டீ.வியில் காட்டுவது போல் சுபிட்சமான நாட்டில் நாங்கள் தொடர்ந்து வாழ அருள் புரியும்!' என்று கல்லூரி மாணவ மாணவிகள் கிண்டலாகப் பிரார்த்தனை செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.

எதிர்க்கட்சித் தலைவர்களை துரோகிகள், சாக்கடைப் பெருச்சாளிகள் என்று அபாண்டமாகக் குற்றம் சாட்டியிருக்கிறார் மிலோசெவிக். சுயமரியாதையுள்ள ஒரு செர்பியனை, துரோகி என்றால், அது அவனுக்கு மரண தண்டனை கொடுத்ததற்கு ஒப்பானது என்கிறார் நோபல் பரிசு பெற்ற எழுத்தாளர் ஐவோ ஆண்டிரிக்.

டாக்ஸி, ட்ரக் டிரைவர்கள் சாலைகளை அடைத்து வண்டிகளை நிறுத்த, மாணவர்கள் கல்லூரிகளைப் புறக்கணிக்க, தொழிற்சாலைகள் முழுக்க அடைக்கப்பட்டன. மிலோசெவிக்கை அடிபணிய வைத்து, பிறகு விரட்டியடித்து விட்டுத்தான் மறு வேலை என்று மக்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள்.

சில ராணுவ கமாண்டர்கள் மிலோசெவிக் ராஜிநாமா செய்வது நல்லது என்று கூறியிருக்கிறார்கள். முன்னாள் யூகோஸ்லாவிய பிரதமர் மிலன் பானிக், மிலோசெவிக்குக்கு ரஷ்யா அடைக்கலம் கொடுத்தால் பிரச்னை எளிதில் தீரும் என்று கருத்துத் தெரிவித்திருக்கிறார்.

**கடைசிச் செய்தி:** மிலோசெவிக் தப்பியோடி விட்டதாகவும், எதிர் அணி சார்பில் தாற்காலிகமாக கோஸ்ட்டுனிகா அதிபராகப் பொறுப்பேற்றிருக்கிறார் என்றும் தகவல்கள் வெளியாகியிருக்கின்றன.

**— சித்தார்த்**

# ஸ்வாமி மானேஜ்மண்டானந்தா!

ஷவரிலிருந்து பாலாஜி தலைமீது தண்ணீர் விழுந்ததுதான் தாமதம். 'புஸ்'ஸென்று ஆவியானது. சற்று நேரத்தில் குளிர்ந்த நீரில் குளித்துக் கொண்டிருந்த அவன் மூக்கிலிருந்து 'புஸ்', வாயிலிருந்து 'புஸ்', பாத்ரூம் கதவிடுக்கு வழியாக ஆவி!

பாலாஜி பிரச்னை இன்னும் தீர்ந்த பாடில்லை. ஏறக்குறைய இரண்டு வருடங்களாக அவனும் கிடந்து தவிக்கிறான். வாணலியில் வறுபடும் வேர்க்கடலை கூட இத்தனை வறுபட்டிருக்காது.

வீட்டுக்காரியிலிருந்து வேலைக்காரி வரை அவரவர் ஆலோசனை, அட்வைஸ் செய்யுமளவிற்குப் பாலாஜி நிலை கேவலமாகி விட்டிருந்தது.

பொறியியல் பட்டத்தோடு நிம்மதியாக குட்டித் தொழிற்சாலை நடத்தி வந்தவனுக்கு திடீரென பிசினஸ் கவிழ்ந்துப் படுத்தது. வெளிநாட்டுக் கம்பெனிகள் நம்மூரை ஆக்கிரமித்துக் கடை விரித்ததில் இவன் சேல்ஸ் பூஜ்யமானது. உலகத் தரம் வீட்டு வாசலில் கிடைக்கும்போது லோக்கல் பாலாஜி எதற்கென்று வாடிக்கையாளர்கள் பரந்த முதுகு காட்டிப் பறந்தனர். துரோகிகள். இந்திய டீ.வி. மார்க்கெட் விழவில்லையா?

எத்தனை பிரபல இந்திய பிராண்டுகள் பிக்சர் ட்யூப் போனதுபோல் நொடியில் மறையவில்லை. ஆக இது ஒன்றும் நடக்காதது அல்ல.

என்ன, இந்நிலையை சமாளிக்க திறமை வேண்டும். பிசினஸ் படுத்தால் அதன் சொந்தக்காரன் துண்டை உதறி தோளில் போட்டுக் கொண்டு நடையைக் கட்ட முடியாதே! பல்வேறு கமிட்மெண்ட்கள், கொடுக்கல் வாங்கல் தொங்கலில் இருக்குமே.

இதுவே பாலாஜியின் தத்தளிப்பு. கடந்த ஓராண்டில் நிவாரணம் தேடி அவன் போகாத கோயில் இல்லை, பார்க்காத சாமி, மாமி இல்லை. எங்கிருந்தாவது ஒரு சின்ன ஆரம்பம் கிடைத்து, எல்லா பிரச்னைகளும் 'தடங்கலுக்கு வருந்துகிறோம்' கூறி விடைபெற்று சகஜ நிலை மீளாதா என்ற வெறியில் அலைந்து கொண்டிருந்தான்.

''சுந்தரேசா, நான் பார்க்காத ஸ்வாமிஜியா? ஸ்வாமி விடிவானந்தா, தீர்வானந்தா, money கொட்டானந்தா... எதுவும் சரிப்பட்டு வரலியே. இப்ப இன்னொரு ஸ்வாமிங்கற?'' அக்கௌண்டன்ட் சுந்தரேசன் பாலாஜியைப் பரிதாபமாகப் பார்த்தான். பாலாஜி தொடர்ந்தான், ''உனக்கு மூணு மாசம் சம்பளம் பாக்கி, ஞாபகமிருக்கு. அதை மனசில வைச்சு என்னைப் பழிவாங்கிடாதே''

''சார், பாக்கியை நினைக்காம நல்லதை நினைச்சு சொல்றேன். அப்புறம் அவரைப் பார்க்கிறதும் பார்க்காததும் உங்க இஷ்டம்!''

கடலோர இருபது ஏக்கர் (புறம்போக்கு!) நிலப்பரப்பில் மா, பலா, வாழை, தென்னை, பனை, தோப்புகளுக்கு மத்தியில் ஸ்வாமிஜியின் குடில் அமைந்திருந்தது. காம்பௌண்ட் கேட் திறந்து உள்ளே கால் வைத்ததும், பாலாஜியின் நரம்புகள் புடைத்து, உடலும் மனமும் சுருதி சேர்ந்த தம்புரா போல 'டொய்ங்' என நாதம் எழுப்பிய உணர்வு ஏற்பட்டது. அலையோசை தவிர நிச்சலனம்.

தோட்டத்தில், முண்டாக கட்டிக் கொண்டு ஷார்ட்ஸ் போட்ட பலர் வேலை செய்து கொண்டிருந்தார்கள். பார்க்க வினோதமாக இருந்தது. பெரிய இடத்து வேலைக்காரர்கள். சுந்தரேசன் ஒரு அலட்சிய புன்னகையோடு கூடவே நடந்தான்.

மணிரத்னம் செட்டிங் தோற்றது. அத்தனை க்யூட்டாக காட்சியளித்தது ஸ்வாமிஜியின் குடிசை.

''வா பாலாஜி உட்கார்'' என்றார் இவன் நுழைந்ததும். நடுநடுங்கிப் போனான். 'ரிஷி முனிகளுக்கு ஞான திருஷ்டி உண்டு கேள்விப் பட்டிருக்கிறான். ஸ்வாமிஜியும் அப்படியோ?

''என்ன ஞானதிருஷ்டில உன் 'பேர் தெரிஞ்சிடுத்தானு யோசிக்கறியா?'' புன்னகையுடன் அவர் கேட்டதும் அவனுக்கு மயக்கமே வந்து விட்டது. ''பயப்படாத, சுந்தரேசன் உன் பேரைச் சொல்லியிருக்கான்.''

ஒரு மாதிரி சுய நினைவு மீண்டு ஸ்வாமிஜியை முழுசாகப் பார்த்தான். வெள்ளை முடி, வெண்தாடி, பளபளப்பான மேனி, வெள்ளை ஆடை (ஸ்வாமி



"ஆலா"வுக்கு மாடலாகப் போகலாம்) கூர்மையான கண்கள். வெள்ளை உடை ஸ்வாமி வித்தியாசமாகத் தென்பட்டார்.

''சொல்லு என்ன ப்ராப்ளம்?''

"ஸ்வாமி நான் சொந்த தொழில் பண்ணிக் கிட்டிருந்தேன்..'' தயங்கி நிறுத்தினான்.

''ஊத்திக்கிச்சா?'' எனக்கேட்டார் பளீ ரென்று.

"ஸ்வாமி!"

"ஏன் அதிர்ச்சியாற? பல சமயம் இது மாதிரி சொற்கள் முழு பிரச்னையை, சங் கோஜமில்லாம, எளிதா ஒரே வார்த்தையில சொல்ல உதவும். நம்ம தமிழின் மகிமை!"

"ஆமா ஸ்வாமி, ஊத்திக்கிச்சு!"

"தொல்லை தாங்க முடியலையோ?"

"ம்.."

''கடன் கொடுத்த பாங்க் கழுத்தை நெறிக்கறாங்க.''

"ஆமா... அதோட..."

"தொழிலாளர் சம்பள பாக்கி, மின்சார, டெலிபோன் பில் பாக்கி...'' தொடர்ந்தார் ஸ்வாமிஜி.

"அதுகூட பரவாயில்ல.."

''உனக்கு பொருட்கள் சப்ளை பண்ணவங்க வீட்டில வந்து மிரட்ட றாங்க?"

"...ம்...."

"வீட்டில் மானம் இறக்கை கட்டிப் பறக்குதய்யா..."

"அதேதான் ஸ்வாமி..."

எப்படி ஸ்வாமிஜி தன் பிரச்னை களைப் புட்டு புட்டு வைக்கிறார் என்று ஒரே ஆச்சர்யம் பாலாஜிக்கு. நிச்சயம் இவர் சாதாரண மனுஷனாக இருக்க முடியாது. அவரை அப்படியே சேர்த்துக் கட்டிக் கொள்ள வேண்டும் போலிருந்தது அவனுக்கு.

''வாரத்தில எத்தனை நாள் கோர்ட் கேஸ்..?'' வீட்டுக்காரியிலிருந்து வேலைக்காரி வரைக் கும்...

''அட்வைஸ், அட்வைஸ், அட்வைஸ் தான் ஸ்வாமி...'' பாலாஜி குதிக்காத குறை.

"சரி வீட்டில நாய் இருக்கா?" நிதான மாகக் கேட்டார் ஸ்வாமிஜி.

"இருக்கு...''

"உன்னைப் பார்த்து, வாலாட்டறதா?"

திக்கென்று தூக்கிவாரிப்போட்டது அவ னுக்கு. யோசித்தான் மெய்யாகவே "மோனா" இவனுக்கு வாலாட்டி வெகுநாளாகிவிட்டது. என்ன ஞானம் ஸ்வாமிஜிக்கு? நினைக்க நினைக்க புல்லரித்தது.

"பல முதல் தலைமுறை பிசினஸ்மேன், தொழிலதிபரோடு பிரச்னைதான் உனக்கும். பயப்பட வேண்டாம். முடிவுக்கு வந்திட்டே..."

அவர் பேசிக் கொண்டிருந்த போதே ஒரு முண்டாசு, உள்ளே வந்து வணங்கிச், சென் றது. முண்டாசை நீக்கிவிட்டு பார்த்தால் எங்கோ பார்த்த முகமாக இருந்தது பாலாஜிக்கு. ஏதாவது டீ.வி. சீரியல் அப்பா நடிகரோ என யோசித் தான்.

"இவர்..?"

"பார்த்திருக்கியா பாலாஜி?"

"அப்படிதான் இருக்கு."

''உன் தொழிற்சாலைக்குக் கடன் கொடுத்தது ''லேனா'' பாங்க்கா?"

"கரெக்ட் ஸ்வாமி- எப்படி பட் டட்னு சொல்றீங்க ஸ்வாமி?"

சிரித்தபடி, "அந்த வங்கில ஒரு மானேஜர் இவர்."

மாதுரி

"ஆங் உங்க சீடரா?"

"ம்... அவர் ப்ராப்ளம், கொடுத்த கடன்களை வசூலிக்க முடியல, ஆபீஸ்லே ஒரே குத்தல், குடைசல். இங்க நிம்மதி தேடறார். அதவிடு. எல்லா பிரச்னைகளுக்கும் தீர்வு நம்ம கையில இருக்கு. முன்னோர்கள் நமக்குச் சொல்லி வைத்துப் போகாதது எதுவுமில்லே.. எப்பவும் கையில இருக்கிறதை வியாபாரம் பண்ணனும்.

முண்டாக மீண்டும் உள்ளே வந்தது.

"ஸ்வாமி நான் கிளம்பறேன். ஆபீசுக்கு நேரமாச்சு."

"சந்தோஷம் பத்மநாபன். கலக்ஷன்...?"

"வாங்கிக்கிட்டேன் ஸ்வாமி, 13,500 ரூபாய் இன்னிக்கு."

வாழ்த்தி அனுப்பினார் ஸ்வாமிஜி.

பாலாஜிக்குக் குழப்பமாக இருந்தது. கலெக்ஷன் 13,500?

"என்ன பாலாஜி, கலெக்ஷன் குழப்பமா?" சிறிது நேர பழக்கத்திலேயே பல வருட சிநேகம் போல் நெருங்கிவிட்டதால் கூச்சமின்றி, "ஆமாம் ஸ்வாமி" என்றான் பாலாஜி.

"கலெக்ஷன் என் சீடர்கள் எனக்கு ஆசையாக கொடுக்கிற காணிக்கை. அத அப்படியே நான் பாங்கில கட்டிடுவேன். நான் மட்டும் வாங்கின கடனை அடைக்க வேண்டாமா?"

இன்னொரு தரம் அதிர்ந்து போனான்.

"ஸ்வாமி நீங்க கடன்பட்டிருக்கீங்களா?"

"ஏன் கூடாதா? நானும் உன்னப் போல தான். சிறு தொழில் ஆரம்பிச்சு பெருங்கடன் அடைஞ்சேன். ஒரு பத்தாண்டு சிறு தொழில்ல கிடைக்கும் அனுபவம் உனக்குத் தெரியாததா? அந்த அனுபவமே எனக்கு குரு அந்தஸ்துக்கு வழி காட்டியது."

"நம்ப முடியல ஸ்வாமி..."

"இப்ப போன பத்மநாபன் அப்ப என் தொழிலுக்குக் கடன் கொடுத்த ஆபீசர். காலப்போக்கில் அவரும் வளர்ந்தார், நானும் வளர்ந்தேன். கடனும் வளர்ந்தது. இப்ப அவர் மானேஜர். கூடவே என் சீடர். சந்தோஷமான சீடர். மனசாந்தியோட பழைய பாக்கியும் கிடைச்சா சும்மாவா?"

"தலை சுத்தறது ஸ்வாமி!"

"கவலைப்படாத பாலாஜி. கடனெல்லாம் தீர்ந்து புதுவாழ்க்கை ஆரம்பிக்க பல வழி இருக்கு..."

"எப்படி ஸ்வாமி?"

"திருச்சியில ஏகப்பட்ட பக்தர்கள், விதவிதமான பிரச்னைகளோட தவிக்கறாங்க. அங்க ஒரு ஆசிரமம் திறக்கலாம்னு உத்தேசம்.."

"அது, எப்படி?"

"கேளு, விரும்பினா நீ அங்க பிரதான குருவா போகலாம். கலெக்ஷன்லே கடன் அடைக்கலாம்!"

"ஸ்வாமி!"

"ஏன்? உன்னுடைய இத்தனை நாள் அனுபவம் பலர் பிரச்னையைத் தீர்க்க உதவுமே. விதுர நீதி படிச்சதில்ல நீ? தோற்றுப் போனவன் உதவாக்கரை இல்ல. அவன் சொல்ல வேண்டியது நிறைய இருக்கு."

"குழப்பமாயிருக்கு ஸ்வாமி..."

"வீணா குழம்பாதே, கடவுள் ஜன்னலை மூடினால் வாசலைத் திறப்பான். பேசாம நீ "ஸ்வாமி மானேஜ்மன்டானந்தா"!வா திருச்சிக்குக் கிளம்பு!"

## புதிய நீதி: பழைய அரசியல்!

"புதிய நீதிக் கட்சியை ஜாதிக் கட்சி என்கிறார்கள். ஜாதியின் பெயரால் மரம் வெட்டியபோது, பஸ்களை எரித்தபோது இவர்கள் எங்கே போனார்கள்? திராவிட கழகத்து ஆசாமிகள் 'கடவுள் இல்லை' என்று வெளியில் சொல்லுவார்கள். ஆனால் வீட்டில் மனைவிக்கு பயந்து கொண்டு சாமி கும்பிடுவார்கள்" என்றார் சென்னை-செங்கை திரைப்பட விநியோகஸ்தர் சங்கத் தலைவர் கே. ராஜன். அவர் பேசியபோது கூட்டம் கலகலப்பானது. மற்றபடி பேரணியில் யாரை எதிர்த்தும் ஒழிக கோஷம் இல்லை.



சைதாப்பேட்டையில் துவங்கிய பேரணியை, மியூஸிக் அகதெமி அருகில் இருந்து பார்வையிட்டார் ஏ.சி. சண்முகம். 'யாரும் மேடையில் ஏறிவிடக் கூடாது' என்று மேடையின் விளிம்பில் உட்கார்ந்து கட்டுப்பாடு செய்து கொண்டிருந்தார் என்.வி.என்.செல்வம். கூட்டம் அவரைப் பிடித்துக் கீழே தள்ளிவிட்டது. அவர் சாலையில் நின்று கொண்டு ஏ.சி. சண்முகத்தைப் பார்த்து 'என் நிலைமையைப் பார்த்தாயா தலைவா!' என்றார் பரிதாபமாக.

கடற்கரைக் கூட்ட மேடையில் கிருபானந்தவாரியார் படம் திறந்து வைக்கப்பட்டது!

— கௌசி

படம்: ராஜன்

# KALKI SHOPPING PAGE



## "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்
விளம்பரம்
செய்ய ரூ.1250/-
மட்டுமே. செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

---

அக்டோபர் 2000

இம்மாதம் படித்தீர்களா?

தீபாவளி மலர்

முருகு

## ஜோதிடக்கலை

ஜோதிட, எண் ஜோதிட, கைரேகை மாத இதழ்

சுக்கிர பகவான் மலர் | அதிக பக்கங்கள்

தீபாவளி 2000-2001 பலன்கள் | 2 புத்தகங்கள்

மாத ராசிபலன், ஜாதக ஆய்வுக்கட்டுரைகள், துணுக்குகள்

ஆசிரியர் : டாக்டர் முருகு இராசேந்திரன், டி.லிட்.

இம்மலர் மட்டும் ரூ.12
தபாலில் பெற ரூ.15

1 வருட சந்தா: உள்நாடு : ரூ.75, வெளிநாடு : ரூ.325

தமிழில் முதல் யோகாசன மாத இதழ்

## யோகக்கலை

யோகாசன, தியான, இயற்கை மருத்துவ மாத இதழ்

டென்ஷன் Tension சிறப்பிதழ்

டென்ஷன் நீங்க யோகாசன, சித்த, இயற்கை மருத்துவக்கட்டுரைகள், துணுக்குகள்...

ஆசிரியர்: யோகாசன பேராசிரியர் ஆசான் இரா. ஆண்டியப்பன்

அதிக பக்கங்களுடன் ரூ.6 தான்
தபாலில் பெற ரூ.8

1 வருட சந்தா: உள்நாடு : ரூ.72, வெளிநாடு : ரூ.300

2 இதழ்களையும் தபாலில் பெற ரூ. 18 (தபால் செலவு இலவசம்)

ஜோதிடரத்னா முருகு இராசேந்திரனின்

2001 ராசி பலன் — விலை ரூ.10, தபாலில் பெற ரூ.12

12 ராசி, 27 நட்சத்திரங்களுக்கு பலன்கள், பரிகாரங்கள்

சந்தா, ஏஜென்சிக்கு தொடர்பு கொள்க

SP சிவகாமி பப்ளிகேஷன்ஸ்
108, உஸ்மான் சாலை, சென்னை-17. போன்: 4340205

---

## 10% தள்ளுபடி! முந்துங்கள்!

சிறுவர், சிறுமிகள், பெண்களுக்கு
தேவையான அழகிய ரெடிமேட் மாளிகை!



| | | | | |
|---|---|---|---|---|
| சுரிதார் | மிடி | பிராக் | பாபாசூட் | நைட்டீஸ் |
| ஸ்கர்ட் | டாப்ஸ் | சரார | சோளி | லாச்சா |

வெஸ்டர்ன் டிசைன்ஸ்
ஆடைகளின் சங்கமம்!

புதுமை! என்றென்றும் புதுமையான
ரெடிமேடு ஆடைகளுக்கு!

## கதம்ப மாளிகை

ரெடிமேட்

36, பாண்டி பஜார், தி.நகர்,
சென்னை-17. ☎ 4338418



# விருந்து வருது வாழைப்பழ ஜூஸ்!

**பு**ருட்டி மாதிரியான சின்ன பாக்கெட்களில் விரைவில் வர இருக்கிறது வாழைப்பழ ஜூஸ்!

திருச்சியிலிருந்து பதினைந்து கிலோமீட்டரில் உள்ள போதாவூர் கிராமத்தில் சுமார் நூறு ஏக்கர் பரப்பளவில் அமைந்துள்ளது தேசிய வாழை ஆராய்ச்சி மையம். உலகிலேயே மொத்தமுள்ள எழுநூற்றி ஐம்பது வகையான வாழைகளில் இங்கு மட்டும் அறுநூற்றி நாற்பத்தியெட்டு வகை வாழைகள் மாதிரிக்காக வளர்க்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

வெவ்வேறு வகைகளில், வெவ்வேறு வடிவங்களில் வாழைப் பழங்களிலிருந்து மக்களுக்குப் பயன்படும் சத்துமிகுந்த உணவுப் பொருட்களைத் தயாரித்து அளிக்கும் நோக்கில் குழு ஒன்றும் ஆராய்ச்சியில் இறங்கியுள்ளது.

ஆய்வுக்கூடத்தில் ஒவ்வொன்றாகக் காண்பித்து நம்மிடம் விவரம் சொல்லிக் கொண்டே வருகிறார் ஆராய்ச்சியாளர் நாராயணன்.

''இனிப்புச் சத்து அதிகமாக இருக்கும் கற்பூர வல்லி, நேந்திரன், நெய்ப்பூவன் பழங்கள் வாழைப் பழ அத்தி தயாரிப்பிற்கு மிகவும் சிறந்தவை. வாழைப்பழங்களை கேமஸ் எனப்படும் பொட்டாசியம் மெட்டாபி சல்பேட்டில் (ஒரு சதவீத அளவு) மூன்று அல்லது ஐந்து நிமிடங்கள் ஊற வைக்க வேண்டும். பின்னர், மின்சார அடுப்பில் ஐம்பது டிகிரி வெப்பத்தில் நாற்பத்தியெட்டு மணி நேரம் அவற்றை வைத்திருக்க வேண்டும். (குடிசைத் தொழிலாக செய்ய நேர்ந்தால் சூரிய ஒளியில் இரண்டு நாள் வைக்க வேண்டும்.) மூன்று கிலோ வாழைப் பழங்கள் காய்ந்த பின்னர், ஒரு கிலோ வாழைப்பழ அத்தியாக ஆகிவிடும். இதன் நிறமும், சுவையும் மூன்று அல்லது நான்கு மாதங்கள் வரை நீடித்திருக்கும்!'' என்ற நாராயணன் சமீபத்தில், வாழைப்பழ ஜூஸ் என்கிற சத்து மிகுந்த பானம் ஒன்றைத் தயாரித்து அதன் செய்முறைகள், பயன்கள் போன்றவற்றை விளக்கி காப்புரிமைக்காக மத்திய அரசுக்கு அனுப்பி வைத்துள்ளாராம்.

இதன் தயாரிப்புச் செலவு, இதர பழ ஜூஸ்களோடு ஒப்பிடுகையில் சரி பாதிக்கும் குறைவு என்கிறார் இவர். நூற்றியிருபத்தி ஐந்து டிகிரி வெப்பத்தில் இதைத் தயாரிப்பதால் ஆறு மாதங்கள் வரை வாழைப்பழ ஜூஸ் கெடாமல் இருக்குமாம்.

''பள்ளிகளில் சத்துணவுக் குழந்தைகளுக்கு முட்டைகள் தரப்படுவது போல வாழைப்பழ அத்திகள் தந்து இந்தப் புதிய முயற்சிக்கு ஊக்கம் அளிக்கலாம். பாட்டில்களில் அடைக்கப்பட்டு, குறைந்த விலையில், எல்லோரும் பயன்பெறுமாறு வாழைப்பழ ஜூஸ் சாதாரண பெட்டிக் கடைகளுக்கும் வந்து சேர வேண்டும். இவ்வகை தயாரிப்புகளின் மீது புதிய தொழில் முதலீட்டாளர்கள், ஆர்வலர்கள் கவனம் செலுத்தி வாழை உற்பத்தியைக் காப்பார்கள் என நம்புகிறோம்!'' என்கிறார் தேசிய வாழை ஆராய்ச்சி மைய இயக்குநர் எஸ். சத்தியமூர்த்தி.

— **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

    

# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

## (FREE HOME FOR THE BLIND AND AGED)

**2-21A, SAPTAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI - 517503.**

**Ph: 08574-39992, 38623. E-mail:navajeevan@vsnl.com**

**Website: www.navajeevan.org**

### எங்கள் பிரார்த்தனை

ஹே பகவான், பிறவியிலேயே விழிகளை இழந்துவிட்ட எனக்கு நல்ல கல்வி அறிவையும், சங்கீதத்தையும் அளித்து ஒரு புதிய வாழ்க்கையைக் கொடு-காயத்ரீ 8 வயது நிரம்பிய ஒரு அழகான சிறுமியின் வேண்டுகோள்.

ஹே ஈச்வர், எல்லோரையும் இழந்து வாழ்க்கையின் கடைசி அத்தியாயத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் எனக்கு நல்ல உடல் ஆரோக்கியத்தை அளித்து உன் திருவடிகளை அடைய வழிகாட்டு-லக்ஷ்மிபாட்டி 72 வயது ஒரு மூதாட்டியின் மனமார்ந்த பிரார்த்தனை.

ஹே கருணாமயி ஈச்வரி, என் குடும்பத்தினராலும் சமூகத்தினராலும் புறக்கணிக்கப்பட்டு நம்பிக்கையுடன் போராடி வரும் எனக்கு ஒரு புதிய பாதையை காட்டு-விஜயலக்ஷ்மி 23 வயது ஒரு அனாதைப் பெண்ணின் நீண்ட பிரார்த்தனை.

ஹே ஏழுமலையானே, ஏழ்மை முதுமை காரணமாக பார்வை குறைந்து பரிதவிக்கும் எனக்கு மீண்டும் ஒளி கிடைக்க அருள் புரிவாய் - நாராயணன் 80 வயது நெருங்கிக் கொண்டிருக்கும் ஒரு ஏழை முதியவரின் ஈரமான வேண்டுகோள்.

இப்படியாக திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் புதிய வாழ்க்கை நவஜீவனம் பொருட்டு தொடர்ந்து பிரார்த்தனையில் குழந்தைகளும் முதியவர்களும் ஈடுபட்டு வருகிறார்கள்.

கடந்த 21 வருடங்களாக கருணை உள்ளம் கொண்ட தமிழ் வாசக அன்பர்களின் தொடர் உதவியுடன் நூற்றுக்கணக்கான பார்வையற்ற குழந்தைகள் திக்கற்ற பெண்கள் மற்றும் ஏழை முதியோர்கள் ஒரு புதிய வாழ்க்கையைப் பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

### எங்கள் வேண்டுகோள்

திருப்பதி புண்ய க்ஷேத்திரத்தில் செயல்பட்டு வரும் எமது சமூக நலத்தொண்டு என்கிற தொடர் வேள்வியில் கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்களையும் கலந்து கொள்ளும்படி வேண்டுகிறோம்.

### அன்னதானம்/நேத்திரதானம் தொண்டுகள்

1. ஒரு நாளில் ஒருவேளை 50 குழந்தைகளுக்கு அன்னதானம் வழங்க - நாராயண ஸேவை - ரூ. 500/-
2. Annadanam Endowment Scheme: பிரதிவருடம் ஒரு குறிப்பிட்ட நாள் / திதியில் தொடர்ந்து 15 வருடம் 50 ஏழை குழந்தைகள் / முதியோர்களுக்கு அன்னதானம் வழங்க - One time donation - ரூ. 5,000/-
3. நவஜீவன் இலவச கண் மருத்துவ மனையில் ஒருவருக்கு மீண்டும் பார்வை கிடைக்க IOL கண் ஆபரேஷன் செய்ய - நேத்திரதானம் - ரூ. 700/-
4. Netradan Endowment Scheme: பிரதி வருஷம் ஒரு குறிப்பிட்ட நாளில் தொடர்ந்து 10 வருடம் "காட்ராக்ட்" கண் அறுவை செய்ய - One time donation - ரூ. 7000/-
5. தீபாவளி போன்ற முக்கிய தினங்களில் விசேஷ அன்னதானம் வழங்க 100 inmatesக்கு - ரூ. 1000/-

---

மேற்படி தொண்டுகளுக்கு அனுப்பும் நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு. Contributions to "Navajeevan Blind Relief Centre, Tirupati", are eligible for tax relief u/s 35AC & 80G of Income Tax Act 1961. பிறந்த நாள், திருமணநாள் மற்றும் திதி போன்ற விசேஷங்களை குறிப்பிட்டால் அன்றைய தினம் நன்கொடை அனுப்பும் அன்பர்களின் சார்பாக ஸ்ரீ ஏழுமலையான் பத்மாவதி தாயாருக்கு பிரார்த்தனை பூஜை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் தங்களின் நன்கொடைகளை By cheque/DD/MO வாயிலாக 'Navajeevan Blind Relief Centre, Tirupati' என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்பும்படி வேண்டுகிறோம்.

"யாதேவி சர்வ பூதேஷு தயா ரூபேண ஸம்ஸ்திதா"
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

நாராயண ஸேவையில்

**கே.எஸ். ஆசார்யா**

ஸ்தாபகர்.

நவஜீவன் ஆஸ்ரமம், திருச்சானூர், திருப்பதி - 517503.

# சுத்தப்படுத்தப் புறப்பட்டிருக்கும் சுஷ்மா!



"அசிங்கமான படங்கள் இனி இந்திய டெலிவிஷனில் வராது! குடும்பமே சேர்ந்து பார்க்கக் கூடிய வகையில் தொலைக்காட்சி சீர்திருத்தப்படும்" - இது மத்திய செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சர் சுஷ்மாவின் சபதம்!

பேச்சுக்குப் பொருத்தமான தோற்றம் தான் - அமைச்சருடையது. சராசரி இந்தியக் குடும்பப் பெண் போல் நெற்றி நிறைய குங்குமப் பொட்டு, வகிட்டில் சிந்தூரம்.

மீடியா சந்திப்பை முடித்துக்கொண்டு புறப்பட இருந்தவரை நிறுத்தி கல்கிக்கு பேட்டி கேட்டோம்.

**"கேபிள் டீ.வி.க்காரர்கள் உங்கள் பேச்சை ஆட்சேபித்திருக்கிறார்களே? ஸ்டிரைக் அச்சுறுத்தல் ஏற்பட்டிருக்கிறதே?"**

"அதற்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன்..."

**"மேடம்! ஏற்கனவே நீங்கள் அமைச்சராயிருந்தபோது இணையங்களில் (வெப் சைட்) நீலப் படங்களைத் தடை செய்ய முயன்று முடியாமல் போய் விட்டதல்லவா? அதற்கான ஐ.டி சட்டம் கூட இன்னும் நிறைவேறாமலே இருக்கிறதே?"**

"அதற்காக தொடர்ந்து முயற்சி செய்யாதிருக்க முடியுமா?" நள்ளிரவு நீலப் படங்களை அனுமதிக்கவே முடியாது. இந்திய இளைஞர் சமுதாயத்தைப் பாது காக்க இந்தத் தடை வந்தாக வேண்டும்."

**"இதுவரை ஒரே ஒரு ரஷ்ய சானலைத் தான் தடை செய்ய முடிந்திருக்கிறது. பிற சானல்காரர்கள் ஏற்கெனவே 'பாக்கேஜ்' ஒப்பந்தங்களைக் கேபிள்காரர்களுடன் செய்து கொண்டிருக்கிறார்கள். ஒப்பந்தத்தை மீறி சில காட்சிகளை மட்டும் நீக்க முடியாது என்கிறார்கள். அரசு இதில் தலையிட முடியாத நிலை நிலவுகிறதே...?"**

"இதற்காகத்தான் இந்திய பண்பாட்டு விதிகளுக்கு உட்பட்டே நிகழ்ச்சிகளை ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும் என்கிறேன். அவ்வாறு பிடிவாதமாயிருந்தால் சம்பந்தப்பட்ட சானல்காரர்களும் இந்திய டெலிவிஷனுக்கென்று தனியாய் கண்ணியமான நிகழ்ச்சிகள் தயாரிப்பார்கள்."

**"பிரசார் பாரதி, அரசு மீடிய நிறுவனங்கள் போன்றவற்றின் சுதந்தரம் எந்த மட்டில் இருக்கும்...?"**

"இப்போதுதானே பதவியேற்றிருக்கிறேன். ஒவ்வொன்றாகத்தான் கவனிக்க வேண்டும்..."

**"நாக்பூரில் அப்படி கட்சிக்கு விரோதமாகப் பேசியது - அதுவும் வாஜ்பாய்க்கு எதிராக..."**

"பாருங்கள்! அது உட்கட்சி விமர்சனம். இப்போது அரசியல் பேசாதீர்கள். கவனிக்க நிறைய வேலைகள் இருக்கின்றன..."

**"நீங்கள் கவனம் கவர்வதற்காகத்தான் இப்படியெல்லாம் பேசியதாகக் குற்றச்சாட்டு இருக்கிறது..."**

"ஹா! கருத்தைப் பகிரங்கமாக வெளிப்படுத்துவது உட்கட்சி ஜனநாயகம் - அவ்வளவு தான். வேறொரு நாள் நிறையப் பேசலாம்."

**- டெல்லியிலிருந்து வெங்கட்**

*சுந்தரவில்லி ஏவ, சூழ்கடல் இலங்கை மேவி*
*அந்தமில் வீடுநல்கும் ஆயிழை தன்னைக் கண்டு*
*வந்தவெல் வரக்கர் சிந்தி வனையெரி மடுத்துமீண்ட*
*நந்தலில்லாத தூதன் நம்மையும் அளித்துக்காப்பான்*

மஹேந்திர மலையிலிருந்து ஒருமுறை மானசிகமாக இலங்கைக்குப் போய் வந்தான் ஹனுமான் என்றேன். அந்தக் கட்டத்தில், வால்மீகி ராமாயணத்தின் கிஷ்கிந்தா காண்டம் முடிந்து சுந்தர காண்டம் ஆரம்பமாகிறது. பெரும்பாலும் இலங்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளால் ஆனது சுந்தர காண்டம்.

இப்படியிருக்க, இந்தக் காண்டத்துக்கு இலங்கா காண்டம் என்றோ இலங்கை காண்டம் என்றோ பெயர் வைக்காமல் சுந்தர காண்டம் என்று ஏன் பெயர் வைத்தாராம் வால்மீகி...?

சுந்தரம் என்றாலே அழகு என்று பொருள். இந்த காண்டத்தில் இடம்பெறும் சுலோகங்களின் அழகு, சீதை – ராமன் ஆகியோரது அழகு, இலங்கை நகரின் அழகு என்று பெயர் சூட்டியதற்கு 'அழகான' பல காரணங்கள் சொல்லலாம். ஆனால் இதையெல்லாம் விட முக்கியமான காரணம் என்னவென்றால், அப்படியொரு காரணம் இருக்கிறது.



# ஸ்ரீராம பக்த ஹனுமான்

'சுந்தரம்' என்றாலே வானரம் அல்லது

குரங்கு என்றுதான் அர்த்தம்.

என்ன விநோதம் பாருங்கள்! குரங்கே! குரங்கு மூஞ்சி என்றெல்லாம் நிந்தனையாகவும் தூஷணையாகவும் சொல்லுவதை நாம் வழக்கமாக்கி வைத்துள்ளோம். ஆனால், உண்மையிலே சுந்தரம் – அதாவது அழகு – என்றாலே வானரம் என்பதுதான் பொருள்.

இந்தக் காண்டத்திலே முழுக்க முழுக்க ஆஞ்சநேயரின் பெருமையும் பராக்கிரமும் காணப்படுகிறது என்பதால் இது சுந்தர காண்டமாயிற்று. அவனே இந்தக் காண்டத்தின் நாயகன்! ஒரு ஆசார்யனுடைய இலட்சணங்களுக்கு உதார



# 11

## கல்யாணபுரம் ஆராவமுதன்

ணமாகவும் ஒரு தூதனுடைய கடமைகளையும் பொறுப்புகளையும் உணர்த்தும் விதமாகவும் வாழ்ந்து காட்டுகிறான் ஆஞ்சநேயன்.

ஆசார்யரானவர் என்ன பண்ணுகிறார்...? நம் உடலிலே சிறையிருக்கிற ஆத்மாவுக்கு ரக்ஷகன் பகவான்தான் என்ற பேருண்மையை நமக்கு உணர்த்துகிறார். அந்த ஆன்மாவை ஏற்றுக் கொள்ளச் சொல்லி பகவானைப் பிரார்த்திக்கிறார்.

அந்தக் காரியத்தைத்தான் இங்கே ஹனுமான் செய்கிறான். சிறை வைக்கப்பட்டுள்ள சீதையாகிற ஆத்மாவிடம் ஸ்ரீராமனின் குணஇயல்புகளைப் பேசி, ஸ்ரீராமனிடம் சீதையின் நிலைமையை எடுத்துச் சொல்லி, சீதாபிராட்டி ஸ்ரீராமனை அடைவதற்கு வழிவகுக்கிறான்.

ஒரு தூதனாக ஹனுமான் எப்படிச் செயல்படுகிறான்...?

வள்ளுவர் வாக்கைப் பாருங்கள். ஒரு நல்ல தூதனுக்கு மூன்று முக்கியமான லட்சணங்களைச் சொல்கிறார் அவர் :

அன்பறிவாராய்ந்த சொல்வன்மை
தூதுரைப் பார்க்கு
இன்றி யமையாத மூன்று

தூதனின் முதல் இலட்சணமாக அவர் குறிப்பிடுவதே அன்புதான்! இரண்டாவதாக அறிவு; மூன்றாவது – ஆராய்ந்த சொல்வன்மை – அதாவது புத்திசாதுர்யத்துடன் இணைந்த வாக்கு சாதுர்யம்.

ஹனுமானுக்கு ராமனிடத்தில் அன்பின் மிக உயர்ந்த நிலையான பக்தியே அல்லவா இருந்தது. அதுவும் நிபந்தனைகளற்ற அசஞ்சல பக்தி. அளவிட முடியாத பக்தி.

அஞ்சனை மைந்தனின் அறிவைப் பற்றியோ சொல்லத் தேவையில்லை. பல இடங்களில் ராமாயணத்தை நடத்திச்

## நங்கைநல்லூரில்...

சென்னை, நங்கைநல்லூரில் மிகப் பெரிய உருவுடன் ஹனுமார் காட்சி அளிக்கிறார் அல்லவா? திரளாக பக்தர்கள் காண வருகிற இந்த மூர்த்திக்கு ஆதிவியாதிஹர ஸ்ரீ பக்தாஞ்சநேயர் என்று பெயர். ஆதிவியாதி என்பது என்ன...? கர்மவினைதான்! அதைப் போக்க வல்லது ராம பக்தி என்பதை உணர்த்தியவாறு அங்கே நிற்கிறான் இந்த ஆஞ்சநேயன்.

மயிலை நாட்டு சுப்பராயன் தெருவில் ஒரு ஹனுமான் உண்டு. அவருக்கு விசேஷ உத்ஸவங்கள், இசை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்து வந்தவர் ரமணி என்பவர். இவரது கனவில் ஸ்ரீ ஆஞ்சநேயர் தோன்றி, நங்கைநல்லூர் ஆலயத்தை ஸ்தாபிக்கும்படி சொன்னாராம்.

செல்வதே அவனுடைய அறிவுத் திறன்தான் – சமயோசிதம்தான்.

உதாரணமாக ஒரு நிகழ்ச்சியைப் பாருங்கள்...

அசோகவனத்திலே சீதையைக் கண்டு பேசி, விடைபெற்று நேரே கிளம்பி அவன் ராமனிடத்தில் வந்திருக்கலாம் அல்லவா...? ஆனால் ஹனுமான் அவ்வாறு செய்யவில்லை. ராமன் அளித்த பொறுப்பை முடித்தபின் இலங்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள முற்பட்டான். ராவணனுடைய பராக்கிரமம் எத்தகையது என்று எடை போட்டு அறிந்து கொள்ள முயற்சி மேற்கொண்டான்.

இந்திரஜித்தினுடைய பிரும்மாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டது போல் நடித்தான். அதன் மூலம் ராவணனுடைய சபைக்குள் நுழைந்து பார்ப்பது சாத்தியமாயிற்று.

'புத்திர் பலம் யசோதைர்யம்' என்று தொடங்குகிற வடமொழி சுலோகம் ஒன்று உண்டு. இந்த சுலோகத்தின் அர்த்தம் என்னவென்றால் ஹனுமானை மனத்தால் ஸ்மரித்தாலே புத்திக் கூர்மை, பலம், புகழ், தைரியம் பயமின்மை, ஆரோக்கியம், சொல்வன்மை ஆகியவை உண்டாகும் – நினைத்த மாத்திரத்திலேயே இப்படி அனுக்கிரஹத்தை மழையாகப் பொழியக்கூடியவனிடத்திலே அதே இலட்சணங்கள் பொருந்தியிருக்கும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

தூதனின் மூன்றாவது இலட்சணமான சொல்வன்மைக்கு வருவோம்... ராவணனிடத்தில் ஹனுமான் பேசுகிறான் அல்லவா, அந்தக் கட்டத்திலேதான் இந்த இலட்சணம் முழுமையாய் வெளிப்படுகிறது. ஓர் உத்தம தூதனைப் போல் பேசுகிறான் ஹனுமான்.

என்ன பேசுகிறான் சொல்லின் செல்வன்...? அதைத் தெரிந்து கொள்வதற்கு முன் அவன் எப்படி இலங்கைக்குப் போய்ச் சேர்ந்தான் என்பதைப் பார்த்து விடுவோம். கண்கொள்ளாக் காட்சி, ஹனுமானின் அந்தப் பயணம்!

மஹேந்திர மலை மீது ஏறி நின்று விச்வரூபமெடுத்து புறப்படுவதற்கு முன்னால் ஹனுமான் முக்கியமாக ஒரு காரியம் செய்தான். 'ஆசார்யனான சூரியனை முதலில் வணங்கினான்' என்கிறார் வால்மீகி.

எந்தவொரு காரியத்தை வெற்றிகரமாக முடிப்பதற்கும் குருவருள் அவசியம் என்பதை இதன் மூலம் தெள்ளத் தெளிவாக உணர்த்தி விட்டார் வால்மீகி.

மஹேந்திர மலையிலிருந்து ஹனுமான் எப்படிப் புறப்பட்டான்...?

தன் கைகளால் அந்த மலையை ஓர் உலுக்கு உலுக்கினான். அதிலே பூத்திருந்த மரங்களிலிருந்து மலர்கள் பொல பொலவென்று உதிர்ந்து போயின. மலையிலே வசித்து வந்த வித்யாதரர்கள் பயந்து நடுங்கிப் போனார்கள்.

வாலை முறுக்கி ஒரு நீட்டு நீட்டினான் ஹனுமான். தோள்களை இறுக்கி கால்களைக் குறுக்கிக் கொண்டான். கைகளை நீட்டி 'ஜிவ்'வென்று புறப்பட்டு விட்டான். – இது வால்மீகியின் வர்ணனை.

கம்பர் இதே காட்சியை எத்தனை அழகாக வர்ணிக்கிறார் பாருங்கள் :

வால்விசைத்தெடுத்து வன்தாள் மடக்கி
மார்பொடுக்கி, மானத்
தோள்விசைத்துணைகள் பொங்கக்
கழுத்தினைச் சுருக்கித்தூண்டும்
கால்விசைத் தடக்கை நீட்டிக் கட்புலம்
கதுவா வண்ணம்
மேல்விசைத்து எழுந்தான் உச்சி
விரிஞ்சன் நாடு உரிஞ்ச வீரன்

ஒரு ராக்கெட் புறப்படுகிற மாதிரியான வர்ணனை போலிருக்கிறதல்லவா இது!

அருணாசலக் கவிராயர் தமது தனித் தமிழில் இந்தக் காட்சியைப் பாடுவதைப்

பாருங்கள் :

பாய்ந்தானே அனுமன் –
மயேந்திரம் ஏறிப்
பாய்ந்தானே அனுமன்
பாய்ந்தொரு மூவுலகு ஏந்திய
ராவணன்
மாய்ந்திட மேவு குலாந்தகன்
எனவே
(பாய்ந்தானே...)

மூவுலகும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தவன் ராவணன். ஆனால் ஹனுமானின் ஒரே ஒரு பாய்ச்சல், அந்த ராவணனின் அழிவை உறுதிசெய்துவிட்டது என்கிறார்.

புறப்படும் முன் ஹனுமான் மற்ற வானரங்களிடம் பேசுகிறான். பேசிய பிறகுதான் பாய்ச்சல், புறப்பாடு எல்லாம்.

என்ன சொல்கிறான்; பாருங்கள் :

"ராமன் தொடுத்த பாணமானது எப்படி வாயுவேகமாகப் போகுமோ அப்படியே நான் ராவணன் இருக்கிற இலங்கைக்குப் போவேன். சீதையைப் பார்ப்பேன், சீதையைப் பார்க்க முடியாது போனால் ராவணனையே கட்டி இழுத்துக் கொண்டு வந்து விடுவேன். காரியத்தை முடிக்காமல் திரும்ப மாட்டேன்!"

என்ன நம்பிக்கை, என்ன தெளிவு! ஒரு செயலைத் தொடங்கும்போது எப்படிப்பட்ட மனதிடம் வேண்டும் என்பதை எத்தனை அழகாகக் காட்டியிருக்கிறார்!

இந்தப் பிரசங்கம் முடித்து வான வீதியில் புறப்படுகிறார் ஹனுமான். சூரியன் அவரைத் தகிக்கவில்லை. வாயு அனுகூலமாக வீசுகிறான். தேவர்கள் வாழ்த்துகிறார்கள். பத்து யோஜனை அகலமும் முப்பது யோஜனை நீளமுமாக ஹனுமானின் நிழல் சமுத்திர ஜலத்தில் அழகாகத் தெரிந்தது. உடலும் மனமும் சக்தியால் நிரம்பித் ததும்ப இலங்கை நோக்கிச் சென்றான் ஹனுமான்.

(வளரும்)

## அருள்வாக்கு

சக்தி ஜாஸ்தியாக ஆக ஆனந்தம் ஜாஸ்தி என்பதால் அந்த சக்தியினாலேயே ஆனந்தம் உண்டாகிறது என்று அர்த்தமில்லை. சக்திக்கும் ஆனந்தத்துக்கும் நேர் ஸம்பந்தமில்லை. ஒருத்தருக்குத் தம்மைவிடக் குறைந்த சக்தியுள்ளவர் மீது தம்முடைய சக்தியினால் ஆதிக்கம் செலுத்த முடிகிறது. அவரைக் கட்டுப்படுத்த முடிகிறது என்பதிலே ஏற்படும் ஆனந்தம் தப்பான அஹங்காரத்தில் ஏற்படுவது; அதை முறையான ஆனந்தம் என்று சொல்ல முடியாது. பின்னே, சக்தி ஜாஸ்தியானால் ஆனந்தம் எப்படி ஜாஸ்தி ஆகிறது என்றால், அப்போது நம்மை விடவும் அதிக சக்தியோடு இருந்து கொண்டு நம்மைக் கட்டுப்படுத்துபவர்கள் குறைச்சலாகிக் கொண்டு வருகிறார்கள். ஆகையால், நாம் இன்னொருத்தரை ஆள முடிகிறது என்பதைவிட, நமக்குக் கட்டுப்பாடு குறைகிறது. நம்முடைய ஸ்வதந்திரத்தின் எல்லை ஜாஸ்தியாகிறது என்பதாலேயே ஆனந்தம் ஏற்படுகிறது.



பெரிய கம்பெனிகளில் மானேஜராகக் கொடி கட்டிப் பறந்த சில பேர் ராஜிநாமா பண்ணிவிட்டு, அதோடு 'கம்பேர்' பண்ணிப் பார்க்கும்போது ரொம்பச் சின்னதாக ஸொந்தத்தில் கம்பெனி ஆரம்பிக்கிறார்கள். "ஏன் இப்படி வருமானம், வசதி எல்லாவற்றையும் குறைத்துக் கொண்டு ஸொந்த பிஸினெஸ் ஆரம்பித்திருக்கிறீர்கள்?" என்று கேட்டால், "அதுவா? அங்கே என்னதான் பெரிய பொறுப்புகள், பெரிய வருமானம் முதலானது இருந்தாலும் மேலே உள்ள டைரக்டர்களுக்கு ரொம்பவும் obey பண்ணிக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. அவர்கள் 'கன்ட்ரோல்' தாங்காமல்தான், பாக்கி ஸமாசாரங்களில் நஷ்டமேற்பட்டாலும் ஃப்ரீயாக இருக்கணுமென்று ஸொந்த பிஸினெஸ் ஆரம் பித்தது" என்கிறார்கள்.

ஆகையினால் ஸ்வாதந்த்ரியத்தால்தான் ஸந்தோஷமே தவிர சக்தியினால் இல்லை.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

“எஸ்.4க்கு மேலே காலி. சீக்கிரம் ஓடி வா இடம் பிடிக்கலாம்'' என்றவாறே இரண்டு இளைஞர்கள் பிளாட்பாரத்தில் தடதட என ஓடினார்கள். சென்ட்ரலின் எட்டாவது பிளாட்பாரத்தில் கோவை எக்ஸ்பிரஸ் நுழைந்துகொண்டிருந்தது.

நிற்க காத்திருந்தேன். என்னருகே கமகமவென வாசனையோடு மெதுவடைகளும் இட்லிப் பொட்டலங்களும் காத்திருந்தன. எஸ்.3 தாண்டி பேன்ட்ரி கார், சரியாக எனக்கு எதிரே வந்து நின்றது. உள்ளேயிருந்து பழுப்புச் சீருடையில் அந்தப் பையன் இறங்கி வந்தான். வடைகளையும் இட்லி பொட்டலங்களையும் கணக்கெடுத்துக் கொண்டே "டைம் இன்னா சார்?" என்றான். அதிகாலை வெளிச்சமும் ஆரஞ்சு நிற விளக்குகளும் ஐந்துமணி இருபது நிமிஷம் என்றன.

“பேனா கொஞ்சம் குடுங்க சார்” என்றவன் வாங்கிக் கொண்டு பாக்கெட்டிலிருந்தப் பேப்பரை எடுத்துக் குறித்தான், சிறிது நேரம் பேனாவை ஆராய்ந்தான், “பேனா நல்லா எழுதுது சார்'' என்றவன் முறுவலித்தான் "எஸ்.4 காலிதான் சார், உட்காருங்க, பேனாவை வந்து தறேன்" என்றான், உள்ளே உட்கார்ந்தவுடன் சீட்டில் தலை சாய்த்துத் தூங்கி விட்டேன்.

உசுப்பினான் அவன். வெளியே பார்த்தேன், அரக்கோணம் தாண்டி ஓடிக்கொண்டிருந்தது ''டீ சாப்பிடறீங்களா?" என்றான் கையில் டீ கேனுடன். வாங்கிக் கொண்டு நூறு ரூபாயை நீட்டினேன். “சில்லற இல்லிங்க சார், பரவாயில்ல'' என்றான். ''உங்க பேனா நல்லா எழுதுது சார். எவ்வளவு சார் அது விலை?'' என்றான். "எழுபது ரூபாய்'' என்றேன். அவன் முகம் வாடியது போல் தெரிந்தது.

ஜோலார்பேட்டை வந்தது, அவனும் வந்தான். இப்போது தக்காளி சூப்போடு. ''எங்க சார் அந்தப் பேனாவை வாங்குனீங்க?" என்று அதன் ஜாதகத்தை விசாரித்தான் மீண்டும். அந்தப் பேனா நன்றாக எழுதுகிறது என்றான்.

“தக்காளி சூப் சாப்பிடுங்க சார்.”

“மொரப்பூர்ல இறங்கணும் தம்பி”

“பேனா பேன்ட்ரியில இருக்கு சார், இதோ எடுத்தாறேன்.”

— எழுதத் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் பேனாக்களின் மீது ஒரு

மயக்கம், ஏதாவது ஒரு காலகட்டத்திலாவது இருக்கும் என்பது என் எண்ணம். பேனாவின் அழகின் மீதோ, அது வைத்திருப்பதால் இருக்கும் அந்தஸ்தின் மீதோ, அதன் மையின் நிறத்தின் மீதோ அல்லது அதில் எழுதுவதால் உள்ள வசதிகள் அல்லது சந்தோஷங்கள் மீதோ ஒரு மயக்கம் இருக்கும். நான் கடைசி வரை அவனிடமிருந்து அந்தப் பேனாவை வாங்கிக் கொள்வதில்லை என தீர்மானித்தேன்.

# ஒட்டைப் பேனா

ஐந்தாவது வகுப்பு வரை சிலேட்டில் எழுதிவிட்டு பேனாக்களைப் பயன்படுத்தத் துவங்கும்போது எனக்கும் எல்லோரையும் போல பேனாக்கள் மீது ஆசை வந்தது.

ஆறாவது வகுப்புக்கு நான் மாணவர் தலைவன், பங்கி எனப்படும் எ. அருணாச்சலம் துணைத் தலைவன். அவன் வாடாமல்லி கலரில் ஒரு மை வைத்திருந்தான். எங்கிருந்து அந்த மையை வாங்குகிறான் என்று தெரியாது. ஆசிரியர்கள் அவனிடம் அந்த மையிட்ட பேனாவை வாங்கி பயன்படுத்திக் கொள்ள அடிக்கடி தேடுவார்கள். அதனால் அவன் மீது எனக்குப் பொறாமை இருந்தது எனலாம். அவன் உதடுகள், உள்ளங்கை, மைபட்ட விரல்கள் எல்லாம் ஒரே நிறமாயிருக்கும். ஆனாலும் அவன் பேனாக்கள் கணபதியின் பேனா போல் பட்டையாக அழகாக எழுதவில்லை.

"களி உருண்டை" எனப்படும் கணபதி எங்கோ மலை பக்கமிருந்து பள்ளிக்கு வந்தான், அவன் ஒரு பேனா வைத்திருந்தான். அந்தப் பேனாவின் "ஸ்க்ரு" பகுதிக்குக் கீழே உடைந்திருக்கும். அதை நெருப்பில் காட்டி அதை அடைத்திருந்ததால் அது குட்டையாக இருக்கும். மறையில் நூல் சுற்றி இறுக்கி வைத்திருப்பான். அவன் கையெழுத்து குண்டுகுண்டாக அழகாக இருக்கும். தமிழில் எப்பொழுதும் அவன் தான் முதல் மதிப்பெண்.

அவனின் அந்த அவலட்சணமான பேனாவில் ஒருமுறை எழுத நேர்ந்தபோதுதான் அவன் கையெழுத்தின் ரகசியம் புரிந்தது. அது பட்டையாக, அழகாக எழுதியது. அவனிடமிருந்த அந்த பேனாவை யாவது அல்லது அந்தப் பட்டையாக எழுதும் முள்ளையாவது கைப்பற்ற முடிவு செய்தேன்.

மறுநாள் மதிய இடைவேளையில் என்னிடம் இருந்த சுமாரான ஆனால் அவன் பேனாவை விட நன்றாக இருந்ததை எடுத்துக்கொண்டு அவன் இருந்த புங்க மரத்துக்கருகே சென்றேன். ஊர் நண்பர்களுடன் சாப்பிட்டுக் கொண்டிருந்தவன் என்னை கண்டதும் அவன் "போணி"யை மூடினான். (களி உருண்டை)

''கணபதி, இந்தா பேனா...''

**ராஜ் செந்தில் ராகவன்**

''அது என்னுதில்லையே.''

''என்னுதுதான், நீ வெச் சுக்கோ. இது நல்ல பேனா. உன் பேனாவைக் குடு. அதுதான் ஓட்டை பேனாவாச்சே.''

"உனக்குப் பேனா..." யோசித்தான். வாங்கி எழுதிப் பார்த்தான், திருப்பிக் கொடுத்துவிட்டான். "என் பேனாவே நல்லா எழுதும்."

அதற்கப்புறம் பலமுறை அவனிடம் கேட்டேன். என் நல்ல பேனாக்களை அவனுக்குத் தருவதாகக் கூட சொன்னேன். அவன் கடைசி வரை தர மறுத்து விட்டான்.

அவன் மேல் கோபம் கோபமாக வந்தது. "கணபதி மிக மிக அடங்கவில்லை" என்று வகுப்பில் பேசி கலாட்டா செய்தவர்களின் பெயரோடு அவனையும் சேர்த்து எழுதி ஆசிரியரிடம் அடி வாங்க வைத்தேன். "ஓட்டை பேனா" என்று கூவி கலாட்டா செய்தேன். அது மருவி "களி உருண்டை" "ஓட்டையன்" ஆகியது.

பின் சில நாள் காணாமல் போயிருந்தவன் அன்று வந்தான் புத்தம் புது "ஹீரோ"

பேனாவுடன், அட்டெண்டன்ஸ் எடுக்க தமிழ் அய்யா பேனா கேட்டபொழுது ஓடி வந்து கொடுத்துவிட்டு, மலர்ந்த முகத்துடன் என்னைப் பார்த்தவாறே உட்கார்ந்திருந்தான்.

வகுப்பு ஆரம்பித்த கொஞ்ச நேரத்தில் கணபதியின் அப்பா அவனை வந்து அழைத்துச் சென்றுவிட்டார். ஹீரோ பேனா, வகுப்புத் தலைவன் என்ற முறையில் என்னிடம் வந்தது. அவனிடம் ஒப்படைத்து விடச் சொல்லி.

ஆனால் மறுபடி கணபதி வெகு நாட்கள் பள்ளிக்கு வரவேயில்லை. தமிழாசிரியர் என்னிடம் தந்த கணபதியின் பேனாவை அடிக்கடி நினைவு படுத்திக் கொண்டிருந்த பங்கியும் அதை மறந்தே போனான்.

அந்தப் பேனாவை நான் உபயோகித்துக் கொண்டால் என்ன? என்று தோன்றியது. நான் வைத்திருக்கும் பேனாக்கள் எல்லாவற்றையும் பட்டை தீட்டி வைத்திருப்பேன். பட்டை தீட்டுவது ஒரு கலை. நான் டியூசனுக்குப் போகும் முல்லை டீச்சர் வீட்டு மொசைக் தரை வழுவழுப்பாக இருக்கும். பேனாவை எழுதும் கோணத்தில் பிடித்துக் கொண்டு தரையில் கரகரவென தேய்த்தால், முள் பட்டையாக எழுதும். அப்படி முயற்சி செய்கையில் கணபதியின் பேனா முள் வளைந்து உடைந்து போனது.

எனக்குக் கணபதிக்கு என்ன பதில் சொல்வது என்று பயம் பிடித்துக் கொண்டது. ஆனால் இரண்டு மாதங்களுக்கு மேலாக கணபதி வரவேயில்லை.

ஆனால் எதிர்பாராமல் ஒருநாள் கணபதியைச் சந்தித்தேன்.

அன்று ஞாயிற்றுக்கிழமை அப்பா கடையிலிருந்து மதியம் இரண்டு மணிக்கு சைக்கிளை எடுத்துக் கொண்டு வருவார். சாப்பிட்டு, சிறிது நேரம் தூங்கி விட்டு ஐந்து மணிக்குக் கடைக்குக் கிளம்பி விடுவார். அதற்குள் சைக்கிளில் சஞ்சீவராயன் மலை மடுவுக்குப் போய் நீராடிவிட்டு வந்து விட வேண்டும். அன்று நண்பர்களுடன் என் மூணாம் வகுப்பு தங்கையும் வந்தாள்.

மடுவில் கணபதி இருந்தான். அவனுக்கு என் மேல் கோபமே இல்லை. தண்ணீரில் "சொரை" அடிக்க கற்றுக் கொடுத்தான். தங்கைக்குக் கரையில் உள்ள மாங்காய் மரத்திலிருந்து காய் பறித்துத் தந்தான். மரமேறியதால் கிறி புண்ணான தோள்பட்டைக்கு மண்ணைக் கையில் ஜலித்து அப்பிக் கொண்டான். இவ்வளவு சந்தோஷமான, நட்பு மிக்கக் கணபதியை நான் எதிர்பார்க்கவில்லை.

"உன் ஹீரோ பேனாவைத் தமிழய்யா கிட்ட குடுத்துட்டு நீ போய்ட்டே... என் கிட்டதான் இருக்கு. நாளைக்கு வருவயில்லே எடுத்துத் தாரேன்."

அவன் முகம் இறுகியது. முகத்தைத் திருப்பிக்கொண்டான். "நான் இனிமே ஸ்கூலுக்கு வரமாட்டேன். பேனாவை நீயே வெச்சுக்க."

ஆனால் மறுநாள் பள்ளிக்கு வந்தான், அவன் அப்பாவுடன். "வீட்டுல இருந்த ரூபாவைத் திருடிக்கிட்டு போய்ட்டான் சார், திருடுன பணத்தை என்ன பண்ணினன்னு கேட்டாலும் சொல்ல மாட்டேங்கிறான். நாலு அடி வெச்சேன். ஊட்ட உட்டு ஓடி போய்ட்டான் சார். தாசம்பட்டியில் அவன் அக்கா வீட்டுல இருந்து நேத்துதான் கூட்டியாந்தேன். இவனை சேர்த்துக்குங்க சார், இனிமே ஒழுங்கா ஸ்கூலுக்கு வர மாதிரி பார்த்துகிறேன் சார்" என்று ஆசிரியரிடம் கெஞ்சி விட்டு அவனை விட்டு விட்டுப் போனார்.

மதிய உணவு இடைவேளையில் புங்க மரத்தடியில் தனியாக அமர்ந்திருந்த கணபதியிடம் போனேன். "இந்தாடா உன் ஹீரோ பேனா, நீ திருடுன காசுலதானே இந்தப் பேனாவை வாங்கின?"

பதில் சொல்லாமல் தூரத்தில் வெறித்துப் பார்த்தான். கண்களில் நீர், "பேனாவை நீயே வெச்சுக்கடா. அதுக்குப் பதிலா ரெண்டு




''அசிஸ்டெண்ட் டைரக்டரா? கிராமத்துக் கதை ஒண்ணு கிடைச்சிருக்கு. உடனே வாங்க. பைவ் ஸ்டார் ஹோட்டல்ல ஏஸி ரூமில் உட்கார்ந்து டிஸ்கஸ் பண்ணலாம்!''

— எஸ். மோகன்

ரூபா இருந்தா குடு" என்றான்.

உடைந்த முள்ளுக்கு என்ன பதில் சொல்வது என்றிருந்த எனக்கு 'இது ஒரு நல்ல வாய்ப் பாகப் பட்டது. ஜாமிண்ட்ரி பாக்ஸில் ''கிளாஸ் பண்ட்'' இரண்டு ரூபாய்களும் சில் லறையும் இருந்தது. அவனிடம் கொடுத்து விட்டுத் திரும்பி நடந் தேன். கணபதி கூப்பிட்டான். அவன் சிமெண்ட் பையில் தைத் திருந்த பையிலிருந்து அந்த அவலட்சணமான, ஆனால் அழகாய், பட்டையாய் எழுதும் பேனாவை எடுத்தான். ''இந் தப் பேனாவையும் நீயே வெச் சுக்க'' கண்ணீருடன் திரும்பிப் போனான்.

அப்புறம் அவன் வரவே யில்லை, அடுத்த நாள் அவன் எலி மருந்து சாப்பிட்டு இறந்து விட்ட தாகச் செய்தி மட்டும் வந்தது.

**மொ**ரப்பூரில் வண்டி நின்றது. வானம் இருண்டிருந்தது. சிறு தூறல் இருந்தது. பிளாட் பாரத்தில் இறங்கி நடக்க ஆரம் பித்தேன். தருமபுரி செல்லும் பேருந்து, கேட்டில் மாட்டியிருந் தது. கேட்டைத் திறப்பதற்குள் நான் அதைப் பிடிக்க வேண்டும். நடை வேகத்தைக் கூட்டினேன்.

"சார்..." என கூவிக் கொண்டே பையன் ஓடி வந்தான். பேனாவை நீட்டினான். ''நீயே வெச்சுக் கப்பா'' என்றேன். அவன் முகம் மலர்ந்தது. கையில் இருந்த "ட்ரே"வினால் மழையில் நான் நனையாமல் இருக்கத் தூக்கிப் பிடித்தான். "எழுபது ரூபா சார் இது."

"பரவாயில்ல வெச்சுக்க" என் றேன்.

வண்டி நகரத் தொடங்கியது. "ரொம்ப நன்றி சார்" என்றவாறே ஓடிப்போய் படியில் தொற்றிக் கொண்டான்.

"என்ன தம்பி உன் பேரு?"

"கணபதி சார்" ஒரு கையில் தொங்கியவாறே ''ட்ரே''வோடு ஒரு சல்யூட் வைத்தான்.

## மோதிக் கொண்டது உண்மை!

**தி**ருவனந்தபுரம் தாகூர் தியேட்டரில் அண்மை யில் நடந்த திரைப்பட விழாவில் மம்மூட்டி நடித் துள்ள 'பாபாசாகேப் அம் பேத்கர்' படம் திரையிடப்பட் டது. இப்படத்தில் அம்பேத் கராக நடித்தமைக்காக மம் மூட்டிக்கு பாரத் அவார்டு வழங்கியதை முழுமனத்துடன் ஏற்றுக்கொண்டார்கள் ரசி கர்கள்.



ஆனால் இந்தப் படம் ஒரு பிரச்னையையும் கிளப்பி உள்ளது. காரணம் இப்படத் தில் அம்பேத்கர், காந்தியை அவமானப்படுத்துவது போலவும் கிண்டல் செய்வது போலவும் பல காட்சிகள் இடம் பெற்றிருப்பதுதான்.

இது பற்றி அம்பேத்கர் பட இயக்குநர் ஜபார் பட்டே லிடம் கேட்டபோது, ''நான் சரித்திரத்தைத்தான் படம் பிடித்துள்ளேன். காந்தியும் அம்பேத்கரும் பல சந்தர்ப் பங்களில் கருத்து மாறுபட்டு மோதிக் கொண்டது உண்மை. ''ஆனால், அதே சமயம் ஒருவரை ஒருவர் மதித்து நடந்து கொண்டார்கள். அதைத்தான் நான் படம் பிடித்துள்ளேன்'' என்றார்.

— எஸ்.எஸ்.மணி

## நெட்டில் சிக்கியவை...

- இங்கிலாந்து மகாராணியின் காரில் நெம்பர் பிளேட் இருக்காது.
- தலையிலிருந்து, கால்வரை நீண்ட முடி கொண்ட 'முழுமை முடி பார்பி'தான் பார்பி பொம்மை களில் மிகவும் பாபுலரான மாடல்.



- ஷூவில் உள்ள லேஸ்களின் நுனியில் பிளாஸ்டிக்கினால் ஆன 'பிடிப்பு' ஒன்று உள்ளதே, அதற்கு ஆங்கிலத்தில் aglet என்று பெயர்.
- மார்க் ட்வைனின் ''டாம் சாயரின் சாகசங்கள்''தான் டைப்ரைட்டரைப் பயன்படுத்தி எழுதப்பட்ட முதல் நாவல்.
- டோங்கா என்ற நாட்டில் வாழைப்பழ உருவில் ஒரு தபால் தலை வெளியிட்டார்கள்.
- இந்தியாதான் உலகின் மிக அதிகமான தபால் ஆபீஸ்கள் கொண்ட நாடு. (எண்ணிக்கை 1,52,792)
- போயிங் 747 விமானத்தின் எரிபொருள் டாங்க்கின் கொள்ளளவு 57285 காலன்.

— எம்

● க. தியாகராஜன், குடந்தை

? முதல் நாள் பெரியார் பிறந்த நாள்விழாத் தலைமை; மறு நாள் காளி கோயில்களில் சிறப்பு வழிபாடு - வீரமணியால் எப்படி இதை ஜீரணிக்க முடிகிறது?

! 'ஜெ'யின் உருவிலே பெரியாரைக் காண்பதால் இருக்கலாம்.

● புளியரை கணேசன், சென்னை - 30

? ஒலிம்பிக் போட்டிகளில் நாம் ஒரேயொரு வெண்கலப் பதக்கத்துடன் திருப்தியடைய வேண்டியதுதானா...?

! நம்பிக்கை நட்சத்திரங்களைத் தேர்வு செய்து பாரபட்சம் பாராது சர்வதேச தரத்தில் பயிற்சி அளித்தால் போதும். பதக்கப் பட்டியலில் நம்


• சுயநல சுதந்திரம்!


• குறுக்கு வழிகாட்டி!

ஆட்களும் முன்னேற முடியும்.

● எம். குணசேகரன்,
வேலாயுதம்பாளையம்

? தனியார் துறையிலும் வேலை வாய்ப்புகளில், பிற்படுத்தப்பட்டோர் மற்றும் தலித்களுக்கு இட ஒதுக்கீடு வேண்டும் என்று டாக்டர் ராமதாஸ் கோருவது சரியா?

! நாடு குறுக்கு வழியில் நாசமடைய யோசனை இது. இந்தத் தலைவர்களை விட்டால், பிறப்பு விகிதத்தில்கூட ஒதுக்கீடு கொண்டுவர முடிவெடுப்பார்கள்!

# பெட்ரோல் விலையுயர்வால் வாகனங்கள் குறையவில்லையே?

• பார்வைக் கோளாறு!

● ஆர். வேணுகோபால்,
பெரியகுளம்.

? பெட்ரோல், டீசல் விலைகள் ஒரு பக்கம் ஏறிக் கொண்டே இருந்தாலும் கூட சாலையில் செல்லும் வாகனங்களின் எண்ணிக்கை குறையாமலே இருப்பது எதைக் காட்டுகிறது?

! வாகனங்கள் பெரும்பாலும் அரசுக்குச் சொந்தமானவை அல்லது கம்பெனிகளுக்கு. தனி நபர்களுக்குச் சொந்தமான வாகனங்களுக்குக் கூட பெட்ரோல் மற்றும் பராமரிப்புச் செலவை அவர்கள் பணிபுரியும் நிறுவனங்களே ஏற்கும். அதனால்தான் வாகனங்கள் எண்ணிக்கை குறையாமல் அதிகரிக்கிறது. அரசுக்கு ஆகும் அதிகச் செலவு, கூடுதல் வரி வடிவிலும் நிறுவனங்களுக்கு ஆகும் அதிகச் செலவு விலை உயர்வு வடிவிலும் கடைசியில் மக்களைத்தான் பாதிக்கும்.


• இன்சென்டிவ் அரசியல்!


• அளித்த விருதுகள்!

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை-9

? த.மா.காவின் கொள்கையே அக்கட்சிக்குக் குழி பறிக்கிறது என்று சொல்லலாமா?

! கொள்கை குழி பறிக்கவில்லை; கொள்கையைக் கைவிட்டார்களே... அதுதான்!

● கே. லக்ஷ்மணன், மதுரை-16. ☐

? வாஜ்பாய் அரசு பதவியேற்றதிலிருந்து முக்கியமான பொருட்களின் விலை உயர்வு தான் ஏற்பட்டுள்ளது. ஆனால் திடீரென டெலிபோன் கட்டண உயர்வு 1.10.2000 முதல் பதினோறு சதவிகிதத்திலிருந்து முப்பது சத விகிதம்வரை குறைக்கப்பட்டிருப்பது ஏன்? ராஜ தந்திரமா?

! விற்பனை வரியைக் குறைத்ததால் தமிழகத்தில் ஏற்றுமதி எக்கச்சக்கமாக அதிகரித்திருக்கிறது என்று முதல்வர் பேசியிருக்கிறார் பார்த்தீர்களா? அதுபோல்தான் இதுவும். எஸ்.டி.டி. கட்டணம் குறைக்கப்பட்டால் அதிகம்பேர் எஸ்.டி.டி. பயன்படுத்தி அதிக நேரம் பேச, வருவாய் கூடும் என்பது எதிர்பார்ப்பு. இதற்கு மேலும் உதவியாக தொலைத் தொடர்பு விஞ்ஞான முன்னேற்றம் அமைந்திருக்கிறது.

● பா. அச்சுதன், சேத்துப்பட்டு
(திருவண்ணாமலை மாவட்டம்)



• திருந்தும்...



• -- வழி பிறக்குமா?

? சமீபத்தில் உங்களை நெகிழ வைத்த சம்பவம்

! பா.ம.க.வினரால் தாக்கப்பட்ட பெரிய காட்டுப்பாளையம் தலித் மக்களுக்கு வில்லூப் பாளையம் வன்னியர் கிராம மக்கள் உதவியிருப்பது.

● எஸ். ரஜினிப்ரியன், ஈரோடு-1

? த.மா.கா. நடத்திய சிறை நிரப்பும் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்ற தொண்டர்களுக்குத் தங்க மோதிரம், தங்கக் காசுகள், வெட் கிரைண்டர் ஆகியவை பரிசாக அளிக்க மூப்பனார் முடிவு செய்தது பற்றி...?

! விலை பேச முடியாத அளவுக்கு உயர்ந்த தியாகமாயிருந்தால் ஊக்கப் பரிசுகள் தேவையில்லை. உத்வேகம் தானே வரும். போராட்டத்துக்கான காரணம் பலவீனமாயிருப்பதால் இப்படியெல்லாம் பெனிஃபிட்ஸ் அறிவிக்க வேண்டியிருக்கிறது!

● கே.வி. ராமன், சென்னை - 73

? வீரப்பன் பிடியிலிருந்து நாகப்பா தப்பியதால் ராஜ்குமாரின் விடுதலைக்குக் குந்தகம் விளையுமா?

! ஏற்கெனவே குந்தகம் விளைந்து விட்டதே! நாகப்பா தப்பித்து வந்தது தனிமனித சுதந்தரம் என்றாலும் அதில் நிறைந்திருப்பது வடிகட்டின சுயநலம்.

● ரேவதி சங்கர், சென்னை - 103

? நரசிம்மராவ், பூடாசிங் ஆகியோர் குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கப்பட்ட பிறகாவது நம் அரசியல் தலைவர்கள் திருந்து வதற்கு முயற்சி செய்வார்களா?

! அது மேல்கோர்ட்டுகளில் மேல் முறையீடுகள் துரிதமாக விசாரணைக்கு எடுக்கப்பட்டு கடும் தண்டனைகள் நிறைவேற்றப்படுவதைப் பொறுத்திருக்கிறது. நாலு அரசியல்வாதிகள் நாலு நாலு வருஷம் கம்பி எண்ணினால் போதும்; நாடு திருந்திவிடும்.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

? இசை மேதை எம்.எஸ்.ஸுக்குக் கிடைத்த சரஸ்வதி விருது...?

! விருதுகள் அவருக்குப் புதிதல்ல. நவராத்திரியையொட்டி பத்து நாட்களும் இளம் இசைக் கலைஞர்களை அழைத்து தமது இல்லத்தில் வெறும் தம்புரா சுருதியுடன் ஆத்மார்த்தமாகப் பாடச் சொல்லி அமர்ந்து கேட்டார் பாரத ரத்தினம். அத்தனை இளம் கலைஞர்களும் அவர் கையால் விருது பெற்றது போல் அல்லவா மகிழ்ந்திருப்பார்கள்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ஒலிம்பிக்கஸில் உங்கள் மனம் கவர்ந்த வீரர் / வீராங்கனை யாருங்க...?

! ஆறு நாட்களில், ஐந்து பதக்கங்களை வென்ற இளம் அமெரிக்க தடகள வீராங்கனை மரியன் ஜோன்ஸ். காதலர் பேரில் உள்ள 'போதை மருந்து' மாசு (அவரும் விளையாட்டு வீரர்) மனப்பாரமாக இருந்த போதும் ஜெயித்துவிட்டு சிரித்தபடி போஸ் கொடுத்திருக்கிறாரே! ●

☐ ரூ.50 பரிசு பெறுபவர் :
கே. லக்ஷ்மணன்
147ஏ, புத்து தோப்பு தெரு,
ஆறுபாளையம் கிராஸ்,
மதுரை - 16

* ரூ.25 பரிசு பெறுபவர் :
ஆர். வேணுகோபால்
அமர்ஜோதி பேப்பர் ஸ்டோர்ஸ்,
கடைவீதி, தென்கரை,
பெரியகுளம் - 625 601



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்க புத்திசாலித்தனம் வெளிப்படற நேரம் இது. எந்தக் காரியத்தையும் ஓடியாடி அலைஞ்சு திரிஞ்சு முடிச்சாதான் உங்களுக்குத் தூக்கமே வரும். இந்த வாரம் உங்க வேலைகள் எல்லாம் சுலபமா முடிய போகுது. வெளியூர்ல இருந்து நல்ல செய்தி வரப் போகுது. ஏற்றுமதி இறக்குமதி தொழில் பண்றவங்களுக்கு லாபம் இருக்கு. பணம் விஷயம் சாதாரணமாத்தான் இருக்கும். மனசுல சின்னச் சின்னக் குழப்பம் இருந்துட்டே இருக்கும். ரொம்பக் கவலைப் படாதீங்க. கொடுக்கல் வாங்கல்ல ஜாக்கிரதையா இருங்க.



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

இந்த வாரம் சின்னச் சின்னப் பிரச்னைகள் எட்டிப் பார்க்கும். முன்னெச்சரிக்கையா கவனமா செயல்பட்டீங்கன்னா பிரச்னையிலிருந்துத் தப்பிக்கலாம். புதிய முயற்சிகள் எதையும் இப்ப தொடங்காதீங்க. மனசுல குழப்பம் இருக்கும். வெளியூர் பயணத்தைத் தவிர்க்கறது நல்லது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு இது சோதனை நேரம். எந்தக் காரியத்தையும் ஒருமுறைக்குப் பலமுறை யோசிச்சு செயல்படுங்க. செலவு எகிறும். அலைச்சல் அதிகமா இருக்கும். உடலை கவனமா பாத்துக்குங்க.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

மனசுக்கு இனிமையான சம்பவங்கள் நடக்கும். முகத்துல திடீர்னு ஒரு புது அழகு வந்து ஒட்டிக்கொண்ட மாதிரி உணருவீங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வழக்கமான பலன் உண்டு. உங்க தன்னம்பிக்கை, துணிச்சல் எல்லாம் திடீர்னு கூடும். எந்தக் காரியத்தையும் இந்த வாரம் வெற்றிகரமா முடிக்கலாம். போட்டி பந்தயங்கள்ல உங்களுக்கு வெற்றி கிடைக்க வழி இருக்கு. புதுசா ஏதாவது சொத்து வாங்க வாய்ப்பிருக்கு. இதுவரை இருந்த நிலைமையை விட பொருளாதாரம் திருப்தியா இருக்கும். வெளிநாட்டுல இருந்து எதிர்பார்த்தபடி நல்ல தகவல் வரும். செலவு பிச்சிகிட்டு போகும். கவனமா செலவழிங்க. யாரையும் பகைச்சுக்க வேண்டாம்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்கத் திறமை வெளிப்படற நேரம். சந்தோஷமான நிகழ்ச்சிகள் நடக்கும். அரசியல்வாதிகள் தங்களோட லட்சியம், கொள்கைகளை இப்ப நிறைவேற்றிக் கொள்ளலாம். புதிய முயற்சிகள்ல இறங்கறதுக்கு இது சரியான தருணம். குடும்பத்துல விஷேசம் நடக்க ஏற்பாடு பண்ணு வாங்க. வீட்ல சின்னச் சின்னப் பிரச்னைகளுக்கெல்லாம் ஏற்பட்டு வந்த சலசலப்பு குறையும். பொறுப்புகள் இப்ப அதிகரிக்கும். சேல்ஸ்ல இருக்கறவங்க, ஏஜெண்டுகளுக்கெல்லாம் லாபம் குவியும்.





**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

இதுவரை போட்டிருந்தத் திட்டங்கள் இப்ப நிறைவேறும். உங்களோட புத்திசாலித்தனம் பலரோட புருவத்தை உயர வைக்கும். சின்ன டூர் அடிக்க வாய்ப்பிருக்கு. தயாரா இருங்க. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு இந்த வாரம் மஜாதான்.

## நடக்குமென்பார்,

பண விஷயத்துல பிரச்னை இருக்காது. சின்ன விஷயத்துக் கெல்லாம் திடீர் திடீர்னு டென்ஷன் ஆவீங்க. கோபம், பதற்றத்தை விட்டுடுங்க. நிதானத்தோட நடந்துகிட்டா பிரச்னைகள்ல இருந்து தப்பலாம். மாணவர்கள் படிப்புல கவனம் செலுத்த வேண்டிய நேரம். அலைச்சலை தவிர்க்கறது உடல் உபாதையிலிருந்து தப்பிக்க உதவும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் வீட்ல நல்ல காரியம் நடக்கச் சந்தர்ப்பம் ஏற்படும். பார்ட்டி, பங்ஷன்கள்ல கலந்துக்கற வாய்ப்பு இருக்கு. கொடுக்கல், வாங்கல்ல லாபம்தான். கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு மனசுல உற்சாகம் வர்ற மாதிரி சம்பவங்கள் நிகழும். எதிர்ப்பு இருக்காது. எதிரிகள் ஓடி போவாங்க. உடல் நலத்துல கவனம் வையுங்க. பேச்சில இனிமை கண்டிப்பா வேணும். கடுமையை விட்டுடுங்க. பண விஷயத்துல எச்சரிக்கை அவசியம். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி ஒண்ணு வரலாம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்களோட ஆசைகள், திட்டங்கள் நிறைவேறுகிற வாரம். புதுசா ட்ரெஸ், நகைகள் வாங்க வாய்ப்பிருக்கு. அதுவரை இருந்து வந்த எதிர்ப்புகள் இப்ப காணாம போயிடும். பொருளாதாரம் திருப்தியா இருக்கும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டு. பார்ட்டி, பங்ஷன்னு கத்தறதுக்கு சான்ஸ் இருக்கு. இராணுவம், சட்டம் ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு இப்ப நல்ல நேரம். அரசியல்வாதிகள் எதிர்பார்ட்டிகளிடம் நிறைய வசவுகளை வாங்க வேண்டியிருக்கும். கொஞ்சம் செலவு எகிறும். கவனமா பர்சைப் பார்த்துக்குங்க.

> **துலாம் ராசிக்காரரான பத்திரிகையாளர் அப்பணசாமியின் ஆசைகள், திட்டங்கள் இந்த வாரம் நிறைவேறுமாம்.**

**நடக்கும்!**

**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எதிர்ப்புகள் இருக்காது. எந்தக் காரியத்தையும் நீங்க நினைச்ச மாதிரியே இந்த வாரம் முடிப்பீங்க. சிலருக்குப் பாராட்டு, வரவேற்பு கூடும். உங்க செயல்பாட்டைப் பார்த்துட்டு அலுவலகங்களில் மதிப்பு, மரியாதை 'ஜில்'லுனு உயரும். வேலை இல்லாமல் நொந்து போயிருந்தவங்களுக்கு 'இன்டர்வியூ' கார்டு கதவைத் தட்டும். முக்கியமான பொறுப்புகள் வந்து சேரும். பெண்கள் மனசுக்கு சந்தோஷமான நிகழ்ச்சிகள்ல கலந்துக்குவாங்க. பொருளாதாரம் சம்மந்தப்பட்ட பிரச்னைகள்ல கவனமா இருங்க. சாப்பாட்டுல கட்டுப்பாடு அவசியம். கண்டபடி வயிற்றை நிரப்பி ஏதாவது நோயை வாங்கிட்டு வந்துடாதீங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

இந்த வாரம் உற்சாகமான நிகழ்வுகளைச் சந்திப்பீங்க. பண நடமாட்டம் வழக்கத்துக்கு மாறா இப்ப அதிகரிக்கும். இதுவரை இருந்த எதிர்ப்புகள் 'ஜீபூம்பா' மாதிரி காணாம போயிடும். அரசியல்வாதிகள் பாராட்டு மழைல நனையலாம். அரசு அலுவலகங்கள்ல வேலை பார்க்கறவங்களுக்கு மதிப்பு உயரும். சிலருக்குத் திடீர் பதவி உயர்வு வரலாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றமான வழி தெரியுது. அலைச்சல் அதிகரிக்கும். எதிலயும் அவசரப்படாதீங்க. நிதானம் அவசியம். வெளிநாட்டுல இருந்து, சந்தோஷத்துல குதிக்கற மாதிரி நல்ல செய்தி வரும்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க வீட்ல விஷேசம் நடக்க இப்ப வாய்ப்பிருக்கு. வேலை தேடி அலைஞ்சவங்களுக்கு இப்ப வேலை கிடைக்கற வாய்ப்பிருக்கு. அரசு அலுவலகங்கள்ல வேலைப் பார்க்கறவங்களுக்குப் பதவி உயர்வு வரலாம். வெளியூர் பயணத்தால் நன்மைகள் உண்டாகும். வியாபாரிகளுக்கு ஆதாயம் இருக்கு. எதிர்ப்புகள் இப்ப இருக்காது. பொருளாதாரப் பிரச்னை இருக்கும். கடன் வாங்க வேண்டி வரலாம். யார்ட்டயும் அதிகமா வாய் கொடுக்காதீங்க. பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு.

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும். ஜாலியா டூர் அடிக்கற வாய்ப்பு இருக்கு. புதுசா ட்ரெஸ், நகைகள் வாங்கலாம். வெளிநாட்டுல இருந்த நல்ல தகவல் ஒண்ணு வரப் போகுது. சின்னச் சின்னத் தடைகள் அப்பப்ப வந்து இம்சை பண்ணும். கவனமா கையாளுங்க. யார்ட்டயும் வெளிப்படையா பேசாதீங்க. வீண் அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது. வெளியூர் பயணம் போனா கவனம் முக்கியம். திருட்டுப் போக வாய்ப்பிருக்கு.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

இந்த வாரம் எப்போதும் இல்லாதமாதிரி தன்னம்பிக்கை பிறக்கும். எடுத்தக் காரியத்தை சுலபமா நிறைவேற்றுவீங்க. இதனால உங்க மேலதிகாரிங்ககிட்ட நல்ல பெயர் வாங்கலாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு மகிழ்ச்சியான வாரம். கூட்டுத் தொழில் பண்றவங்க தொழில்ல கவனம் செலுத்தறது நல்லது. குடும்பத்துல மகிழ்ச்சிக்குப் பஞ்சமிருக்காது. பார்ட்டி, கேளிக்கைன்னு சந்தோஷமான நிகழ்ச்சிகள் நடக்க வாய்ப்பிருக்கு. அலைச்சலைத் தவிர்க்கறது உடம்புக்கு நல்லது. பண வரவு திடீர்ன்னு கூடும். ●

**அக்டோபர் 11 முதல் 17 வரை**




பூவெல்லாம் கேட்டுப்பார், அப்பு என்று தன் கவிதைத் தனமான கதை சொல்லும் பாணியிலிருந்து விலகிப் போய்விட்ட வஸந்த், இந்த முறை ஒரு உணர்ச்சிகரமானக் கவிதையோடு திரும்பி வந்திருக்கிறார். மணவிலக்கிற்கு அப்பால், புதிய வாழ்க்கையைத் தொடங்க முடிகிறபோது, கணவன், மனைவி இருவரில் ஒருவரது மரணத்திற்குப் பிறகு மட்டும் அது ஏன் கூடாது என்ற கேள்வியைக் கதையாக்கி இருக்கிறார்.

தன்னைப் பாதிக் கல்யாணத்தில் விட்டு விட்டு, வெடிகுண்டு அப்புறப்படுத்த சென்னை வந்துவிடும் அர்ஜுனுக்கு எதுவும் ஆகிவிடக் கூடாதே என்று துடித்துக் கொண்டிருக்கும் ஜோதிகாவுக்கு, அர்ஜுன் போன் செய்து, வேலையை ராஜினாமா செய்துவிட்டதாகச் சொல்ல, சந்தோஷத்தில் கலர் கலரான உணர்ச்சிகளை முகத்தில் காட்டி ஜோதிகா ஃபஸ்ட் கிளாஸ் வாங்குகிறார் என்றால்...

பேச்சிலர் ரமேஷ் அரவிந்த், ஒரு அனாதைக் குழந்தையைத் தத்தெடுத்து வளர்க்கிறேன் எனும்போது உருகும் மீனா கண்கலங்க, 'மை கரையுது பாருங்க' என்று ரமேஷ் கமெண்ட்ரி கொடுக்க, 'ம்.. பரவாயில்ல' என்று மீனா தலையை ஒரு சொடுக்கு சொடுக்குகிற போது டிஸ்டிங்ஷன் வாங்கி விடுகிறார்!

"நீ கேட்டிருந்தாலாவது சரின்னு சொல்லியிருப்பா. அவசரப்பட்டு கெடுத்துட்டேன் இல்லே?" என்று குழந்தை மாதிரி அழும் அப்பா நாகேஷை அர்ஜுன் தேற்றுகிற காட்சி உணர்ச்சிப் பிழம்பு. பக்கத்து வீட்டு சேட்வாலா, பலாத்காரம் செய்ய வந்தபிறகே, மீனாவுக்குத் தனிமை பயம் வருவதாகச் சொல்வது நிறையவே செயற்கை. ஆனாலும் பையனுக்கு முடி வெட்ட, ஆண்கள் சலூனுக்குள் ஒண்டியபடி அவர் நிற்கிற போது, தனிமையின் இயலாமை பளார் என்று முகத்தில் அறைகிறது.

மறுமணத்திற்குச் சம்மதம் சொல்ல முடிவெடுக்கும் மீனா, நாளை ரயில் நிலையத்திற்கு வரும்படி அர்ஜுனிடம் சொல்லிவிட்டு சந்தோஷமாய் தன் வீட்டிற்குள் நுழைகிறபோது, பார்வையாளர்கள் கொஞ்சமும் எதிர்பார்க்காத யாதார்த்த திருப்பம், மாமியார் உருவில், திமர் திகைப்பை ஏற்படுத்துகிறது.

எமோஷனல் திரைக் கதையில் நகைச் சுவையைத் தவிர்த்திருப்பது புத்திசாலித்தனம். வஸந்த் எதிர்பார்க்கும் விஷுவல் ப்யூட்டிக்கு ஈடுகொடுத்திருக்கும் வினோத்தின் கேமராவிற்குப் பாஸ்மார்க் கொடுத்து விடலாம். படத்தின் விறுவிறுப்பான ஓட்டத்திற்கு ஸ்ரீகர் பிரசாத்தின் துள்ளலான படத் தொகுப்பு பெரிய பலம். ஆனால் வஸந்துக்கு அடுத்து ஏ.ஆர். ரஹ்மானின் ஆட்சிதான் படம் முழுக்க.

'அய்யோ பத்திகிச்சு' என்று ரம்யா கிருஷ்ணனை ஆட விடுகிற போதுதான் சர்வைவலுக்குள் சிக்கிக் கொள்ளும் பரிதாப இயக்குனரைப் பார்க்க நேர்ந்து விடுகிறது. ஆனபோதும் ரிதம் ஒரு வஸந்த் படம்!

- விஷுவல்தாசன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

## Jyothy Laboratories Ltd.

# "உஜாலாவின் உன்னத வெண்மை விஞ்ஞான ரீதியிலான சாதனை."




ஜோதி லேபின் ஆய்வுக் கூடத்தில் தொடர்ந்து நன்கு சோதிக்கப்பட்டு வெற்றிகரமாக நிரூபிக்கப்பட்ட உஜாலாவின் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் (I.W.S.)™ இது தண்ணீரில் உடனடியாகக் கரைவதோடு, துணிகளின் நுட்பமான நூலிழைகளினுள் ஆழ்ந்து ஊடுருவிவெண்மையின் வெளிச்சத்தை துணிகளில் உடனடியாய் வெளிக்கொணர்கிறது. துணிகள் மீண்டும் துவைக்கும்போது அழுக்குடன் முழுவதும் வெளியே தள்ளப்பட்டு விடுகிறது. நாட்கள் பல ஆனாலும் துணிகளின் இயல்பான வண்ணம் மாறாமல் புதிது போலவே பாதுகாக்கிறது. ஸ்கின் இரிட்டேஷன்-ஓரல் டாக்சிசிடி சோதனைகளில் பாதுகாப்பானது என ஆதாரபூர்வமாக கண்டறியப்பட்ட தயாரிப்பு உஜாலா ஒன்றே.

1983 முதல் அனேக கோடி உள்நாடு-வெளிநாடு வாடிக்கையாளர்களுக்கு முழுதிருப்தியை உஜாலா வழங்கிக் கொண்டிருக்கிறது. பாரத நாடெங்கும் பல மாநிலங்களில் உள்ள ஜோதி லேபின் விஞ்ஞான தொழில் நுட்ப மேன்மை மூலம் கடும் தரக்கட்டுப்பாடு முறைகளால் தயாரிக்கப்பட்டு ஒவ்வொரு உஜாலாவும் உங்களை அடைகிறது.

விஞ்ஞான ஆதாரமற்ற முறையில், இரசாயன நிறுவனங்கள் தயாரிக்கும், நூலிழைகளை பலவீனப்படுத்தும், வண்ணம் குறைக்கும் மூலப்பொருட்கள் ஏதும் இதில் இல்லை. தரங்குறைந்த, கலப்பட இரசாயனக் கலவைகள் உங்களின் துணிகளுக்கு சேதம் ஏற்படுத்த இடம் அளிக்காதீர்கள்.

உஜாலா என கேட்டு வாங்கும் போது விஞ்ஞானபூர்வமற்ற ஏதேனும் ஒரு போலி தயாரிப்பை நீங்கள் பெறவில்லை என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்.




வெண்மையின் புதிய நிறம்

A product of Jyothy Laboratories Ltd.